அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி



திருஅருட்பிரகாச வள்ளலார் அருளிய

# திருஅருட்பா

## உரைநடைப்பகுதி

திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையம், வடலூர்.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி



திருஅருட்பிரகாச வள்ளலார்
அருளிய

# திருஅருட்பா
# உரைநடைப்பகுதி

வெளியீடு:
திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையம்
வடலூர்-607303
கடலூர் மாவட்டம்
தமிழ்நாடு.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருஅருட்பா உரைநடைப் பகுதி |
| முதற் பதிப்பு | : | 05.10.2000<br>வள்ளற்பெருமானார் அவதார தினம்<br>3000 பிரதிகள் |
| இரண்டாம் பதிப்பு | : | 05.10.2001<br>வள்ளற்பெருமானார் அவதார தினம்<br>3000 பிரதிகள் |
| திருத்திய3-ம்பதிப்பு | : | 05.10.2002<br>வள்ளற்பெருமானார் அவதார தினம்<br>5000 பிரதிகள் |
| நான்காம் பதிப்பு | : | 24.05.2004<br>138-ஆம் ஆண்டு<br>தருமச்சாலை தோற்றுவித்த நாள் விழா<br>5000 பிரதிகள் |
| ஐந்தாம் பதிப்பு | : | 05.10.2006<br>வள்ளற்பெருமானார் அவதார தினம்<br>5000 பிரதிகள் |
| ஆறாம் பதிப்பு | : | 23.01.2008<br>137-வது தைப்பூச ஜோதி தரிசனப் பெருவிழா<br>5000 பிரதிகள் |
| ஏழாம் பதிப்பு | : | 30.01.2010<br>139-வது தைப்பூச ஜோதி தரிசனப் பெருவிழா<br>5000 பிரதிகள் |
| பதிப்பு உரிமை | : | **திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம்,**<br>வடலூர் - 607 303,<br>கடலூர் மாவட்டம்.<br>போன் : 04142 - 259250 |
| பக்கங்கள் | : | 624 |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| பேப்பர் தரம் | : | சேஷசாயி 13.7 K.G. |

**விலை ரூ. 55**

அச்சிட்டோர் : **பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ்,**

கணபதி நகர், மயிலாடுதுறை

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திருஅருட்பா உரைநடைப் பகுதி

## பொருளடக்கம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# முன்னுரை

அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங் கருணையாகத் திகழ்கின்ற திருஅருட்பிரகாச வள்ளற் பெருமானார்-அருளிய திருப்பாடல்கள் ஆறு திருமுறைகளாக வகுக்கப்பெற்று வள்ளலார் தெய்வ நிலையத்தால் வெளியிடப் பெற்றுள்ளன.

ஆன்ம நேயமிக்க அருட்பாடல்களைத் தவிர வள்ளற் பெருமானார் அருளிய உரைநடைப் பகுதிகள் பலஉள. அவற்றை 1) உரை நடை நூல்கள் 2) வியாக்கியானங்கள் 3) மருத்துவக் குறிப்புகள் 4) உபதேசங்கள் 5) திருமுகங்கள் 6) அழைப்புகள், அறிவிப்புகள், கட்டளைகள் 7) விண்ணப்பங்கள் என ஏழு வகையாகப் பிரித்து "திருஅருட்பா உரைநடைப் பகுதி" என்ற தலைப்பில் வெளியிடுகின்றோம்.

இந்தப் பதிப்பு, பிருங்கி மாநகரம், இராமசாமி பதிப்பு (1896) சமரச பஜனை கந்தசாமி பதிப்பு (1924) திருஅருட்பாப் பதிப்புச் செம்மல் சென்னை ஆ. பாலகிருஷ்ணர் பதிப்பு (1931) சன்மார்க்க அறிஞர் ஊரன் அடிகளார் பதிப்பு (1978) ஆகிய பதிப்புகளை அடிப்படையாகக் கொண்டு வள்ளற் பெருமானார் அருளிய உரைநடைப்பகுதிகள் முழுவதையும் செம்மையாக வெளியிடுகின்றோம்.

ஈன்ற நற்றாயினும் இனிய பெருந் தயவுடைய வள்ளற் பெருமானாரின் திருவருளை, ஏழை எளிய மக்களும் அடைய வேண்டும் என்ற உயரிய நோக்கத்தில் ரூ.150 விலையுள்ள

இந்நூலை ரூ. 55-க்கு மலிவு விலைப் பதிப்பாக வெளியிடுகின்றோம்.

## திருஅருட்பா உரைநடைப் பகுதியின் சிறப்புகள்

உத்தமர் வள்ளற் பெருமானார், திருஅருட்பாவைப் பற்றி!

"வான் கொடுத்த மணிமன்றில் திருநடனம் புரியும்
வள்ளல் எலாம் வல்லவர் நன் மலர் எடுத்தென் உளத்தே
தான் கொடுக்க நான் வாங்கித் தொடுக்கின்றேன்"

என்று அருளி உள்ளார்கள்.

திருஅருட்பா நமக்கு உயிர்– அந்த உயிருக்கு உடலாக இருப்பது - திருஅருட்பா உரைநடைப் பகுதியாகும்.

ஊன் பெறும் "உயிர் வளர்கலை இரகசியம்" திருஅருட்பா உரைநடைப் பகுதியில் உள்ளது.

எளிய அதேசமயம் இனிய முறையில், திருஅருட்பாவில் வரும் நுட்பமான சொற்களுக்குரிய விளக்கத்தையும், சன்மார்க்க விளக்கத்தையும் திருஅருட்பா உரைநடைப் பகுதியில் கற்கலாம்.

ஏறா நிலைமிசை ஏறுவதற்குரிய வழிவகைகள், "சன்மார்க்க விண்ணப்பங்களில்" உள்ளன. மேலும் சொற்றொடர்களும் வாக்கியங்களும் அற்புதமானவை, அருள் ஆற்றல் உடையவை. அவையோ வளரும் தமிழுக்கு வழி காட்டியாக அமைந்துள்ளன. சொல் நயம், பொருள் நயம், இலக்கிய நயம், மிகுந்து காணப்படுகின்றன. இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஆன்ம நேயமும் அருள் நயமும் பொன்னொளி வீசுவதைத் திருஅருட்பா உரைநடைப்பகுதியில் காணலாம்: கற்றுக் களிக்கலாம்.

**ஐ**வகைத் தொழில்களையும் அடைய சன்மார்க்கம் ஒன்றுதான் வழி. அந்த சன்மார்க்க நெறியை, உள்ளங்கை நெல்லிக்கனி போல், ஜீவகாருண்ய ஒழுக்கத்தில் கற்கலாம், களிப்படையலாம்.

**ஒ**ப்பு உயர்வற்ற முறையில் இதுவரையில் யாரும் சொல்லாத வகையில் வள்ளற் பெருமானார்.

"புனைந்துரையேன், பொய்ப்புகலேன், சத்தியம் சொல்கின்றேன்.
ஆசை உண்டேல்வம்மின்"

என அருளி, நம்மை அழைத்து அருள் ஆசையைத் தேனமுதாய் "**பேருபதேசப்**" பகுதியில் கூட்டுகின்றார்கள்.

**ஓ**தாமல் சன்மார்க்க நெறியை முற்றும் உணர்ந்த, வள்ளற் பெருமானார் அருளி உரைநடை நூல்களான மனுமுறைகண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் ஆகிய இரு நூல்களும், அன்னை அருந்தமிழ் மொழியின் இரு கண்களாகத் திகழ்ந்து அருள் ஒளி வீசி சன்மார்க்க உலகை உருவாக்குகின்றன.

**ஔ**வியம்தீர் உலகத்து அறிஞர் எல்லாம். கண்டு உவக்க சாகக் கல்வியையும் உரைநடைப் பகுதியில் வள்ளற் பெருமானார் வெளிபட அருளி உள்ளார்கள்.

**அஃது** ஓர் சன்மார்க்க அருள் கலைக் களஞ்சியமாகும். அதனைக் கற்று அதன் வழி நிற்க, அருட்பெருஞ்ஜோதியின் அன்பும் அறிவும் உடனாக விளங்கும்.

## நன்றி! நன்றி!!

இந்நூலினை வெளியிட அனுமதி வழங்கிய இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை சென்னை ஆணையர் திருமிகு. **ப.ரா. சம்பத்** I.A.S. அவர்களுக்கும், சிறப்புடன் வெளிவர ஆலோசனை வழங்கிய கூடுதல் ஆணையர் திருமிகு. **தி. ஜெயராமன்** B.A.,B.L. அவர்களுக்கும், விழுப்புரம் இணை ஆணையர் திருமதி. **ந. திருமகள்** B.Sc.,M.L., அவர்களுக்கும் அன்பான நன்றியையும் வணக்கத்தையும் தெரிவிக்கின்றோம்.

சென்னை தலைமையிடத்து இணை ஆணையர் திருமிகு. **இரா. சுப்பிரமணியன்** B.A., B.L. அவர்களுக்கும் அன்பான நன்றியையும் வணக்கத்தையும் தெரிவிக்கின்றோம்.

இவ்வெளியீடு அச்சிடுவதற்கு நன்கொடை வழங்கிய புண்ணியர்கள் அனைவருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

சிறந்தமுறையில் அச்சிட்டு தந்த மயிலாடுதுறை பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. மா. அருணாசலம் அவர்களுக்கு அன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பதிப்புப் பணியாற்றிய வள்ளலார் தெய்வ நிலைய கணக்கர் **ப. ஞானப்பிரகாசம்** B.Com., அவர்களுக்கும் அன்பான நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

திருஅருட்பா வெளியீட்டுத் திருப்பணி என்னும் அரிய அற்புதப் பணியைச் செய்ய எங்களுக்கு அருள்புரிந்த வள்ளற்பெருமானார்க்கு அனந்தம் கோடி வந்தனம்! வந்தனம்!

**மு. இராமலிங்கம்**
தலைவர், அறங்காவலர்குழு

**க. நாகராஜன்** M.A.,B.Ed.,
செயல் அலுவலர்

அறங்காவலர்கள்

மு. விஜயகுமார்
து. இராமகிருஷ்ணன்
சி. கனகலட்சுமி
ம.வே. வேல்ராமலிங்கம், M.A.,B.L.,

**திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம்,**
வடலூர்-607 303, கடலூர் மாவட்டம்.



அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி



உபதேசக் குறிப்புகள்

# பொருளடக்கம்

# விளக்கக்குறிப்புகள்

**1. உரைநடைநூல்கள் இரண்டு**

### 1. மனு முறைகண்ட வாசகம்

*சென்னை சாஸ்திர விளக்க சங்கத்தார் எழுதும்படி வேண்ட, பெருமானார், சென்னையில் உறைந்த இளம் போதில், மனுச்சோழர் முறை செய்த வரலாற்றைக் கூறுவதாக அமைந்த பெரிய புராணத்திலுள்ள மனு நீதி கண்ட புராணத்தை முதன் நூலாகக் கொண்டு இந்நூலை எழுதியருளினார். மேற்படி சங்கத்தாரால் 1854 ஆனந்த வருடம் ஜீன் மாதம் அச்சிடப் பெற்றது.*

### 2. ஜீவகாருண்ய ஒழுக்கம்

*ஜீவகாருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு என்றும் அற்றார் அழி பசி தீர்த்தல், புலால் மறுத்தல் இவ்விரண்டையும் வற்புறுத்தி இந்நூலை எழுதியருளினார்கள். 23-5-1867 பிரபவ வருடம் வைகாசி மாதம் 11 வியாழக்கிழமையன்று வடலூரில் நிகழ்ந்த தருமச்சாலைத் தொடக்க விழாவில் இந்நூல் எழுதப் பெற்றிருந்த வரையிற் படித்து விளக்கப் பெற்றது. ஜீவகாருண்ய ஒழுக்கம் மூன்று பிரிவுகளாக உள்ளது. மூன்றாவது பிரிவு முற்றுப் பெறவில்லை. "பெருமானார் ஜீவகாருண்ய ஒழுக்கத்தை மிக விரிவாக ஏழுபிரிவில் எழுதி உபதேசித்தாகக் கேள்வி. மற்ற பிரிவுகள் கிடைக்கவில்லை.*

**2 வியாக்கியானங்கள் ஆறு.**

### 1. ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தி

*ஒழிவிலொடுக்கம் காழிக் கண்ணுடைய வள்ளலாரால் அருளப் பெற்ற சிறந்த ஞானநூல். அதற்கு உரை செய்தவர் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள். அதனை முதன் முதலிற் பதிப்பித்தவர் வள்ளற்பெருமானார். இந்நூலின் சிறப்புப் பாயிரச் செய்யுளுக்கு ஒரு விருத்தியுரையும், சிதம்பர சுவாமிகளின் உரையிற் காணும் அருஞ்சொற்கள் சிலவற்றிற்குப் பொருளும், நூலினுள் ஆங்காங்கே சில*

அடிக்குறிப்புகளும், நூலிறுதியில் அமைத்துக்கொள்ளல் என்ற தலைப்பிற் சில அடிக்குறிப்புகளும் எழுதி 1851 இல் ஒழுவிலொடுக்கத்தைச் சிதம்பர சுவாமிகள் உரையுடன் பெருமானார் பதிப்பித்தருளினார்கள்.

2. தொண்டமண்டல சதகம்-நூற்பெயர் இலக்கணம் வழிபடு கடவுள் வணக்கப்பாட்டுரை :

வள்ளற்பெருமானார் பதிப்பித்த நூல்களுள் இரண்டாவது தொண்டமண்டல சதகம். நூலின் பெயராகிய தொண்டமண்டல சதகம் என்பதற்கு இலக்கணமும் நூலின் கடவுள் வாழ்த்துப் பாடலுக்கு உரையும் எழுதித் தொண்ட மண்டல சதகத்தை வள்ளற்பெருமானார் 1855-ல் பதிப்பித்தார். தொண்டைமண்டலமா (அ) தொண்ட மண்டலமா என்பது பற்றி ஒரு வாதம் அக்காலத்தில் சென்னையிலிருந்த புலவர் சிலரிடையே எழுந்தது. பெருமானார் இரு கூற்றையும் ஆராய்ந்து இலக்கணம், இலக்கியம், வரலாறு, வழக்கு, கல்வெட்டு ஆகிய சான்றுகளுடன் நூற்பெயரிலக்கணத்தை வரைந்து தொண்ட மண்டலம் என்பதே சரியென்று நிறுவினார்கள்.

3.உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப்பொருள் விளக்கம் என்ற ஒரு நூலை வள்ளற்பெருமானார் செய்யக் கருதியிருந்தா ரென்பது இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த இரு திருமுகங்களால் அறியப்பெறுகிறது. திருவருட்பாப் பாட லொன்றில் மூன்று மெய்ம்மொழிப் பொருள்கள் குறிக்கப் பெறுகின்றன.

திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உள்ளத்தில் நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும் - திருவருட்பா 3527

இம் மூன்று மெய்ம்மொழி பொருள்களையும் விளக்கியே வள்ளற்பெருமானார் 'மெய்ம்மொழிப் பொருள் விளக்கத்தை எழுதத் திட்டமிட்டிருக்கக் கூடும். முதல் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம் எழுதப் பெற்றது. உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப்பொருள் விளக்கம் " திருவருட்பா உட்கிடை" என்ற தலைப்புடன் ஆறாந்திருமுறை முதற் பதிப்பில் முதன் முதலாக அச்சாயிற்று.

4. தமிழ் என்னும் சொல்லுக்கிட்ட உரை

வள்ளற்பெருமானார் சென்னையிலுறைந்த காலத்தில் சங்கராசாரிய சுவாமிகளுடன் அளவளாவ நேரிட்ட போது அச்சுவாமிகள் சமஸ்கிருதமே "மாத்ரு பாஷை" எனக் கூறிச் சமஸ்கிருதத்தைச் சிறப்பித்துப் பேசினார்கள். அப்படியாயின் "தமிழ் பித்ரு பாஷை" எனப் பெருமானார் அருளினார். தமிழின் ஞானச் சிறப்பை விளக்கி பெருமானார் செய்த உரை "உண்மை விளக்கம் அல்லது சித்தாந்த தீபிகை" என்னும் திங்களிதழில் 21 - 8 - 1877-ல் "தமிழ்-ஸ்ரீ ராமலிங்க சுவாமிகளால் எழுதப்பட்டது" என்னும் தலைப்போடு முதன் முதலாக அச்சாயிற்று.

5. பொன்வண்ணத் தந்தாதி 22-ம் செய்யுள் உரை

'இதற்குக் கிடைத்த பிரதி ஒன்றில் இவ்வியாக்கியானத்தின் தலைப்பில் "சைவ சித்தாந்தப் பெருநெறியோரால் வழங்கும் திருமுறை பன்னிரண்டனுள் பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களி லொன்றாகிய பொன்வண்ணத் தந்தாதி 22-ம் பாசுரத்தி? திருவருட் பிரகாச வள்ளலா ரென்னும் சிதம்பரம் இராமலிங்கபிள்ளை அவர்களால் வரைந்துள்ள வியாக்கியானம்" என்றெழுதியிருக்கிறது' என்ற அடிக்குறிப்புடன் இதனை ஆ.பா. முதன் முதலாகப் பதிப்பித்திருக்கிறார்.

6. வேதாந்த தேசிகர் குறட்பா ஒன்றன் உரை

"இஃது உபதேசம் விரும்பிய ஓர் வடகலை வைஷ்ணவர்க்குப் பெருமானார் கூறிய வழி வந்ததாகத் தெரிகிறது. ச.மு. கந்தசாமி

பிள்ளையின் திருவருட்பாப் பதிப்பில் இது முதன் முதல் அச்சாகியுள்ளது.

**3. மருத்துவ குறிப்புகள்**

மூலிகை குண அட்டவணை, சஞ்சீவி மூலிகைகள், மருத்துவக்குறிப்புகள்:- வள்ளற்பெருமானாரின் உபதேசங் களைக் கேட்ட அன்பர்கள் எழுதிவைத்துள்ள குறிப்புக்களே ஆதாரமாகும்.

**4. உபதேசங்கள்**

நித்திய கரும விதி : உலகியல் வாழ்வில் மனிதன் வாழவழி காட்டும் வகையில் சாதாரணவிதி, பொதுவிதி, சிறப்புவிதி, என மூன்று விதிகளை எழுதினார்கள். திருவருட்பாப் பதிப்பில் முதன் முதலாகச் சேர்க்கப் பெற்றது பிருங்கிமாநகரம் இராமசாமி பதிப்பிலாகும்.

உபதேசக் குறிப்புகள், சுப்பிரமணியம் , அருள்நெறி, திருவருண்மெய்ம்மொழி: வள்ளற்பெருமானாரின் உபதேசங் களைக் கேட்ட அன்பர்கள் எழுதிவைத்த குறிப்புகள். இப்போது வழங்குமளவு முழுமையாக வெளிவந்தது ஆ.பா. பதிப்பிலேயாகும்.

பேருபதேசம் : சித்திவளாகத் திருமாளிகையில் 22-10-1873-ல் முதன் முதலாகச் சன்மார்க்கக் கொடியைக் கட்டி வள்ளற்பெருமானார் செய்த உபதேசம். பெருமானாரின் முடிந்த முடிவான கொள்கைகள் கருத்துகள் பலவற்றை இதனுட் காணலாம்.

**5. திருமுகங்கள் [கடிதங்கள்]**

இளமையில் சென்னையில் உறைந்த வள்ளற் பெருமானார் தம்முப்பத்தைந்தாம்அகவையில் 1858-ல் சென்னை வாழ்வை நீத்துச் சிதம்பரம் பக்கம் வந்தார். அன்று முதல், மேட்டுக்குப்பம் சென்ற 1870 வரை அதாவது கருங்குழியிலும் வடலூரிலும் உறைந்த காலங்களில் பெருமானார் அன்பர் சிலருக்குத் திருமுகங்கள்

வரைந்தார்கள். பெருமானார் எழுதியருளிய கடிதங்கள் பெரும்பாலும் டெம்மி அளவு நான்கு பக்கங்கள் உள்ள கடிதத் தாள்களில் (லட்டர் பேப்பரில்) எழுதப்பெற்றவை. சில கடிதங்கள் சற்றுச் சிறிய அளவுள்ள கடிதத்தாள்கள். நான்கு பக்கங்களில் மூன்று பக்கம் கடிதம். நான்காம் பக்கம் முகவரி, தபால் தலை முத்திரைகள், கடிதங்களையே மடித்து அதன்மேல் முகவரி எழுதித் தபாலில் சேர்க்கப்பெற்றுள்ளன. உறையில் (கவரில்) வைத்து அனுப்பும் வழக்கம் பிற்காலத்திலேயே ஏற்பட்டது. தபாலில் அனுப்பிய எல்லாக் கடிதங்களும் அரை அணா தபால் தலை (Half Anna Postage Stamp) ஒட்டியே அனுப்பப்பெற்றுள்ளன. நான்காம் பக்கம் முகவரி எழுதி, தபால் தலை ஒட்டப்பெறாத சில கடிதங்கள் நேரில் அன்பர் மூலம் அனுப்பப்பெற்றவை.

1.இறுக்கம் இரத்தின முதலியாருக்கு வரைந்தவை: இறுக்கம் இரத்தின முதலியாருக்கு வரைந்த 38 திருமுகங்களுக்கும் பெருமானார் கைப்பட எழுதியருளிய மூலங்களே ஆதாரமாகும்.

2. புதுவை வேலு முதலியாருக்கு வரைந்தவை: ஏழு திருமுகங்கள் ஆ.பா பதிப்பில் முதன் முதலாக வெளியாயின. பெருமானார் திருக்கரத்தா லெழுதிய மூலங்களே ஆதாரமாகும்.

3.மற்றைய அன்பர்களுக்கு வரைந்தவை: திருநறுங் குன்றம் ராமசாமி நயினார், பொன்னுசாமி பிள்ளை, ஆடூர் சபாபதி சிவாச்சாரியர் ஆகிய மூவருக்கு வரைந்த முதல் மூன்று திருமுகங்களும் பெருமானார் கைப்பட எழுதப் பெற்ற மூலங்களே ஆதாரமாகும்.

இலக்கண நுண்மாண் இயல் என்னும் நான்காம் திருமுகத்தின் வரலாறு: கருங்குழியில் வள்ளற்பெருமானார் உறைந்த வீட்டிலிருந்த புருஷோத்தம ரெட்டியார் ஒரு சமயம் வீட்டில் கோபித்துக் கொண்டு வெளியேறிவிட்டார். அவர் மதுரைக்குச் சென்று திருஞானசம்பந்தர் மடத்தில் திருச்சிற்றம்பல

ஞானிகளுடன் இருப்பதாகக் கேள்வியுற்ற குடும்பத்தினர் மதுரை மடத்திற்குக் கடிதமொன்றெழுதி அவரை வருவித்து தவுமாறு பெருமானாரை வேண்டினர். பெருமானாரும் மடத்துச் சுவாமிகளுக்கு ஒரு திருமுகம் அனுப்பினார். அத்திருமுகத்தை மடத்திலிருந்த சிலர் பார்க்க நேரிட்டது. தேவி பட்டினம் முத்துசாமிப் பிள்ளை என்பவர் அப்போது அங்கிருந்தார். பெருமானாரின் திருமுகத்தைப் பார்த்த அவர், 'வள்ளலாரைப் பெரிய வித்துவான் என்று சொல்கின்றார்களே, அவருடைய படிப்பு இலக்கணமில்லாப் படிப்பு' என்றார். திருச்சிற்றம்பல ஞானிகள் அதனைக் கேட்டு வருந்தியவராய், வள்ளற்பெருமானார் விவகரிக்குங் காலத்தில் சிதறிய இலக்கணத்தில் கோடியிலொரு கூறே இவ்வுலகில் வழங்குகின்றது என்றார். அப்படியாயின் இலக்கணச் சிறப்புடன் வள்ளலாரிடமிருந்து ஒரு கடிதம் வருவித்து அனைவருக்கும் காட்டுமாறு மடத்துச் சுவாமிகளிடம் கூறினார். ஞானிகள் பெருமானாருக்கு ஒரு கடிதமெழுதி, அவ்விடத்திய செய்திகளை இலக்கண வகையால் தனக்குத் தெரிவிக்க வேண்டுமென விண்ணப்பித்தார். தொழுவூர் வேலாயுத முதலியாரும் ச. ஆறுமுக முதலியாரும் குடியிருந்த விட்டின் முகப்பில் பெருமானார் இருந்தபோது அந்தக் கடிதம் வந்தது. கடிதத்தைக் கண்ட பெருமானார் 'பிச்' என்று சொல்லி எறிந்து விட்டார். உடனிருந்த தொழுவூர் வேலாயுத முதலியாரும் மற்ற அன்பர்களும் இலக்கணப் புலமையுடன் ஒரு திருமுகம் எழுதியனுப்ப வேண்டுமென்று வற்புறுத்தினர். பெருமானாரும் மறுக்க மாட்டாது இரண்டொரு வரிகள் மட்டும் எழுதி வேலாயுதனாரிடம் கொடுத்துக் கடிதத்தை முடித்தனுப்ப கட்டளையிட்டார். அவ்வாறே வேலாயுதனார் இவ்விலக்கணத் திருமுகத்தை எழுதியனுப்பினார்.

இலக்கணத் திருமுகத்தைப் பெற்ற திருச்சிற்றம்பல ஞானிகள் மடத்திலுள்ள அனைவருக்கும் காட்டினார். அவதானியார் முத்துசாமிப் பிள்ளைக்குப் பொருள்விளங்காததால் "வேணுமென்றே ஒரு வித்வான் பூட்டுப்போட்டால் அந்த

வித்வான்தான் அதைத்திறக்க வேண்டும்" என்றார்.

தகரவசிச் கூந்தலர் காமாதி முந்நீர் தாழும்
தகரவரி நாலைந்து சாடும் - தகரவரி
மூவொற்றியூர் பொருளை மூன்றுமங்கை யேந்துமொரு
சேவொற்றி யூரானைச் செப்பு.

என்ற வெண்பாவை இயற்றி அனுப்பினார். இதற்கு அவதானியார் கருதிய உரையையும் அவருக்கு விளங்காத வேறு ஒருவிசேட உரையையும் பெருமானார் செய்து விடுத்தார். அவற்றைக் கண்ட அவதானியார் செருக் கொழிந்தவராகி வடலூருக்கு வந்து தெருக்கோடியிலேயே வண்டியை விட்டிறங்கி வீதியில் வீழ்ந்து வணங்கிக் கொண்டே வந்து பெருமானாரைக் கண்டு பணிந்து 'வித்வான் என மதித்திருந்தேன், பரிபூரணஞானி, என்று உணர்ந்திலேன், மன்னிக்க வேண்டும், என வேண்டினார். மேலும் பெருமானாரின் மீது தோத்திரமாக ஒரு பாடலையும் பாடிப் பணிந்தார். அப்பாடல் கிடைக்கவில்லை- இவ்வரலாறு ச.மு. கந்தசாமிப் பிள்ளையவர்கள் பதிப்பினால் அறியப்படுகிறது.

**6.அழைப்புகள், அறிவிப்புகள், கட்டளைகள்**

அழைப்புகளும் அறிவிப்புகளும் கட்டளைகளுமாகக் கிடைத்துள்ளவை 18. இவை பெருமானார் வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும் எழுந்தருளியிருந்த காலத்தில் அருளப் பெற்றவை. பெருமானார் நிறுவியருளிய சமரச சுத்த சன்மார்க்கச் சங்கம், சத்திய தருமச் சாலை, சத்திய ஞான சபை, சித்திவளாகம் ஆகிய நான்கு சன்மார்க்க நிலையங்களைக் குறித்தும். நிறுவத்திட்டமிட்டிருந்த மற்றும் சில நிலையங்களைக் குறித்தும் இவை அருளப் பெற்றனவாகலின், நிலையங்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் கொள்கை விளக்கங்கள் பற்பல இவற்றால் தெளிவாக அறியப் பெறுகின்றன.

7. விண்ணப்பங்கள்

சன்மார்க்க விண்ணப்பங்கள் நான்கும் ஆறாந் திருமுறை முதற் பதிப்பில் முதன் முதலில் அச்சாயின. "பெருமானாரது தெய்வத் திருக்கரத்தால் எழுதிய மூலமே ஆதாரமாகும். விண்ணப்பத்தின் தலைப்பு பெருமானாரே இட்டுள்ளார்கள்.

உபதேசங்கள்: அனுஷ்டான விதியும், கணபதி பூஜை விதியும் இறுக்கம் இரத்தின முதலியாருக்கு உபதேசித்தவை. செவ்வாய்க்கிழமை விரதம்முறை சென்னை ராயல் ஹோட்டல் புதுவை வேலு முதலியாருக்கு உபதேசித்தது.

இப்பதிப்பைப் பற்றிய சில குறிப்புகள்

ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தியிலும், மெய்ம்மொழிப் பொருள் விளக்கத்திலும், ஏனைய சில இடங்களிலும் கடினசந்திகள் பிரிக்கப் பெற்றுள்ளன. ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தியில், அருஞ்சொற்பொருள்கள், அடிக்குறிப் புகள் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் எண்களை இக்காலத்திற் பலர் அறியார். ஆதலின் அவை இப்பதிப்பில் அரபி எண்களாக அச்சிடப் பெற்றுள்ளன.

திருமுகங்களின் தலைப்பிற் கொடுக்கப் பெற்றுள்ள திருமுகப் பெயர்களும் ஆங்கிலத் தேதியும் பதிப்பாசிரியர் பாலகிருஷ்ண பிள்ளையால் கொடுக்கப் பெற்றது.

.......: இவ்வாறு புள்ளியிட்ட இடங்களில் ஏடு சிதைவு என்று கொள்க.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திரு அருட்பிரகாச வள்ளலார் வரலாற்றுச் சுருக்கம்

## ஊர், பெற்றோர், அவதாரம்

தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டம் சிதம்பரம் வட்டத்தில் சிதம்பரத்திற்கு வடமேற்கே 20.கி.மீ. தொலைவில் உள்ள மருதூரில் திருஅருட்பிரகாச வள்ளலார்அவதரித்தார். பெருமானாரைப் பிள்ளையாகப் பெறும் பேறுபெற்ற பெற்றோர் இராமைய பிள்ளை, சின்னம்மையார் என்போர். இவர்கள் சமயம்-சைவம். குலம் - வேளாண்குலம். மரபு - கருணீகர் மரபு. இராமைய பிள்ளை மருதூரின் கிராமக் கணக்கர். பிள்ளைகளைக் கூட்டிப்பாடஞ் சொல்லும் கணக் காயராகவும் விளங்கினார். சின்னம்மையார், திருவள்ளூர் மாவட்டத்தில் பொன்னேரிக்கு அருகிலுள்ள சின்ன காவணத்தில் பிறந்து வளர்ந்தவர். இராமைய பிள்ளைக்கு ஆறாவது மனைவியாக வாழ்க்கைப்பட்டவர். ஐந்து மனைவி யரும் மகப்பேறின்றி ஒருவர்பின் ஒருவராக இறக்கவே இராமைய பிள்ளை இவரை ஆறாவதாக மணம் முடித்தார். இவர்களுக்குச் சபாபதி, பரசுராமன் என்னும் இரு ஆண் மக்களும் உண்ணாமுலை, சுந்தராம்பாள் என்னும் இரு பெண்மக்களும் பிறந்தனர்.

1823, அக்டோபர் 5, சுபானு ஆண்டு புரட்டாசித் திங்கள் இருபத்தோராம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை 5.30 மணி யளவில் பெருமானார் ஐந்தாவது மகவாக அவதரித்தார்கள். பெற்றோர்கள் பிள்ளைக்கு இராமலிங்கம் எனப் பெயரிட்டனர்.

## சிதம்பரத் தரிசனம்

பிறந்த குழந்தைகளை முதன் முதலில் கோயிலுக்கு எடுத்துச் சென்று வழிபடுவது வழக்கம். அவ்வாறே

பெருமானார் அவதரித்த ஐந்தாம் திங்களில் இராமைய பிள்ளை மனைவி மக்களுடன் சிதம்பரம் சென்று வழிபட்டார். சிற்சபையில் நடராசப் பெருமானை வழிபட்ட பின் சிதம்பர இரகசிய தரிசனத்திற்காக அனைவரும் அதன்முன் வந்து நின்றனர். பிள்ளைப்பெருமான் தாயின் கையிலிருந்தார். தீக்ஷிதர் திரையைத் தூக்கச் சிதம்பர இரகசியம் தரிசனமாயிற்று. அனைவரும் தரிசித்தனர். கைக்குழந்தையாகிய பெருமானாரும் தரிசித்தார். அனைவருக்கும் இரகசியமாயிருந்த சிதம்பர இரகசியம் ஐந்து திங்கட் குழவி யாகிய பெருமானார்க்கு வெட்ட வெளியாகப் புலப்பட்டது. இறைவன் இரகசியத்தை வெளிப் படையாகக் காட்டியருளினான். இவ்வாறு பெருமானார் ஓராண்டுப் பருவத்தில் பூர்வஞான சிதம்பரமாகிய தில்லையில் ஒரு திரை தூக்கத் தாம் வெளியாகக் கண்ட அனுபவப் பொருளையே தமது நாற்பத்தொன்பதாம் அகவையில் உத்தரஞான சிதம்பரமாகிய வடலூரில் சத்திய ஞான சபையில் ஏழுதிரை நீக்கி ஒளியாகக் காட்டியருளினார்.

## குடும்பம் சென்னை செல்லல்

எட்டாம் திங்களில் இராமையபிள்ளை காலமானார். சின்னம்மையார் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு தாம் பிறந்த பொன்னேரிக்குச் சென்றார். சிலகாலம் பொன்னேரியில் வாழ்ந்த பின் தம்மக்களுடன் சென்னைக்குக் குடி பெயர்ந்தார். மூத்த பிள்ளையாகிய சபாபதி பிள்ளை, காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் பயின்று புராணச் சொற்பொழிவாற்றுதலில் வல்லவராகிக் குடும்பத்தை நடத்தி வந்தார்.

## ஓதாதுணர்தல்

பிள்ளைப் பெருமான் பள்ளிப்பருவம் எய்தியதும் தமையனார் சபாபதி பிள்ளை தாமே கல்விப் பயிற்சியைத் தொடங்கிவைத்தார். பின்னர் தமதாசிரியராகிய காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் கல்வி கற்க

அனுப்பினார். இளைய இராமலிங்கரின் அறிவுத் தரத்தையும், பக்குவ நிலையையும், கந்தகோட்டஞ் சென்று கவி பாடித் துதித்தலையும் கண்ட மகாவித்துவான், இவ்விளைஞர் கல்லா துணரவும் சொல்லாதுணர்த்தவும் வல்லவரென்றுணர்ந்து கற்பிப்பதைக் கைவிட்டார். பெருமானார் எப்பள்ளியிலும் பயின்றதில்லை; எவ்வாசிரியரிடத்தும் படித்ததில்லை. கற்க வேண்டுவனவற்றை இறைவனிடமே கற்றார். கேட்க வேண்டுவனவற்றை இறைவனிடமே கேட்டார். பெருமானின் கல்வியும் கேள்வியும் இறைவனிடத்துப் பெற்றதேயொழிய வேறு எவ்வாசிரியரிடத்தும் பெற்றதன்று. இறைவன் பெருமானாரைப் பள்ளியில் பயிற்றாது தானே கல்வி பயிற்றினான். 'குமாரப் பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரை இன்றியே என் தரத்தில் பயின்று அறிதற்கு அருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தே இருந்து பயிற்றுவித்தருளினீர்' (பெரு விண்ணப்பம்). 'கற்றது நின்னிடத்தே, பின் கேட்டது நின்னிடத்தே', 'பள்ளி பயிற்றாது என்தனைக் கல்வி பயிற்றி முழுதுணர்வித்து', ஓதாதுணர உணர்த்தி உள்ளே நின்றுளவு சொன்ன நீதா', ஓதுமறை முதற் கலைகள் ஓதாமல் உணர உணர்விலிருந்து உணர்த்தி', ஓதி உணர்ந்தவர் எல்லாம் எனைக் கேட்க எனைத்தான் ஓதாமல் உணர்ந்து 'ஓதாதனைத்து முணர்கின்றேன்' 'ஓதாதுணர்ந்திட ஒளி அளித்தெனக்கே' என்பன அகச் சான்றுகள். முற்பிறப்பு களிலேயே சரியை கிரியை யோகங்களை முடித்து இப்பிறப்பில் ஞானத்தில் நின்று சித்திபெறுதற் கென்றே பிறந்த சாமு சித்தராதலின் பெருமானார் இளமையிலேயே ஓதாதுணரப் பெற்றார். ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவர்க்கு எழுமையும் ஏமாப்புடைத்து என்னும் குறள்மொழி பெருமானார்க்கு முற்றும் பொருந்துவதாம்.

## ஆடல் செய்யும் பருவத்தே பாடல் செய்யத் தொடங்குதல்

வீதியிலே விளையாடித் திரியும் சிறு பிள்ளைப் பருவத் திலேயே பெருமானார் அருட்பாடல்களைப் பாடும் வல்லமை

பெற்றிருந்தார்கள். "உருவத்திலே சிறியேனாகி ஊகத்தில் ஒன்றுமின்றித் தெருவத்திலே சிறுகால் வீசி ஆடிடச் சென்ற அந்தப் பருவத்திலே நல் அறிவளித்தே உனைப்பாடச் செய்தாய்", "பாடும் வகை அணுத்துணையும் பரிந்தறியாச் சிறிய பருவத்தே அணிந்தணிந்து பாடும் வகை புரிந்து", "ஐயறிவிற் சிறிதும் அறிந்தனுபவிக்கத் தெரியாதழுது களித் தாடுகின்ற அப்பருவத்தெளியேன் மெய்யறிவிற் சிறந்தவரும் களிக்க உனைப்பாடி விரும்பி அருள்நெறி நடக்க விடுத்தனை", "ஏதும் ஒன்றறியாப் பேதையாம் பருவத்தெனை ஆட்கொண் டெனை உவந்தே ஓதும் இன்மொழியில் பாடவே பணித்த ஒருவனே", "வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்மிகச் சிறிய பருவத்தே நினை நமது பெம்மான் என்றடி குறித்துப் பாடும் வகை புரிந்த பெருமானே", "வீதியிலே விளையாடித் திரிந்த பிள்ளைப் பருவம் மிகப்பெரிய பருவமென வியந்தருளி அருளாம் சோதியிலே விழைவுறச் செய்தினிய மொழிமாலை தொடுத்திடச் செய்தணிந்து கொண்ட துரையே" என்பன அகச்சான்றுகள்.

## கந்தகோட்ட வழிபாடு

பிள்ளைப் பருவத்தில் பள்ளி சென்று பயிலாதும் வீட்டில் தங்காதும் திரிந்த பெருமானார் நாள்தோறும் கந்த கோட்டத் திற்குச் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டார்கள். கந்த சாமி கோயில் என்று வழங்கப் பெற்ற அதனைக் கந்தகோட்டம் என வழங்கத் தொடங்கியவர் வள்ளற்பெருமானாரே.

## கண்ணாடியில் காட்சி பெறல்

தம்மிடம் படிக்காதும், தமதாசிரியர் மகா வித்துவான் சபாபதி முதலியாரிடம் பயிலாதும், வீடு தங்காதும், கோவில் குளங்களைச் சுற்றிக்கொண்டு ஆடிப்பாடித் திரியும் தம்பியின் போக்கு, தமையனார் சபாபதிபிள்ளைக்குப் பிடிக்கவில்லை. பலமுறை கண்டித்தும் கேளாமையால் இனி தம்பிக்கு வீட்டில் உணவளிக்க வேண்டாமென மனைவியாரிடம் கூறி விட்டார்.

பிள்ளைப் பெருமானுக்கு இது நல்லதாயிற்று. வீட்டுக்கே வராமல் சிறுவர்களைச் சேர்த்துக்கொண்டு நாள் முழுவதும் கோவில் குளங்களையே சுற்றுபவரானார். பிள்ளைப் பெருமானிடத்து அன்புமிக்க அண்ணியாகிய பாப்பாத்தி யம்மையாரோ ஒருபுறம் கணவர் கட்டளைக்கு அஞ்சியவராய், மற்றொருபுறம் கணவர் தம்பியைக் கைவிடுவதற்கு மனமில்லா தவராய்ச் சில சிறுவர்களை ஏவிப் பிள்ளைப் பெருமானை அழைத்துவரச் செய்து தமையனார் இல்லாதபோது அவரறியாமல் வீட்டுக்கு வந்து ஒருவேளையாவது உண்டு போகும்படி அன்போடு அறிவுறுத்தி அனுப்பினார். பிள்ளைப் பெருமானும் அவ்வாறே நாள்தோறும் பிற்பகலில் தமையனார் இல்லாதபோது வீட்டிற்கு வந்து அண்ணியாரிடம் உண்டு சென்றார். சின்னாளில் சபாபதி பிள்ளை இதனை அறிந்தா ரேனும் கண்டும் காணாததுபோல் இருந்து விட்டார். இங்ஙனம் நாள்பல சென்றன. ஒருநாள் தந்தை இராமைய பிள்ளையின் திதி வந்தது. வீட்டில் விருந்து சிறப்பாக நடைபெற்றது. தம்பியார் உடனிருந்து உண்பதற் கில்லையே என்று சபாபதிபிள்ளை வருந்தினார். எனினும் மாலையில் வந்து அண்ணியால் உண்பிக்கப்படுவ ரென்பதை எண்ணி ஒருவாறு உளந்தேறியிருந்தார். மாலையில் பெருமானார் வீட்டிற்கு வந்தார். அண்ணியார் உண்பிக்க உண்டார். உண்ணுங்கால் அண்ணியார் கண்ணீர் வடிப்பதைக் கண்டார்; காரணம் உசாவினார். உன்னைத் தான் நினைத்து வருந்துகிறேன். அண்ணார் சொற்படிக் கேட்டு வீட்டில் அடங்கிப் படிப்பதாயிருந்தால் இவ்வளவு துன்பம் இல்லையே, சொந்த வீட்டில் கள்வனைப் போலத் தெரியாது வந்து உண்ண வேண்டியிருக்கிறதே என்று அண்ணியார் வருந்திக் கூறினார். அண்ணியாரின் கண்ணீரைக்காணப் பொறாது கவன்ற பெருமானார் நாளை முதல் வீடுதங்கிப் படிப்பதாகக் கூறிச் சென்றார்; மறுநாளே வீட்டிற்கு வந்தார். தமது விருப்பப்படி தமக்கென ஒதுக்கப் பெற்றிருந்த மேன்மாடி அறையில் கைநிறையப் புத்தகங்களோடும், பூசைப் பொருள்களோடும்

புகுந்தார். அறைக் கதவை மூடிக்கொண்டு முருக உபா சனையில் முனைந்தார். உண்ணும்போது தவிர மற்றபோது வெளியே வருவதில்லை. உறக்கமும் உள்ளேயே கொள்வார். இவ்வாறு பலநாள் தியானத்திலிருக்கையில் ஒருநாள் சுவரிலிருந்த கண்ணாடியில் தணிகை முருகன் தோன்றிக் காட்சியளித்தான். அக்காட்சியைக் குறிப்பதே சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் என்னும் பாடலாம்.

## கன்னிச் சொற்பொழிவு

தமையனார் சபாபதி பிள்ளையின் புராணச் சொற் பொழிவுக்குப் பெருமானார் ஓரிரு நாள் கையேடு படித்தார். பின்னொரு நாள் சபாபதி பிள்ளை நோய்வாய்ப்படவே சோமு செட்டியார் வீட்டில் நிகழ்ந்த சொற்பொழிவு தடைபட்டது. சபாபதி பிள்ளை தம்பியை அனுப்பி ஓரிரு பாடல்களைப் பாடி வழிபாடு செய்து முடித்துவரப் பணித்தார். அவையோரோ பெருமானாரையே சொற்பொழிவாற்ற வேண்டினர். பெருமானாரும் அற்றை நாளுக்குரியதாகிய திருஞான சம்பந்தர் புராணத்தை இரவு நெடு நேரம்வரை சொற்பொழி வாற்றினார். அன்றுமுதல் பெருமானாரையே தொடர்ந்து சொற்பொழிவாற்றுமாறு அனைவரும் வேண்டினர். அதற் கிசைந்து பெருமானார் சிலகாலம் சொற் பெருக்காற்றினர்.

## ஒன்பதாம் அகவையில் ஆட்கொள்ளப் பெற்றது

வள்ளற்பெருமானார், தம் ஒன்பதாம் ஆண்டில் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றார். "என்னை ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டுகொண்ட அருட்கடலே", "ஆறொடு மூன்றாண்டாவதிலே முன்னென்னை ஆண்டாய்" என்பன அகச்சான்றுகள். "என்னையறியாப் பருவத்தாண்டு கொண்ட என்குருவே", "என்னைச் சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே", "எனையறியா இளம்பருவந்தனிலே பரிந்து வந்து மாலையிட்டான்", "ஏதும் ஒன்றறியாப் பேதையாம் பருவத் தென்னை ஆட்கொண்டு", "தெருவிடத்தே விளையாடித்

திரிந்த எனை வலிந்தே சிவமாலை அணிந்தனை", "அற்றமும் மறைக்கும் அறிவிலாதோடி ஆடிய சிறு பருவத்தே குற்றமும் குணங்கொண்டென்னை ஆட்கொண்ட குணப்பெருங் குன்றமே" என்பவற்றால் சிறு பருவத்தே இறைவன் பெருமானாரை ஆட்கொண்டு அருளினான் என்பது பெறப்படும்.

## பன்னிரண்டாம் அகவையில் முறையான "ஞான வாழ்க்கை தொடங்கியது"

"பன்னிரண்டாண்டு தொடங்கி நான் இற்றைப் பகல்வரை அடைந்தவை எல்லாம்," "பனிரெண்டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே". "ஈராறாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே" என்னும் அகச் சான்றுகளால் பெருமானார் தமது பன்னி ரண்டாம் ஆண்டு முதல் முறையான ஞான வாழ்க்கையைத் தொடங்கினார்கள் என்பது போதரும்.

## திருவொற்றியூர் வழிபாடு

பன்னிரெண்டாம் அகவையில் முறையான ஞான வாழ்க்கையைத் தொடங்கிய பெருமானார் நாள்தோறும் திருவொற்றியூர் சென்று தியாகப் பெருமானையும் வடிவுடையம் மையையும் வழிபட்டு வரத் தொடங்கினார்கள். சென்னையை விட்டு நீங்கிய முப்பத்தைந்தாம் அகவை வரை இருபத்து மூன்றாண்டு காலம் பெருமானார் ஒற்றியூரை வழிபட்ட வண்ணமிருந்தார்கள். தொழுவூர் வேலாயுதனாரால் வகுக்கப் பெற்ற முதல் திருமுறையிலுள்ள வடிவுடைமாணிக்க மாலையும் இங்கிதமாலையும், இரண்டாம் திருமுறையின் பெரும்பகுதியும், மூன்றாம் திருமுறை முழுவதும் ஒற்றியூர் வழிபாட்டுக் காலத்தில் ஒற்றியூரின்மேற் பாடப் பெற்றவையாம். தொ.வே. வகுத்த ஐந்தாம் திருமுறையாகிய திருத்தணிகைப் பதிகங்கள் ஒற்றியூர் வழிபாட்டுக் காலத்தில் திருத்தணிகையைக் குறித்து, அவண் சென்று வழிபட்டும், சென்னையிலிருந்த வாறும் பாடப்பெற்றவையாம். இக் காலத்தில் இடையிடையே

திருவலிதாயம், திருமுல்லைவாயில் முதலிய தலங்களுக்கும் சென்று பாடிப்பரவினார். ஒரு நாள் ஒற்றியூர் சென்று இரவு காலங்கடந்து சென்னை திரும்பித் திண்ணையில் பசியோடே படுத்து அயர்ந்தபோது வடிவுடையம்மை அண்ணியார் வடிவில் தோன்றி அமுதளித்தருளினார்.

## வேலாயுதனார் மாணவரானது

1849 ஆம் ஆண்டில் தொழுவூர் வேலாயுத முதலியார் பெருமானாரின் மாணாக்கராயினார். அப்போது பெருமானாரது அகவை இருபத்தாறு. வேலாயுதனார்க்கு அகவை பதினேழு. பெருமானாரின் புலமையில் அவ் வளவாக நம்பிக்கையற்ற வேலாயுதனார் கடிய நடையில் தாமே நூறு செய்யுள்களை இயற்றிக் கொண்டுவந்து, இவை சங்கச் செய்யுள்கள், பழைய ஏடுகளில் காணப்பட்டன வென்று பெருமானாரிடம் காட்டினார். பெருமானார் அவற்றைக் கண்ணுற்று இவை சங்கப் பாடல்கள் அன்று, சங்கப் பாடல்களில் இவ்வளவு குற்றமிரா, இவை பொருளிலக்கணந் தேறாக் கற்றுக்குட்டி பாடியவை எனக் கூறினார். இதனைக் கேட்டதும் வேலாயுதனார் தம் செய்கைக்கு நாணி உண்மையைக்கூறி பெருமானாரிடம் சரணடைந்தார். வேலாயுதனாரின் மகன் திருநாகேசுவர முதலியாரும், வேலாயுதானாரிடம் பின்னாளில் மாநிலக் கல்லூரியில் பயின்ற பம்மல் சம்பந்த முதலியாரும் இவ்வரலாற்றை உறுதிப் படுத்துகின்றனர்.

## திருமணம்

பிள்ளைப் பருவத்திலேயே மூவாசையையும் முற்றும் துறந்து துறவொழுக்கம் பூண்ட பெருமானார் இல்வாழ்வை விரும்பவில்லை. பாலுண் குழவிப் பருவத்திலேயே இல்வாழ்வில் தமக்கு அருவருப்பு உண்டெனப் பெருமானார் கூறுவர். (இதில் அருவருப்பு பால் உணும் காலையே உளதால்) பிள்ளைப் பருவமுதலே இல்வாழ்வை அருவருத்து நின்ற பெருமானார் உற்றார் வற்புறுத்தலாலும் ஊழாலும்

திருமணத்திற்கு இசையவேண்டியவரானார் தமக்கை உண்ணாமுலை அம்மையாரின் மகள் தனம்மாளை மணம் புரிவித்தனர். பெருமானார் தொட்டுத் தாலி கட்டினார் களேயன்றி இல்லற வாழ்வில் ஈடுபட்டார்களல்லர். “ஒருத்தியைக் கை தொடச் சார்ந்தேன் ... ... ... ... தொட்டனன் அன்றிக் கலப்பிலேன்” என்பது பெருமானார் திருவாக்கு.

## பாடஞ் சொல்லல்

தொழுவூர் வேலாயுத முதலியார், இறுக்கம் இரத்தின முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, காயாறு ஞான சுந்தரஐயர், கிரியாயோக சாதகர் பண்டார ஆறுமுகஐயா ஆகியோர் பெருமானிடத்தில் பாடங் கேட்டனர். பண்டார ஆறுமுகஐயா விநாயக புராணம் முழுவதையும் பாடங் கேட்டார். இவர்களுள் தொழுவூர் வேலாயுத முதலியார் உபய கலாநிதிப் பெரும்புலவர் என்று பட்டம் பெற்றுச் சிறப்புற்றார். திருவருட்பாவைப் பதிப்பித்தார். பல நூல்களை இயற்றினார். பெருமானார் சித்தி பெற்றபின் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக விளங்கினார். இறுக்கம் இரத்தின முதலியார் பள்ளி ஆசிரியரானார். வீராசாமி முதலியார் சில இலக்கண நூல்களைப் பதிப்பித்தார். சுந்தரம் பிள்ளை புராணச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவராகிப் புராணிகர் பொன்னேரி சுந்தரம் பிள்ளை என வழங்கப்பெற்றார். இங்ஙனம் பெருநூல்களைத் தக்கார்க்குப் பாடஞ்சொல்லும் போதகாசிரியராக விளங்கிய பெருமானார் சிறுவர்களைச் சேர்த்து நீதி நூல்களைப் பயிற்றுவித்தார்கள்.

## நூல்கள் பதிப்பித்தல்

ஒழிவிலொடுக்கம், தொண்டமண்டல சதகம், சின்மய தீபிகை ஆகிய மூன்று நூல்களும் வள்ளற் பெருமானாரால் பதிப்பிக்கப் பெற்றன.

## ஒழிவிலொடுக்கம் 1851

காழிக்கண்ணுடைய வள்ளலார் அருளிய ஒழிவிலொடுக்கத்தைத் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உரை யுடன் 1851 ஆம் ஆண்டில் பெருமானார் பதிப்பித்தார்கள். 'வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்' என்று தொடங்கும் அதன் சிறப்புப் பாயிரச் செய்யுளுக்கு மட்டும் 15 பக்க அளவில் ஒரு விருத்தி உரை செய்து தம் பதிப்பில் சேர்த்திருக்கிறார்கள். இதனுள் பெருமானார் கந்தரந்தாதி, கல்லாடம், சித்தியார், திருவாசகம், திருக்குறள், புறப்பொருள் வெண்பாமாலை, தொல்காப்பியம் ஆகிய நூல்களினின்றும் மேற்கோள் காட்டியுள்ளார். சிதம்பர சுவாமிகள் உரையில் வரும் அருஞ்சொற்கள் சிலவற்றிற்குப் பொருளெழுதி அதனை இந்நூலுரை பாடத்திற் சிற்சில இடங்களிலுள்ள மறைசொற் பொருட்குத் தெளிசொற்பொருள் என்ற தலைப்புடன் பாயிர விருத்தியை அடுத்து அச்சிட்டிருக்கிறார்கள். நூலுள் ஆங்காங்கே அடிக்குறிப்புகளையும் அமைத்துள்ளார். நூலிறுதியில் அமைத்துக் கொளல் என்ற தலைப்பில் சிற்சில விளக்கங்கள் எழுதப் பெற்றுள்ளன. பெருமானாரால் பதிப்பிக்கப்பெற்ற நூல்களுள் இதுவே முதலாவதாகும். இதனைப் பதிப்பிக்கும் போது பெருமானார்க்கு அகவை இருபத்தெட்டு. இவ்விளம் பருவத்திலேயே பெருமானார், சிறந்த ஞான நூல்களை ஆராய்ந்து பதிப்பிக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தாரென்பது இவ் வொழிவிலொடுக்கப் பதிப்பாலும், 1857 இல் பதிப்பித்த சின்மய தீபிகைப் பதிப்பாலும் விளங்கும்.

## தொண்ட மண்டல சதகம் 1856

அக்காலத்தில் தொண்ட மண்டலம் என்ற பெயரைக் குறித்துச் சென்னைப் புலவர்களிடையே ஒரு வாதம் எழுந்தது. தொண்[redacted] மண்டலம் என்று வழங்குவது முறையா? அல்லது தொண்ட மண்டலம் என்று வழங்குவது முறையா? என்பதே அவ்வாதம். இவ்வாதம் முடிவுறாது இறுதியில் பெருமானார்

இடத்தில் வந்தது. பெருமானார் தொண்ட மண்டலம் என்பதே முறையென நிறுவினார்கள். தம் கூற்றை விரித்து நூற் பெயர் இலக்கணம் என்ற தலைப்பில் எழுதித் தொண்டமண்டல சதகத் தோடு சேர்த்து இராட்சச வருடம் மார்கழி மாதம் (1856சனவரி) பதிப்பித்தார்கள். நூற்பெயரிலக்கணத்தை, அவர் கூற்றாக விவரித்தல், அதனைமறுத்தல் என இருகூறாக வகுத்து செய்திருப்பது அருமையுடையது. இதனுள் காட்டப்பெறும் இலக்கண நுட்பங்கள் இலக்கணம் வல்லாரையும் இறும்பூதெய்தச் செய்வன.

நூற்பெயரிலக்கணத்தின் இறுதியில். இங்ஙனமுணர மாட்டாதார் ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்பவர் தாமரசு செய்யுங் காலத்தில் தம்மாற் கட்டுவித்த ஆலயங்களிற்றம் பெயரிலச்சினை சிலையின்கட் பொறிப்பித்தனர். ஆண்டும் ஆதொண்டவென்றே இலக்கணவமைதி பெற்றிருக்கின்றது. இதனைத் திருவலிதாயம் திருமுல்லைவாயில் முதலிய சிவத்தலங்களிற் சென்றேனுங் கண்டு தெளியக் கடவர், என்று கல்வெட்டுச் சான்று காட்டி முடிக்கின்றனர். திருவலிதாயம், திருமுல்லைவாயில் கல்வெட்டுகளில் தொண்டமண்டலம் என்றே காணப்படுகிறது. பெருமானார் கோயில்களுக்குச் செல்லுங்காலங்களில் கோயிற்கட்டடக்கலை, சிற்பம், கல் வெட்டுகள் ஆகிய வற்றைக் கூர்ந்து ஆராயும் வழக்கமுடைய வர்கள் என்பது இதனால் அறியப்பெறும். அக்காலத்திலிருந்த பெரும் புலவர்களெல்லாம் கல்வெட்டுகளைப் பற்றி நினைந் ததும் இல்லை. சாசன ஆராய்ச்சி (Epigraphy), தொல் பொருள் ஆராய்ச்சி (Archaeology) ஆகிய இரண்டும் மேலை நாட்டார் நமக்களித்த கருவூலங்களாம். பத்தொன்பதாம் நூற்றாண் டின் இடைப்பகுதியில் மேலை நாட்டு அறிஞர் சிலரது முயற்சி யால் இவ்விருதுறைகளும் அரசாங்கத்தால் ஏற்படுத்தப் பெற்றன. மேலைநாட்டு அறிஞர் சிலர் தனித்த முறையிலும் இக் கலைகளுக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர். தமிழ்ப் புலவர்களெல்லாம் கல்வெட்டுகளிற் கவனஞ்செலுத்தாத

காலத்தில் பெருமானார் கல்வெட்டுகளை ஆராய்ந்து வைத்திருந்தனரெனில் பெருமானாரின் கலைப் புலமையை என்னென்போம்! வள்ளற்பெருமானார் தமிழகத்தின் முதல் கல்வெட் டாராய்ச்சியாளர் ஆவர்.

தொண்ட மண்டல சதகத்தின் காப்புச் செய்யுளுக்குப் பெருமானார் ஒரு விரிவுரை செய்து தம் பதிப்பில் சேர்த்திருக்கிறார்கள். நூற்பெயர் இலக்கணத்தின் பின் வழிபடுகடவுள் வணக்கப்பாட்டுரை என்ற தலைப்புடன் அது அச்சிடப் பெற்றுள்ளது. பெருமானாரின் தொண்ட மண்டல சதகப் பதிப்பிற்குக் காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், புதுவை சுப்பராய முதலியார், விருத்தாசலம் தியாகராஜ கவிராயர் ஆகிய நால்வரும் சாற்றுக் கவியளித்துள்ளனர். காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் தமது சாற்றுக்கவியுள் "பலகலை தெரிதரும் உணர்ச்சியன், சிவனருள் புனையும் மாறுரு அன்பன், மனமாசு அகன்றோன், தேறுவார் உளத்துத்திகழ்ந்தயன் முதலோர் தெரிதற்கரிய சிதம்பர நகரில் பரிவுறு புலமைப்பண்பன் இராமலிங்கமெனும் பெயரோனே" என பெருமானாரைப் புகழ்ந்துள்ளார்.

## சின்மய தீபிகை 1857

விருத்தாசலம் குமாரதேவர் மடம் முத்தைய சுவாமிகள் இயற்றிய சின்மய தீபிகையை பெருமானார் பிங்கள ஆண்டு கார்த்திகைத் திங்களில் (1857) முதற் பதிப்பாகப் பதிப்பித்தார்கள்.

## நூல்கள் இயற்றல்

உரைநடை நூல்கள் அரிதாகத் தோன்றத் தொடங்கிய அக்காலத்தில் மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என்னும் இரண்டு உரைநடை நூல்களை எழுதியருளினார்கள். மனுமுறை கண்ட வார்சகம் 1854 இல்

வெளியாயிற்று. ஜீவகாருண்ய ஒழுக்கம் பெருமானார் சித்தி பெற்ற பின்னர் 1879 இல் அச்சாயிற்று.

## சாற்றுக்கவி அளித்தல்

அக்காலத்தில் நூல் செய்வோர் பெரும் புலவர்களிடத்தில் சாற்றுக்கவி பெறுதல் வழக்கம். வள்ளற் பெருமானாரிடத்தும் பலர் சாற்றுக்கவி பெற்றுள்ளனர். முத்துக் கிருஷ்ண பிரமம் எழுதிய நிட்டானுபூதி உரைக்கும், மதுரை ஆதீனம் சிதம்பர சுவாமிகள் பதிப்பித்த சிதம்பர புராணப் பதிப்பிற்கும், மாயூரம் முன்சிப் வேதநாயகம் பிள்ளையின் நீதிநூலுக்கும் பெருமானார் சாற்றுக்கவி அளித்துள்ளார்கள். வேதநாயகம் பிள்ளையின் நீதிநூலுக்கு அளித்த சாற்றுக்கவி "சென்ன பட்டணம் வித்வான் ம-ள-ள-ஸ்ரீ இராமலிங்கம்பிள்ளையவர்க ளியற்றியது" என அச்சிடப் பெற்றுள்ளது. பெருமானார் சென்னையில் வித்துவானாகவும் விளங்கினர் என்பது இதனாற் போதரும்.

## சென்னை வாழ்வை நீத்தல் 1858

ஆரவாரம் நிறைந்த சென்னையில் வாழ்வதையும் குடும்பத்தினரோடு வீட்டில் இருப்பதையும் பெருமானார் விரும்பவில்லை. தேட்டில் மிகுந்த சென்னையில் இருந்தால் சிலுகுறும் என்றுளம் பயந்தார்கள். இதன் விளைவாகத் தமது முப்பத்தைந்தாம் அகவையில் 1858 ஆம் ஆண்டில் ஒருநாள் சென்னை வாழ்வை நீத்துத் தலயாத்திரையாகப் புறப்பட்டு வழியிலுள்ள தலங்களையெல்லாம் வழிபட்டுக் கொண்டு தில்லையை அடைந்தார்கள்.

## கருங்குழியில் உறைதல் – 1858 – 1867

தில்லையில் பெருமானாரைக் காண நேர்ந்த கருங்குழி மணியக்காரர் வேங்கடரெட்டியார் தம்மூர்க்கு வருமாறு அழைத்தார். பெருமானாரும் கருங்குழிக்கு எழுந்தருளினார். வேங்கடரெட்டியார், பெருமானாரை அன்போடு வரவேற்று

உபசரித்துக் கருங்குழியில் தம் இல்லத்திலேயே தங்கியருள வேண்டினார். ரெட்டியாரின் உண்மை அன்பை உணர்ந்த பெருமானார் அவரது விருப்பத்திற் கிணங்கக் கருங்குழியில் அவரில்லத்திலேயே தங்கினார்கள். 1858 இல் கருங்குழிக்கு வந்தது முதல் 1867 இல் தருமச்சாலையை வடலூரில் ஏற்படுத்தும்வரை கருங்குழியே பெருமானாரின் உறைவிடமாயிற்று. இக்காலத்தில் அடிக்கடி பெருமானார் சிதம்பரம் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டார்கள். திருமுதுகுன்றம், திருவதிகை, திருவண்ணாமலை முதலிய தலங்களுக்குச் சென்றும் வழிபட்டார்கள். கருங்குழியில் வசித்த காலத்தைச் சிதம்பர வழிபாட்டுக் காலம் எனலாம். நான்காம் திருமுறையும் ஆறாம் திருமுறையின் முன்பகுதிப் பதிகங்களும் இக்காலத்தில் பாடப்பெற்றவை.

## நீரால் விளக்கெரிந்தது

கருங்குழி வீட்டின் அறையில் ஒரு நாள் இரவு பெருமானார் எழுதிக் கொண்டிருக்கும்போது விளக்கு மங்கவே, எண்ணெய்ச் செம்பென எண்ணித் தண்ணீர்ச் செம்பை எடுத்து விளக்கில் வார்த்தனர். விளக்கும் இராமுழுவதும் நன்கு எரிந்தது. தண்ணீர் விளக்கெரிந்த இவ் வற்புதத்தைப் பெருமானாரே ஒரு பாடலிற் குறித்துள்ளனர். மதுரை ஆதீனம் சிதம்பர சுவாமிகளும் திருவருட்பாவின் சிறப்பாகப் பாடிய செய்யுளில் தண்ணீர் விளக்கெரிந்த தன்மையைக் குறித்துள்ளார்.

## சமரச வேத சன்மார்க்க சங்கம் – 1865

வள்ளற்பெருமானார் சமரச சுத்த சன்மார்க்கம் என்ற ஒரு நெறியை இக்காலத்தில் ஏற்படுத்தினார்கள். கடவுள் ஒருவரே என்பதும் அவரை உண்மை அன்பால் ஒளி (ஜோதி) வடிவில் வழிபட வேண்டுமென்பதும், சிறு தெய்வ வழிபாடு கூடாதென்பதும், அத்தெய்வங்களின் பேரால் உயிர்ப்பலி கூடாதென்பதும், புலால் உண்ணலாகா தென்பதும், சாதி சமய

முதலிய எவ்வகை வேறுபாடும் கூடாதென்பதும் எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையைக் கைக்கொள்ள வேண்டுமென்பதும் ஏழைகளின் பசி தவிர்த்தலாகிய சீவகாருணிய ஒழுக்கமே பேரின்ப வீட்டின் திறவுகோல் என்பதும், புராணங்களும் சாத்திரங்களும் முடிவான உண்மையைத் தெரிவிக்க மாட்டாதென்பதும், இறந்தவரைப் புதைக்க வேண்டும், எரிக்கக் கூடாதென்பதும், கருமாதி திதி முதலிய சடங்குகள் செய்ய வேண்டாவென்பதும் பெருமானாரின் சமரச சன்மார்க்கக் கொள்கைகளாம். இக்கொள்கைகளைப் பின்பற்றவும் பரப்பவும் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்ற ஒரு சங்கத்தை 1865ஆம் ஆண்டில் நிறுவினார்கள்.

## திருவருட்பா வெளியீடு 1867

1867ஆம் ஆண்டில் திருஅருட்பாவின் முதல் நான்கு திருமுறைகள் அச்சிடப்பெற்று வெளியாயின.

## சத்திய தருமச்சாலை 23 – 5 – 1867

வள்ளற் பெருமானாரின் கொள்கையில் தலையாயது சீவகாருணியம். சீவகாருணியத்தைப் பெருமானார் இரு வகையால் வற்புறுத்துவர். அவை கொலை தவிர்த்தல், புலால் மறுத்தல்; அற்றார் அழிபசி தீர்த்தல். அற்றார் அழிபசி தீர்த்தலாகிய சீவகாருணியப் பேரறத்தை நடத்துவதற்காக வடலூரில் சத்திய தருமச் சாலையை 23. 5. 1867 இல் பிரபவ, வைகாசி 11 ஆம் நாளில் நிறுவினார்கள். சாலையை நிறுவியபின் அதனையே உறைவிடமாகக் கொண்டார்கள். 1870 ஆம் ஆண்டுவரை தருமச் சாலையிலேயே உறைத்தார்கள்.

## சித்தி வளாகம் 1870

நாளடைவில் தருமச்சாலையில் கூட்டம் பெருகவே அமைதியை விரும்பித் தனித்துறையக் கருதி வடலூர்க்குத் தெற்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள மேட்டுக்

குப்பத்திற்குச் சென்று அங்கே உறையத் தொடங்கினார்கள். மேட்டுக் குப்பத்தில் பெருமானார் உறைந்த திரு மாளிகைக்குச் சித்திவளாகம் என்று பெயர். இப்பெயர் பெருமானாரே இட்டது. சித்தியைத் (வீடு பேற்றைத்) தரும் இடம் என்பது இதன் பொருள். 1870 முதல் 1874 இல் சித்தி பெறும்வரை இங்கேயே உறைந்தார்கள்; சித்தி பெற்றதும் இத் திருமாளிகையிலேயே.

## சத்திய ஞான சபை 25–1–1872

கடவுளை ஒளி (அருட்பெருஞ்சோதி) வடிவிற் கண்ட பெருமானார் ஒளி (அருட்பெருஞ்சோதி) வழி பாட்டிற்கென வடலூரில் சத்திய ஞான சபையை அமைத்தார்கள். 1871 பிரசோற்பத்தி ஆண்டில் சபை கட்டத் தொடங்கப் பெற்றது. 25-1-1872 பிரசோற்பத்தி, தை, 13 வியாழக்கிழமை பூச நாளில் முதன் முதலாகச் சபையில் வழிபாடு தொடங்கப் பெற்றது. அனைவரும் அருட்பெருஞ்சோதி தரிசனத்தைக் கண்டு களித்தனர். சத்திய ஞானசபையை இயற்கை விளக்கம் என்பர் பெருமானார். அகத்தே காணுதற்குரிய அனுபவத்தைப் புறத்தே பாவனையாகக் காட்டுவதே சத்திய ஞானசபை. அருட் பெருஞ் சோதியை மறைத்துக் கொண்டிருக்கும் வெவ்வேறு நிறமுள்ள ஏழுதிரைகளும் தத்துவப் படலங்களே. நம்மிட முள்ள அஞ் ஞானமாகிய திரைகள் நீங்கப்பெற்றால் ஆன்ம ஒளியாகிய அருட் பெருஞ் சோதியைத் தரிசிக்கலாம் ... என்பது கருத்து. அகத்தே தாம் பெற்ற அருட்பெருஞ்சோதி அனுபவத்தையே புறத்தில் சபையாகக் காட்டினார். "திருந்தும் என் உள்ளத் திருக்கோயில் ஞான சித்திபுரம் எனச் சத்தியம் கண்டேன்," "சத்திய ஞானசபை என்னுட் கண்டனன் சன்மார்க்க சித்தியை நான் பெற்றுக் கொண்டனன்" என்பவை பெருமானாரின் திருவாக்குகள்.

## சன்மார்க்கக்கொடி 22–10–1873

முன்னைய ஞானிகள் எவரும் தம் கொள்கைக்குத் தனிக்கொடி கண்டதில்லை. வள்ளற்பெருமானார் ஒருவரே தமது மார்க்கத்திற்குத் தனிக்கொடி கண்டவர்கள். "கொடி

கட்டிக் கொண்டோமென்று சின்னம்பிடி" என்று பாடியவர்கள். பெருமானார் கண்ட் கொடிக்குச் சன்மார்க்கக் கொடி என்று பெயர். மஞ்சள், வெள்ளை ஆகிய இருநிறங் கொண்ட சன்மார்க்கக் கொடியை மேட்டுக் குப்பம் சித்தி வளாகத் திருமாளிகையில் 22-10-1873 ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசித் திங்கள் 7ஆம் நாள் செவ்வாய்க்கிழமை காலை 8 மணிக்கு முதன் முதலாக கட்டிக் காட்டி, நீண்ட உபதேசம் ஒன்றையும் செய்தருளினார்கள். பெருமானாரின் முடிந்த முடிபான கொள்கைகளைக் கொண்ட அவ்வுபதேசம் மஹோபதேசம் - பேருபதேசம் என வழங்குகின்றது.

## மரணமிலாப் பெருவாழ்வு

சன்மார்க்கத்தின் முடிவு சாகாதிருப்பதே. சாகா தவனே சன்மார்க்கி என்பது வள்ளற்பெருமானாரின் உபதேசம். "என் மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கந் தானே", "துஞ்சாத நிலையொன்று சுத்தசன்மார்க்கச் சூழலிலுண்டது சொல்லள வன்றே" என்பவை பெருமானாரின் திருவாக்குகள். பெருமானார் சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம் என்னும் மூவகைத் தேக சித்தியையும் பெற்றவர்கள். தேகசித்தி பெற்றார் உடம்புகள் நிலத்தில் வீழா. அவை வெளியாய் அருளில் கலக்கும். அவர்கள் இறைவனோடு இரண்டறக் கலப்பர். அவர்களுக்கு இனிப் பிறப்பு இல்லை. பிறந்த பிறப்பாகிய இப்பிறப்பே இறுதிப் பிறப்பு. இப் பிறவியில் பெற்ற இத்தேகமே இறுதித் தேகம். இனி ஒரு தேகம் எடுப்பதில்லை. இதுவே நித்திய தேகம். நித்திய தேகம் பெற்ற வள்ளற் பெருமானார், ஸ்ரீமுக ஆண்டு தைத்திங்கள் 19 ஆம் நாள் 30-1-1874 வெள்ளிக்கிழமை இரவு 15 நாழிகைக்கு (12 மணிக்கு) சித்திவளாகத் திருமாளிகையின் தமது திருவறையில் அருட்பெருஞ்சோதியானார்கள்.

அருட்சோதி ஆனேன்என்று அறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேன் என்று அறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேன்என்று அறையப்பா முரசு
மரணந் தவிர்ந்தேன்என்று அறையப்பா முரசு.

காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறஇயற்றும் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்அளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தான் எனக்கே
ஏற்றாலே இழிவெனநீர் நினையாதீர் உலகீர்
எந்தைஅருட் பெருஞ்ஜோதி இறைவனைச்சார் வீரே.

எல்லா உலகமும் என்வசம் ஆயின
எல்லா உயிர்களும் என்உயிர் ஆயின
எல்லா ஞானமும் என்ஞானம் ஆயின
எல்லா வித்தையும் என்வித்தை ஆயின
எல்லாப் போகமும் என்போகம் ஆயின
எல்லா இன்பமும் என்இன்பம் ஆயின
எல்லாம் வல்லசிற் றம்பலத் தென்னப்பர்
எல்லாம் நல்கிஎன் உள்ளத்துள் ளாரே!

பெற்றேன் என்றும் இறவாமை பேதம் தவிர்ந்தே இறைவன்எனை
உற்றே கலந்தான் நானவனை உற்றே கலந்தேன் ஒன்றானேம்
எற்றே அடியேன் செய்ததவம் யாரே புரிந்தார் இன்னமுதம்
துற்றே உலகீர் நீவிர்எலாம் வாழ்க வாழ்க துனிஅற்றே.

நானே தவம்புரிந்தேன் நம்பெருமான் நல்லருளால்
நானே அருட்சித்தி நாடடைந்தேன்–நானே
அழியா வடிவம் அவைமூன்றும் பெற்றேன்
இழியாமல் ஆடுகின்றேன் இங்கு.

நோவாது நோன்பெனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம்எனைப்போல் சார்ந்தவரும்–தேவாநின்
பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யார்உளர்நீ சற்றே அறை.

## வள்ளற்பெருமானாரின் பன்முகஞானம்

*சேக்கிழார் நூலாசிரியரும், உரையாசிரியரும், போத காசிரியரும், ஞானாசிரியரும் ஆவரெனத் திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சேக்கிழார் பிள்ளைத்தமிழில் பாடியுள்ளார்.*

நாடிய விரிநூல் சொற்றிடு திறனால் நன்னூலா சிரியன்
நகுபா சுரமுத லுரைசெய் தலினால் நவிலுரை யாசிரியன்
நீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்
நிலையாற் போத காசிரி யன்னிவை நிகழ்தொறு நிகழ்தொறும்
ஆடிய ஞானத் திறனுற லான் ஞானாசிரி யனுநீ யென்
றான்றோர் பலரும் புகழப் படுபவ வகில மெலாஞ் சென்று
கூடிய புகழ்சால் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர்காவல நாவல கொட்டுக சப்பாணி.

*- சப்பாணிப் பருவம் 9*

*வள்ளற்பெருமானரோ, நூலாசிரியரும், உரையாசிரியரும், போதகாசிரியரும், ஞானாசிரியரும் ஆதலொடு பதிப்பாசிரியரும் பத்திரிகாசிரியரும் ஆவார். இவ்வாறு பல்வகை ஆசிரியராய் விளங்கியதோடன்றி வியாக்கியான கர்த்தராய், சித்தமருத்துவராய், சிர்திருத்த வாதியாய், அருட் கவிஞராய், இவை அத்தனைக்கும் மேலாக அருட்பெருஞ் ஜோதியாய் விளங்கினார்.*

### நூலாசிரியர்

*மனு முறைகண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற நூல்களை இயற்றியமையான் நூலாசிரியர்.*

### உரையாசிரியர்

*ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி உரை, தொண்ட மண்டல சதகத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல் உரை முதலியவற்றைச் செய்தமையான் உரையாசிரியர்.*

## பதிப்பாசிரியர்

ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தி, தொண்ட மண்டல சதகம், சின்மயதீபிகை ஆகியவற்றைப் பதிப்பித்தமையால் பதிப்பாசிரியர்.

## பத்திரிகாசிரியர்

சன்மார்க்க விவேகவிருத்தி என்னும் பத்திரிகையைத் தொடங்கியமையான் பத்திரிகாசிரியர்.

## போதகாசிரியர்

தொழுவூர் வேலாயுத முதலியார், இறுக்கம் இரத்தின முதலியார், நரசிங்கபுரம் வீராசாமி முதலியார், கிரியாயோக சாதகராகிய பண்டார ஆறுமுக ஐயா, பொன்னேரி சுந்தரம் பிள்ளை, காயாறு ஞானசுந்தர ஐயர் ஆகிய பலருக்குப் பாடஞ் சொன்னமையான் போத காசிரியர்.

## ஞானாசிரியர்

திருவருண் ஞானத்தை அனைவர்க்கும் வாரி வழங்கிய மையான் ஞானாசிரியர்.

## வியாக்கியானகர்த்தர்

உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப்பொருள் விளக்கம், தமிழ் என்னும் சொல்லுக்கிட்ட உரை முதலிய வியாக்கியானங்களைச் செய்தமையான் வியாக்கியானகர்த்தர்.

## சித்தமருத்துவர்

தாமே பல மருந்துகளைச் செய்து பிணியாளர் பலருக்குக் கொடுத்து நோய் தீர்த்ததோடன்றிச் சிலருக்குக் கடித வாயிலாக மருந்து எழுதியது, மருந்துச் சரக்குகளின் குண அட்டவனை எழுதியது ஆகியவற்றான் சித்த மருத்துவர்.

மருத்துவத்தோடன்றி ரசவாதத்திலும் பெருமானார் வல்லவர். வைத்தியம், வாதம், யோகம், ஞானம் இவை ஒன்றுக் கொன்று தொடர்புடையவை. நம் நாட்டுச் சித்தர்கள் இவற்றில் வல்லவர்கள். பெருமானாரும் வல்லவர். பொன் செய்யும் வகையை இறைவன் தமக்கு உணர்த்தினான் என பெருமானார் ஒரு பாடலிற் கூறுகின்றார். இந்நூலுள் ரசவாதம் என்ற உபதேசக் குறிப்பையும் பொன்விளைவு என்ற திருமுகத்தையும் காண்க. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த வேறொரு திருமுகத்தில் "தற்காலம் ஒருவகை முயற்சி நிமித்தம் சுமார் ங‌ய (30) வராகனெடை பொன் வேண்டுவது. அவை நஷ்ட மாகாது, விருத்தியே யாகும். இவையும் சிவபுண்ணியம் பற்றியே" என்றெழுதி யுள்ளது முண்டு. பொன் செய்யும் ஆற்றலை ஒரு பேறாகவே பெருமானார் கூறுகின்றார்.

### சீர்திருத்தவாதி

இன்று துறைதோறும் துறைதோறும் தோன்றியுள்ள பல சீர்திருத்தங்களுக்கு வித்திட்டவர் வள்ளற் பெருமானாரே. சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத் திலும் சைவசமயத்தில் பல சீர்திருத்தங்கள் தோன்றின. 'சீர்திருத்தச் சைவம்' என்றொன்று தோன்றிற்று. சீர் திருத்தச் சைவம் தோன்றற்குக் காரணர் பெருமானாரே. பெருமானாரின் சமரச சுத்த சன்மார்க்கம் தோன்றி லதேல் சீர்திருத்தச் சைவம் தோன்றுவ தெங்கே? சமயத் துறையில் மட்டுமின்றிச் சமூக வாழ்விலும் பெரும் மாறுதல்களும் சீர்திருத்தங்களும் பெருமானாரால் ஏற்பட்டன.

இதுவரை உலகில் தோன்றிய சீர்திருத்த வாதிகளுள் தமக்கு ஒப்பும் உயர்வும் அற்றவர் பெருமானாரே. சீர்திருத்தத்தில் பெருமானார் யாருக்கும் பின்னிற்பவர்-இரண்டாமவர் - அல்லர். பெருமானார்

கூறிய சீர்திருத்தங்கள் பல. இதுவரை யாராலும் கூறப் பெறாதவை. சீர்திருத்த வானில் பெருமானார் ஒரு சூரியன். அவரை எட்டிப்பிடித்தல் இயலாது. எடுத்துக் காட்டாக ஒன்று கூறுவோம். கணவன் இறந்தால் மனைவி தாலி அறுக்க வேண்டாம் என்பது பெருமானார் கூறிய சீர்திருத்தங்களுள் ஒன்று.

இத்தகைய சீர்திருத்தங்களைச் சொன்னவர் வேறு யார்? பெருமானார் சாதாரண சீர்திருத்தவாதி யல்லர்; சீர்திருத்தவாதிகளுக் கெல்லாம் சீர்திருத்தவாதி.

## அருட்கவிஞர்

வள்ளற்பெருமானார் அருட் கவிஞர் என்பதைப் பலவாறு எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ? அதற்கு அவர் அருளிய 'திருஅருட்பா'வொன்றும் போதாதோ?

## அருள்ஞானி

வள்ளற்பெருமானார் அருள்ஞானி என்பதற்குப் பற்பல பகர்தல் வேண்டுமோ? 'திருஅருட்பிரகாச வள்ளலார்' என்று அவர் பெற்ற பேரொன்றும் போதாதோ?

பொதுவாக, நூல்செய்ய வல்லார் உரைசெய்ய வல்லாராயிருப்பதில்லை. உரைசெய்ய வல்லார் நூல்செய்ய வல்லாராயிருப்பதில்லை. செய்யுள் வல்லார் உரைநடை வல்லாரா யிருப்பதில்லை. உரைநடை வல்லார் செய்யுள் வல்லாராயிருப்பதில்லை. இயல் வல்லார் இசை வல்லாராக யிருப்பதில்லை. இசைவல்லார் இயல் வல்லாராயிருப்ப தில்லை. இலக்கியம் வல்லார் இலக்கணம் வல்லாராயிருப்ப தில்லை. இலக்கணம் வல்லார் இலக்கியம் வல்லாராயிருப்ப தில்லை. சமய வல்லார் இலக்கணவிலக்கிய வல்லராயிருப்ப தில்லை. இலக்கண விலக்கியம் வல்லார் சமயநூல் வல்லாரா

யிருப்பதில்லை. இலக்கணவிலக்கியம் வல்லாரா யிருப்போர், சமயநூல் வல்லாரராயிருப்போர் அவற்றைப் பாடஞ் சொல்ல வல்லாராயிருப்பதில்லை. எழுத்து வல்லாராயிருப்போர் பேச்சு வல்லாரா யிருப்பதில்லை. பேச்சுவல்லார் எழுத்து வல்லாரா யிருப்பதில்லை. அருளியல் வல்லார் உலகியல் வல்லாரா யிருப்பதில்லை. உலகியல் வல்லார் அருளியல் வல்லாரா யிருப்பதில்லை. இவ்வாறு ஒன்றில் வல்லார் பிறிதொன்றில் வல்லாரல்ல ராதலையே யாண்டும் காண்கிறோம். அன்றும் காண்கிறோம். இன்றும் காண்கிறோம். சென்ற நூற்றாண்டிலே - பெருமானார் காலத்திலே - நூல் செய்தல், உரைசெய்தல், பாடஞ்சொல்லுதல், பதிப்பித்தல் என்னும் துறைகளுள் ஒவ்வொன்றில் வல்லாரே பலராக இருந்தனர். 'இயற்றமிழாசிரியர்' என்றே சிலர் வழங்கப் பெற்றதைக் காணலாம். ஒன்றின் மேற்பட்ட துறைகளில் வல்லார் மிகச்சிலரே.

வள்ளற்பெருமானார் ஒருவரே செய்யுள் நூல் செய்தல், உரைநடை செய்தல், செய்யுள் நூல்களுக்கு உரை செய்தல், பாடஞ்சொல்லல், பதிப்பித்தல் எனும் பலதுறைகளிலும் வல்லராய் மொழிப்புலமை மட்டுமே யன்றி மருத்துவம் முதலிய கலைப்புலமையும் வல்லராய் இவையனைத்தினுக்கும் மேற்பட்ட அருட்புலமையும் முற்றினராய்ப் பன்முக ஞானத்தோடு ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்கினார்.

## பலவற்றில் முதன்மையும் தனிச்சிறப்பும்

முற்கூறியவாறு நூலாசிரியராய்,உரையாசிரியராய், பதிப்பாசிரியராய்,பத்திரிகாசிரியராய்,போதகாசிரியராய், ஞானாசிரியராய், வியாக்கியானகர்த்தராய், சித்த மருத்து வராய், சீர்திருத்தவாதியாய், அருட்கவிஞராய், அருண்ஞானியாய்ப் பன்முகஞானத்தோடு விளங்கிய

ஆட்கொண்ட ஆண்டவனே! இவ் வீதிவிடங்க னென்பவன் பசுங்கன்றைக் கொலை செய்தானென்பது பிரத்தியட்சமாக உண்மையென்று வெளிப்பட்ட படியால், இந்தக் குற்றவாளியின் கொலைப்பாதகந் தீரத்தக்க தண்டனை செய்வதற்குச் சக்தியில்லாத அடியேன், தேவரீர் திருவுளப் பாங்கின்படி, மேலோர் ஏற்படுத்திய தரும நூல்களில் கொலை செய்தவனைக் கொலை செய்யக் கடவரென்று விதித்திருக்கின்ற விதியின்படி, விதிமாறாட்ட முதலான குற்றங்களுக்குச் சிறிதும் இடங் கொடாமல், இவனைக் கொலை செய்யும்படி திரிகரண சுத்தியாகத் தீர்ப்பிட்டுக் கொண்டு, இதோ தேர்க்காலிலூர்ந்து கொலை செய்யத் தொடங்குகிறேன். இத்தீர்ப்பினிடத்துத் தேவரீர் திருவடி சாக்ஷியாக மனமறிந்து யாதொரு பிசகும் நேரிட்டதில்லை. என்னையு மறியாது ஏதாகிலும் குறை நேரிட்டிருக்குமானால் அதைத் தேவரீர் மன்னித்துக் கொள்ள வேண்டும். இந்தக் குற்றவாளியின் பாவாத்மாவை அப்பாபத் தினின்று நீங்கும் வண்ணந் தக்க தண்டனை செய்வித்தருளி, மறுபிறப்பிலாயினும் கடைத் தேறும் வழியைக் கடாக்ஷிக்க வேண்டும்" என்று விண்ணப் பஞ்செய்து கொண்டு, தேரிற் கட்டிய குதிரைகளை விழுந்து கிடக்கின்ற வீதிவிடங்கன் கழுத்தடியிற் சக்கர மழுந்தும்படி நேராக முடுக்கித் தேரை நடத்தினார். அப்போது தேர்ச்சக்கரமானது வீதிவிடங்கன் மேல் அழுந்திக் கறகற வென்று இழுத்துக்கொண்டு அதி வேகமாகச் செல்ல உடல் குழம்பி சின்னா பின்னப்பட்டு, நசுக்குண்டு, கையாற்பிசைந்து, ரசம் பிழிந்த மாங்கனியின் கோது போல உடல்வேறு உயிர் வேறாக இறந்தான்.

அதுகண்ட தேவர்களெல்லாம், "அருமையாகப் பெற்ற புத்திரனை நோக்காமல் புண்ணியத்தை நோக்கிய கண்ணியவானே! உனக்குச் சுபகர முண்டாவதாக" என்று வாழ்த்திக் கற்பகப் பூமாரி பொழிந்தார்கள். தேவதுந்துமிகள் அதிர்ந்தன, அந்நகரத்தாரெல்லாம், "இப்படிப்பட்ட நீதி செலுத்துகின்ற மகாராஜனை என்ன தவஞ் செய்து பெற்றுக் கொண்டோம்" என்றும், "ஐயோ! இனி எக்காலத்தில் வீதிவிடங்கனைக் காண்போம்" என்றும், இன்பக் கண்ணீரும்

துன்பக் கண்ணீரும் விட்டுக்கொண்டு நின்றார்கள். உடனே மனுச்சக்கரவர்த்தியானவர் மந்திரியின் பழிக்காகத் தம் உயிரைக் கொடுக்கத் துணிந்து தேரிலிருந்து கீழே இழிந்தார்.

## 30. இறைவன் வெளிப்படுதல்

அப்போது, ஸ்ரீகண்டர், அனந்தேசர், காலச்செந்தீயுருத்திரர், துவாதச ருத்திரர், ஏகாதச ருத்திரர், புத்தி யட்டகர், கூஷ்மாண்டர், ஆடகர் சத வுருத்திரர், அஷ்ட மூர்த்திகள், நீலலோகிதர், கங்காள கபாலர், அசுவா ரோர்கணர், அஷ்ட பைரவர், வீரபத்திரர், சக்கரதரர், நான்முகர் முதலான பதமூர்த்திகளும், கபாலிகன், அசன், புதன், வச்சிர தேகன், பிநாகி, கிருதசாதிபன், உருத்திரன், பிங்கலன், சாந்தன், க்ஷயாந்தகன், பலவான், அதிபலவான், பாசாத்தன், மகா பலவான், சுவேதன், ஜயபக்திரன், தீர்க்கபாகு, ஜலாந்தகன், மேகவாகனன், சௌமிகேசன், சடாதரன், லக்ஷ்மீதரன், ரத்நந்திரன், ஸ்ரீதரன், பிரசாதன், பிரகாசன், வித்தியாதிபன், ஈசன், சர்வஞ்ஞன், பலிப்பிரியன், சம்பு, விபு, கணாத்தியக்ஷன், கிரியக்ஷன், திரிலோசனன் முதலான பதத்தலைவர்களும்; இந்திரர், சந்திரர், சூரியர் முதலான தேவர்களும்; வசிட்டர், அகத்தியர், புலத்தியர், பராசரர், வியாசர் முதலான முனிவர்களும் ; கண்ணுவர், கருக்கர், சதானந்தர் முதலான இருடிகளும்; அசுரர், அந்தரர், ஆகாய வாசிகள், விஞ்சையர், வித்தியாதரர், கருடர், காந்தர்வர், இயக்கர், கின்னரர், கிம்புருடர், சித்தர், நிருதர், பூதர், பைசாசர், போகபூமியர், உரகர் முதலான கணங்களும்; நந்தி, பிங்கிருடி, சண்டன், பிரசண்டன், சங்கு கண்ணன், வாணன், அந்தகன், கும்போதரன், விருபாக்ஷன், முதலான பிரமத கணங்களும் சூழ்ந்து துதித்து வரவும்; பேரிகை, மத்தளம், தாளம், சங்கம், சச்சரி, தடாரி முதலான வாத்தியங்கள் முழங்கி வரவும்;

“எல்லாம்வல்ல இறைவன் வந்தான்
நல்லோர்க்கருளும் நாயகன் வந்தான்
முப்புர மெரித்த முன்னோன் வந்தான்
தப்பிலார்க் கருள்செயுந் தயாநிதி வந்தான்

வள்ளல் வந்தான் மகாதேவன் வந்தான்
எண்ணில் லெண்ணெய்போ லிருப்பவன் வந்தான்
அன்பர்க் கருளும் ஐயன் வந்தான்
இன்பங் கொடுக்கும் இறைவன் வந்தான்
முத்தொழில் நடத்தும் முதல்வன் வந்தான்
பக்தர்கள் புகழும் பதத்தோன் வந்தான்
தேவர்கள் போற்றுந் தியாகன் வந்தான்
மூவர்கள் வாழ்த்தும் முக்கணன் வந்தான்".

என்று சின்னங்கள் பிடித்து வரவும், தும்புருநாரதர் யாழிசை பாடிவரவும், உருத்திர கணிகையர் நடனஞ் செய்து வரவும், ஒற்றை வெண்குடை, சாமரம் முதலான மங்கல விருதுகள் நெருங்கி வரவும், ஆனைமுகக் கடவுளும், ஆறுமுகக் கடவுளும் இருபக்கங்களிலும் இசைந்து வரவும், உலக மாதாவாகிய உமாதேவியார் இடது பக்கத்திலிருக்க, ஜடாமகுட திரிநேத்திரகாளகண்ட சதுர்ப்புஜம் முதலானவை விளங்க, தர்ம சொரூபமாகிய இடப வாகனத்தின் மேல் சர்வ மங்கல சக்தியே திருமேனியாகக் கொண்ட தியாகராஜப் பெருமான் எழுந்தருளி, மனுச் சோழராஜனுக்கு முன் தரிசனங் கொடுத் தருளி, குளிர்ந்த நிலவு துளம்பி வீசுகின்ற புன்னகை காட்டி அரசனுக்கு ஜில்லென்றும் உடம்பும்,- உள்ளமும், உயிரும் குளிரும்படி செய்வித்து கருணையென்னும் வெள்ளம் நிறைந்து, பொங்கித் ததும்பி, பெருக்கெடுத்து, ஒளி கொண்டோங்கி மடைதிறந் தோடுகின்ற மலர் போன்ற திருக் கண்களால் அருள் நோக்கஞ்செய்து, அவ்வரசனுக்கு உண்டா யிருந்த விடாய் முழுதுந்தீர்த்து,- "நம்மிடத்து நம்பிக்கையும் பேரன்பும் வைத்து, மனுநீதி தவறாது அரசாட்சி செய்கின்ற மனுச்சோழனே! நீ நடத்துகின்ற நீதியின் பெருமையை உலகத்தவர் செவ்வையாகத் தெரிந்து கொள்ளும்படி நாமே இவ்வாறு சோதித்தோம்! இனி ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்" என்று திருவாய் மலர்ந்தருளி இறந்து கிடங்கின்ற பசுங்கன்றும்; கலாவல்லபனென்னும் மந்திரியும், வீதிவிடங்கனென்னும் இராஜகுமாரனும் உயிர் பெற்று எழுந்து இருக்கும்படி கடாக்ஷித்தருளினார்.

## 31. மாதிருக்கும் பாதியனை மன்னன் புகழ்ந் தேற்றல்

அந்தக்கணமே நித்திரை நீங்கி எழுகின்றதுபோல், இளங்கன்றானது உயிர்பெற்று எழுந்து தன் தாய்ப் பசுவினிடத்திற் சென்றது. மந்திரியும் புதல்வனும் உயிர் பெற்றெழுந்து, ஆண்டவனை வணங்கி, அருகே மலர்ந்த முகத்தோடு வந்தனை செய்து கொண்டு மகிழ்ந்து நின்றார்கள். அதுகண்டு அந்நகரத்திலுள்ள ஜனங்களும் மற்றவர்களும் தம்மை அறியாத பெருங்களியுடைய வர்களாய்ச் சிலர்; "அற்புதம்! அற்புதம்! அற்புதம்! அற்புதம்!" என்று ஆடினார்கள்; சிலர், "பண்ணிய பூசை பலித்தது, பலித்தது!" என்று பாடினார்கள்; சிலர் "சூரிய குலந் தோன்றியது! தோன்றியது! என்று துதித்தார்கள்; சிலர், "துக்கம் நீங்கியது!, சுகம் கிடைத்தது!" என்று துள்ளினார்கள்! சிலர், "குறையெல்லாந் தீர்ந்தது! குறையெல்லாந் தீர்ந்தது!" என்று கொண்டாடி னார்கள்; சிலர், "கும்பிட்ட தெய்வம் குறுக்கே வந்தது!" என்று குதித்தார்கள்; சிலர், எம்பெருமான் எதிர்ப்பட்டால் என்ன முடியாது' என்று எக்களித்தார்கள்; சிலர், ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டு ஒரு காதமட்டும் ஓடித் திரும்பினார்கள்; சிலர், "கலக்கம் தீர்ந்தது! களிப்பு வந்தது" என்று கைகொட்டினார்கள்; சிலர் தோள் தட்டிக் கொண்டும், தொடை தட்டிக்கொண்டும், முக ரோமத்தை முருக்கிக் கொண்டும், முகமலர்ந்து கொண்டும், உடல் நிமிர்த்திக்கொண்டும் உலாவி நின்றார்கள்; சிலர், "வாழ்வு வந்தது!" என்று மனம் பூரித்தார்கள்.

இப்படி அவரவர்களும் அளவில்லாத ஆனந்தமுடை யவர்களாய் இழந்துவிட்ட பொருள் எதிர்வரப் பெற்றவர்கள் போல் சந்தோஷ கோஷஞ் செய்துநிற்க, மனுச்சக்கர வர்த்தியானவர், கங்கையும், இளம்பிறையும் விளங்குகின்ற சடா மகுடத்தையும், திரிபுண்டரமுந் திலகமும் திருநோக்கும் விளங்குகின்ற நெற்றியையும், அருள் ததும்பி வழிகின்ற திரு நோக்கங்களையும், சங்கு குண்டலமணிந்து தாழ்ந்த செவி களையும், நறுங்குமிழ் போன்று விளங்குகின்ற நாசியையும்,

வேதமாகிய தெள்ளமுதத்தைக் கொள்ளை கொண்டுண்ணும் படி அன்பர்களுக்கு அருளிச் செய்கின்ற செம்பவளம் போன்ற திருவாய் மலரையும், வானவர்க்கு உயிர் கொடுத்த மணி கண்டத்தையும், கொன்றை மாலையணிந்து குலவரைகள் போலுயர்ந்த திருத்தோள்களையும், மானும் மழுவும், வ ரதமும் அபயமுங் கொண்ட மலர்க்கரங்களையும் சிவந்து மெல்லென்று திருவருள் பழுத்து ஆனந்தமொழுகிப் பத்தர்கள் மனத்தில் தித்தித்திருக்கும் பாத மலர்களையும், செம்பவள மலைபோன்ற திருமேனியையும், பச்சைக் கொடி படர்ந்தது போன்று பார்வதியார் மகிழ்ந்து விளங்கு கின்ற பாதத்தையுங் கண் குளிரக் கண்டு, களிப்படைந்து, ஆனந்த நீர் ஊற்று நீர்போல சுரந்து சுரந்து, விழுந்து விழுந்து மார்பினிடத்து வண்டலாடவும், உடல் குழைந்துபட விதிர் விதிர்த்துச் சிலிர் சிலிர்த்து, மயிர்க் கூச்செறிந்து என்பு நெக்கு விட்டுருகியும், மனங்கனிந்து கனிந்து கசிந்து கசிந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து படபடவென்று பதறிப்பதறி உருகியுருகி ஆனந்த வெள்ளத்தி லழுந்தி யழுந்திப் பரவசமாகியும், 'சிவ சங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிற்பர தற்பர சிற்குண சின்மய ' சிவ சிவ' என்ற வாய்நீர் சுரந்து பாடிப்பாடி நாக்குழறித் தழும்பேறியும், 'ஹரஹர' என்று ஆனந்தக் கூத்தாடியும், தண்டுபோல் அனந்த முறை கீழே விழுந்து விழுந்து வணங்கி உடம்பிற் புழுதி யாடியும், குளிர்ச்சி பொருந்திய சந்திர பிம்பம் போன்ற முகத்தின்கண் முத்துமாலையணிந்ததுபோல வியர்வை அரும்பி இளநகை தோன்றி மலர்ந்து விளங்கக் கைகளைக் கூப்பிச் சிரசின் மேல் வைத்துக் கொண்டு, அன்பே வடிவமாகி நின்று, "பிரமன் முதலாகிய பெரிய தேவர்களெல்லாம் அரிய தவஞ்செய்தும் கனவினுங் காண்பதற்கு அருமையாகிய கடவுளே! அன்பு அணுவளவு மில்லாத அடியேனுக்கு அருமை யாகிய திருமேனியை நனவிலே எளிதாகக் காட்டியருளிய தேவரீர் பெருங்கருணையை என்னென்று துதிப்பேன்! பொய்யுலகத்தை மெய்யென்று நம்பிப் புன்மையாகிய போகத்தை விரும்பி, புவியாண்டு, மீளா நரகில் விழத் துணிந்திருந்த அஞ்ஞானத்தை யுடைய அடியேனையும் ஒரு பொருளாகத் திருவுள்ளத்திற்

கொண்டு காட்சி கொடுத்தருளிய கருணைக் கடலே! கண்ணுண் மணியே! கரும்பின் சுவையே! கருணாநிதியே! தேவரீர் திருவருட் பெருமையை என்னென்று சொல்வேன்!

யான் என்கின்ற ஆணவப்பேயும்
என தென்கின்ற இராட்சதப் பேயும்
மாயை யென்கின்ற வஞ்சகப் பேயும்
பெண்ணாசை யென்கின்ற பெரும் பேயும்
மண்ணாசை யென்கின்ற மானிடப் பேயும்
பொன்னாசை யென்கின்ற பொல்லாப் பேயும்
குரோத மென்கின்ற கொள்ளிவாய்ப் பேயும்
உலோப மென்கின்ற உதவாப் பேயும்
மோக மென்கின்ற மூடப் பேயும்
மத மென்கின்ற வலக்காரப் பேயும்
மாச்சரிய மென்கின்ற மலட்டுப் பேயும்

மனப் பேயோடு கூடி இரவும் பகலும் ஆட்ட, ஆடி ஆடியிளைக்கின்ற அடியேனைக் காத்தருளத் திருவுள்ள மிரங்கித் தரிசனமருளி, துன்பத்தை நீங்கி இன்பத்தை யளித்த எம்பெருமானே! - என்னாண்டவனே! - என் தந்தையே! - என் தாயே! - என் குருவே! - என் தெய்வமே! - என் குலதெய்வமே !- என்உயிர்த்துணையே! - என் அறிவுக்கறிவாகிய இறைவனே! - தேவரீர் திருவடிப் புகழை வேதங்களுமறியாது விழித்துக் கொண்டு தேடித் தேடி இளைக்கின்றனவென்றால், கிருமி கீடங்களிலுங் கீழ்ப்பட்ட அசேதனனாகிய அடியேன் எப்படி அறிந்து துதிப்பேன்! தேவரீர் திருவடிக்காட்சி பலிக்கும்படி செய்வித்த இந்தப் பசுவுக்கும் கன்றுக்கும் என்னை அடிமையாகக் கொடுப்பேன்: அல்லது வேறென்ன கைமாறு செய்வேன்! தேவரீர் திருவடிக் காட்சி பலிக்கும்படி செய்வித்த இந்தப் பசுவுக்கும், கன்றுக்கும் என்னை அடிமையாகக் கொடுப்பேன் அல்லது வேறென்ன கைம்மாறு செய்வேன்! தேவரீர் திருமேனிக் காட்சி கிடைப்பதற்குக் காரணமாகிய வீதிவிடங்கனென்னும் புத்திரன் இன்றுதான் எனக்குப் புத்திரனாயினான்! தேவரீரது திருவருட் கோலத்தைக் காணப்பெற்ற அடியேனுக்கு இனி என்ன குறை இருக்கின்றது!

- அன்பர்களுக்கு இன்பமளிக்கின்ற ஆண்டவனே! - தேவரீர் கிருபா நோக்கஞ் செய்யப்பெற்று உடல் பூரித்தேன்- உள்ளங் குளிர்ந்தேன்! - உயிர் தழைத்தேன்! - பசுங்கன்றும் மந்திரியும் மைந்தனும் உயிர் பெற்று எழுந்திருக்கவும் வரம் பெற்றேன்! - வாழ்வடைந்தேன்! - துக்க மெல்லாம் நீங்கினேன்,- சுகப் பட்டேன்!- மனத்துக்கு அடங்காத மகிழ்ச்சி கொண்டு நின்றேன்!, இனி அடியேனுக்குத் தேவரீர் திருவடியி னிடத்துத் தவறாத தியானமும், - சலியாத அன்பும் தந்தருளி என்னை அடிமை கொள்ள வேண்டும், - குற்றம் செய்தாலும் குணமாகக் கொள் கின்ற குணக்குன்றே! - பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த பரம் பொருளே!- புலி முலையைப் புல்வாய்க்கு ஊட்டிய புண்ணிய மூர்த்தியே!- கல்லடிக்கும் வில்லடிக்குங் கருணைபுரிந்த கருத்தனே! திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளிய தியாகராஜப் பிரபுவே! போற்றி! போற்றி!!" என்று தோத்திரஞ் செய்து தொழுது நின்றார்.

32. பெருமான் அருள் புரிந்து மறைய
அரசன் ஆலயம் புகுந்து வணங்கல்

அரசன் செய்த தோத்திரங்களைத் திருச்செவி ஏற்றுக் கொண்டு தியாராஜப் பெருமான், "நம்மிடத்தில் அன்புள்ள அரசனே, நீ இன்னும் நோயற்ற வாழ்வுங் குறைவற்ற செல்வமும் பெற்று! நமது அருளே துணையாகக் கொண்டு, இவ்வுலகத்தை யெல்லாம் ஒரு குடையின்கீழ் ஆண்டு, மெய்யறிவு விளங்கி மாறாத மகிழ்ச்சியோடிருக்கக் கடவாய்! பின்பு எக்காலத்தும் மீளாத பேரானந்த போகத்தை நாம் தருவோம்" என்று அருள் புரிந்து கணங்களுடன் அந்தர்த் தானமாக எழுந்தருளினார்.

அது கண்டு மனுச்சக்கரவர்த்தியானவர், பின்பும் கீழ்விழுந்து நமஸ்கரித்துத் தொழுது, தோத்திரம் செய்து கொண்டு, அப்பசுவையுங் கன்றையும் உபசாரத்துடன் நல்ல புல்லுள்ள இடங்களில் மேய்த்து மிகுந்த சுகத்தி லிருக்கும்படி செய்வித்துக் கலாவல்லபனைக் கட்டி யணைத்துக் கொண்டு, " என் புத்திரன் பழிக்கு ஈடாகச் செய்தற்கரிய செய்கையைச் செய்துகொண்ட அன்புள்ள அமைச்சனே! உன்போல் எனக்கு

இனியவர்கள் உண்டோ!" என்று உபசரித்து: பின்பு வீதிவிடங்க னென்னும் மைந்தனை எடுத்து மடிமேல்வைத்து, முத்தங்கொடுத்து, உச்சி மோந்து, "யான் செய்த புண்ணியத் தால் கிடைத்த புத்திரனே! உன்னாலல்லவோ உயர்வை யடைந்தேன்", என்று உபசரித்து, பின்பு மைந்தனும் மந்திரியும் தாமுமாகக் கமலாலயம் என்னும் கோயிலுக்குச் சென்று, ஆசாரத்தோடும் அன்போடும் விதிப்படி சிவபெருமானைத் தரிசனம் செய்து, அபிஷேகாதி சிறப்புகளும் அநேகம் திருப்பணிகளும் செய்வித்துத் தொழுது, வணங்கித் துதித்து, வலங்கொண்டு விடை கொண்டு புறப்பட்டு, அந் நகரத்திலுள்ள ஜனங்களெல்லாம் மனங்களித்து வாழ்த்திப் புகழும்படி மங்கலவாத்தியங்கள் முழுங்க, வீதியை வலமாக வந்து, அஷ்ட மங்கலங்களேந்திய சுமங்கலிகளும் அந்தணர் அமைச்சர் முதலானவர்களும் வாழ்த்தி மங்கலச் செய்கை களோடு எதிர்கொள்ள அரண்மனையிற் சென்று வேதியர், துறவினர், விருந்தினர், உறவினர் முதலானோர்களுக்கு அவரவர்க்குத் தக்க வரிசைகளைச் செய்து மகிழ்வித்து, கற்பு நிலை தவறாத மனைவியார் மனங்குளிர்ந்து களிக்கும்படி மைந்தனைக் காண்பித்து, மந்திரி முதலானவர்கள் சூழச் சிவானுக்கிரகத்தால் சிங்கா சனாதிபதியாய், உலகத்தை யெல்லாம் ஒரு குடைநிழலில் வைத்து அறநெறிப்படியே அரசாட்சி செய்திருந்தார்.

## வாழ்த்து

### நேரிசை வெண்பா

வாழி மனுச்சோழர் வாழி யவர்மைந்தன்
வாழியவர் மந்திரியாம் வல்லவனும்—வாழி யவர்
செங்கோன் முறையவர்தஞ் சீர்கேட் பவர்வாழி
எங்கோன் பதம் வாழியே.

திருச்சிற்றம்பலம்.

மனுமுறை கண்ட வாசகம் முற்றிற்று.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சுத்த சன்மார்க்கத்தின் முதற்சாதனமாகிய

# 2. ஜீவகாருணிய ஒழுக்கம்

## முதற்பிரிவு

### ஜீவகாருணிய ஒழுக்கமே கடவுள் வழிபாடு

உலகத்தில் மனிதப் பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் இந்தப் பிறப்பினால் அடையத்தக்க ஆன்ம லாபத்தை காலமுள்ளபோதே அறிந்து அடைய வேண்டும்.

***1. அந்த ஆன்ம லாபம் எது? என்று அறியவேண்டில்:***

எல்லா அண்டங்களையும், எல்லாப் புவனங்களையும், எல்லாப் பொருள்களையும், எல்லா ஜீவர்களையும், எல்லா ஒழுக்கங்களையும், எல்லாப் பயன்களையும், தமது பூரண இயற்கை விளக்கமாகிய 'அருட்சத்தியால்' தோன்றி விளங்க விளக்கஞ் செய்விக்கின்ற, இயற்கை உண்மை வடிவினராகிய, 'கடவுளின்' பூரண இயற்கை இன்பத்தைப் பெற்று,

எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எவ்வளவும் தடைபடாமல் வாழ்கின்ற 'ஒப்பற்ற பெரிய வாழ்வே' இந்த மனிதப் பிறப்பினால் அடையத்தக்க ஆன்ம லாபம் என்று உண்மையாக அறிய வேண்டும்.

***2. இயற்கை இன்பத்தைப் பெற்றுத் தடைபடாமல் வாழ்கின்ற அந்தப் பெரிய வாழ்வை எதனால் அடையக்கூடும்? என்று அறியவேண்டில்:***

கடவுளின் இயற்கை விளக்கமாகிய 'அருளைக் கொண்டே' அடையக்கூடும் என்று அறியவேண்டும்.

***3. கடவுளின் இயற்கை விளக்கமாகிய 'அருளை' எதனால் பெறக்கூடும்? என்று அறியவேண்டில்:***

ஜீவகாருணிய ஒழுக்கத்தினால் கடவுள் அருளைப் பெறக்கூடுமல்லது, வெறெந்த வழியாலும் சிறிதும் பெறக்கூடா தென்று உறுதியாக அறிதல் வேண்டும்.

### 4. கடவுள் அருளை ஜீவகாருணிய ஒழுக்கத்தினால் பெறக்கூடு மல்லது வேறெந்த வழியாலும் பெறக்கூடாதென்பது எப்படி என்னில்:

அருளென்பது - கடவுள் தயவு, கடவுள் இயற்கை விளக்கம். ஜீவகாருணியமென்பது - ஜீவர்கள் தயவு, ஜீவர்கள் ஆன்ம இயற்கை விளக்கம். இதனால் தயவைக் கொண்டு தயவைப் பெறுதலும் விளக்கத்தைக் கொண்டு விளக்கத்தைப் பெறுதலுங் கூடும். வேறொன்றினால் பெறக்கூடாமை அனுபவமாகலின், ஜீவகாருணியத்தைக் கொண்டு அருளைப் பெறுதல் கூடும். வேறொன்றினாலும் பெறக்கூடாமை நிச்சயம். இதற்கு வேறு பிரமாணம் வேண்டாமென்று அறிய வேண்டும்.

அருளைப் பெறுவதற்கு ஜீவகாருணியமே வழி யாதலால், ஞான வழி என்பதும் சன்மார்க்கம் என்பதும், ஜீவகாருணிய ஒழுக்கம் என்றும் - அஞ்ஞான வழி என்பதும் துன்மார்க்கம் என்பதும் ஜீவகாருணிய ஒழுக்கமில்லாமை யென்றும் அறியப்படும்.

ஜீவகாருணியம் விளங்கும்போது அறிவும் அன்பும் உடனாக நின்று விளங்கும்; அதனால் உபகாரசத்தி விளங்கும். அந்த உபகார சத்தியால் எல்லா நன்மைகளும் தோன்றும்.

ஜீவகாருணியம் மறையும்போது அறிவும் அன்பும் உடனாக மறையும் - அதனால் உபகார சத்தி மறையும் - உபகார சத்தி மறையவே எல்லாத் தீமைகளும் தோன்றும்.

ஆகலின், புண்ணிய மென்பது - ஜீவகாருணிய மொன்றேயென்றும், பாவ மென்பது - ஜீவகாருணிய மில்லாமை யொன்றே யென்றும் அறியப்படும்.

ஜீவகாருணிய ஒழுக்கத்தினால் வரும் விளக்கமே கடவுள் விளக்கமென்றும், ஜீவகாருணிய ஒழுக்கத்தினால் வரும் இன்பமே கடவுள் இன்பமென்றும்: - இவ் விளக்கத்தையும் இன்பத்தையும் பலகால் கண்டு அனுபவித்துப் பூர்த்தியடைந்த சாத்தியர்களே ஜீவன் முத்தரென்றும், அவர்களே கடவுளை அறிவால் அறிந்து கடவுள்மயம் ஆவார்கள் என்றும் சத்தியமாக அறிய வேண்டும்.

5. ஆனால், ஜீவகாருணிய ஒழுக்கம் என்பதென்? எனில்: ஜீவர்களுக்கு ஜீவர்கள் விஷயமாக உண்டாகின்ற ஆன்ம உருக்கத்தைக் கொண்டு தெய்வ வழிபாடு செய்து வாழ்தல் என்றறிய வேண்டும்.

***6. ஜீவர்கள் விஷயமாக ஆன்ம உருக்கம் எப்போது உண்டாகும்?***

ஜீவர்கள் பசி, தாகம் பிணி , இச்சை எளிமை, பயம், கொலை இவைகளால், துக்கத்தை அனுபவிக்கக் கண்ட போதாயினும் கேட்ட போதாயினும்- இவ்வாறு உண்டாகு மென்று அறிந்த போதாயினும் - ஆன்ம உருக்கம் உண்டாகுமென்று அறியவேண்டும்.

***7. ஜீவகாருணியம் உண்டாவதற்கு உரிமை எது? என்னில்;***

ஜீவர்களெல்லாம் - ஒரு தன்மையாகிய இயற்கையுண்மை ஏக தேசங்களாய்ச் சர்வ சக்தியுடைய கடவுளால் சிருஷ்டிக்கப் பட்டபடியால் ஓர் உரிமையுள்ள சகோதரர்க ளேயாவர். சகோதரர்களுள் ஒருவர் ஒரு ஆபத்தால் துக்கப்படு கின்ற போதும், துக்கப்படுவாரென்று அறிந்த போதும் - அவரைத் தமது சகோதரரென்று கண்ட மற்றொரு சகோதரருக்கு உருக்க முண்டாவது சகோதர உரிமையாகலின், ஒரு ஜீவன் துக்கத்தை அனுபவிக்கக் கண்ட போதும், துக்கப்படுமென்று அறிந்த போதும் மற்றொரு ஜீவனுக்கு உருக்க முண்டாவது; 'பழைய ஆன்ம உரிமை' யென்று அறிய வேண்டும்.

***8. ஜீவர்கள் துக்கப்படுகின்றதைக் கண்டபோதும், சிலர் ஜீவகாருணியமில்லாமல் கடின சித்தர்களா யிருக்கின்றார்கள்; இவர்களுக்குச் சகோதர உரிமை யில்லாமற் போவது ஏன்? என்னில்;***

துக்கப்படுகின்றவரைத் தமது சகோதரரென்றும், துக்கப்படுகின்றாரென்றும், துக்கப்படுவாரென்றும், அறியத் தக்க ஆன்ம அறிவு என்கிற கண்ணானது அஞ்ஞான காசத்தால் மிகவும் ஒளி மழுங்கின படியாலும், அவைகளுக்கு உபகாரமாகக் கொண்ட மனம் முதலான உபநயனங்களாகிய கண்ணாடிகளும் பிரகாச பிரதிபலிதமில்லாமல் தடிப்புள்ள

வைகளாக இருந்த படியாலும் கண்டறியக் கூடாமையாயிற்று. அதனால் சகோதர உரிமையிருந்தும் ஜீவகாருணியம் உண்டாகாமல் இருந்த தென்று அறியவேண்டும். இதனால் ஜீவகாருணியமுள்ளவர், ஆன்ம திருஷ்டி விளக்க முள்ளவரென்று அறியப்படும்.

***9. ஜீவர்களுக்கு பசி, தாகம், பயம் முதலியவற்றால் வரும் துன்பங்களெல்லாம், மனம் கண் முதலிய கரணேந்திரிய அனுபவங்களல்லது, ஆன்ம அனுபவங்களல்ல, அதனால் ஜீவகாருணியம் கொள்வதில் விசேஷ பிரயோசனம் இல்லையே? என்னில்;***

இந்தத் தூலதேகத்தில், ஜீவனாக இருக்கின்ற ஆன்மாவும், அறிவுக் கறிவாயிருக்கின்ற கடவுள் இயற்கை விளக்கமும் தவிர, கரணம், இந்திரியம் முதலிய மற்றவைகளெல்லாம் கருவிகளாகிய தத்துவ சடங்களே யல்லது சித்துக்களல்ல. ஆகலில், சுக துக்கங்களைச் சடங்கள் அனுபவிக்க அறியா. செம்மண் - சந்தோஷித்தது, துக்கித்தது என்று சொல்லப்படாது அதுபோல், மனம் சந்தோஷித்தது, துக்கித்தது என்று சொல்லப்படாது. செம்மண்ணினால் தேக வாழ்க்கைக்கு வீடு கட்டிக் கொள்வது போல மனம் முதலான கரணேந்திரியங்களால் ஜீவ வாழ்க்கைக்குக் கடவுளால் கட்டிக் கொடுக்கப்பட்ட தேகம் ஒரு சிறிய வீடாகும். இன்ப துன்பங்களை வீட்டிலிருக்கின்றவன் அனுபவிப் பானல்லது, வீடு அனுபவிக்க மாட்டாது. அன்றியும் காசத்தினால் ஒளி மழுங்கப்பட்டு உப நயனங்களாகிய கண்ணாடிகளால் பார்க்கின்ற கண்கள் துன்ப விஷயத்தைக் கண்டபோது அக்கண்கள் நீர் சொரியுமே யல்லது கண்ணாடி நீர் சொரிய மாட்டாது. ஆகலில், ஆன்ம திருஷ்டிக்கு உபநயனங்களாக இருக்கின்ற மனம்முதலான கருவிகள் சுகதுக்கங்களை அனுபவிக்க மாட்டாது. ஆன்மாவே அனுபவிக்குமென்று அறிய வேண்டும்.

***10. ஒரு ஜீவனுக்குச் சுகம் நேரிட்டபோது மனம் மகிழ்கின்றது; துக்கம் நேரிட்டபோது மனம் தளர்கின்றது; ஆகலில் சுகதுக்கங்களை அம்மனம் அனுபவிப்பதாக அறியப் படாதோ? என்னில்;***

அறியப்படாது, பளிங்கினாற் செய்த வீட்டினுள் இருக்கின்ற வீட்டுத் தலைவனுடைய தேக விளக்கமும், தேகச் சோர்வும், அந்தப் பளிங்கு வீட்டில் பிரதி பலித்துப் புறத்தில் தோன்றுவது போலவும், கண்களில் மலர்ச்சியும், சோர்வும் அக்கண்களிலிட்ட உபநயனங்களில் பிரதிபலித்துப் புறத்தில் தோன்றுவது போலும், சுகதுக்கங்களால் ஆன்மாவுக்கு உண்டாகின்ற மகிழ்ச்சியுந் தளர்வும், மனம் முதலான கரணேந் திரியங்களில் பிரதிபலித்துப் புறத்தில் தோன்று கின்றன. ஆகலில் சுக துக்கங்கள் ஆன்மாவுக்கே அனுபவமென்றும், சுக துக்கங்களை அறிந்து அனுபவிப்பதற்குக் கரணேந்திரியங்கள் ஆன்மாவுக்கு உபகாரக் கருவிகளாகுமென்றும் அறிய வேண்டியது.

***11. கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவர்களில் அநேகர் பசி, தாகம், பயம் முதலியவற்றால் மிகவும் துன்பப்படுகிறது ஏன்? எனில்;***

முன் தேகத்தில் ஜீவகாருணிய ஒழுக்கத்தை விரும்பாமல் கடின சித்தர்களாகித் துன்மார்க்கதில் நடந்த ஜீவர்களாதலால், கடவுள் விதித்த அருளாக்கினைப்படி, பசி, தாகம், பயம் முதலியவற்றால் மிகவுந் துன்பப்படுகிறார்களென்று அறிய வேண்டும்.

***12. முன் தேகம் உண்டென்பது எப்படி? என்னில்;***

ஒரு வீட்டில் குடிக்கூலி கொடுத்துக் குடித்தனஞ் செய்ய வந்த சமுசாரி அதற்கு முன் வேறொரு வீட்டில் குடிக்கூலி கொடுத்துக் குடித்தனம் செய்திருந்தானல்லது, வீடில்லாமல் குடித்தனஞ் செய்யமாட்டானென்றும், இப்போது வந்த வீட்டிலும் கலகம் நேரிட்டால் பின்னும் வேறொரு வீட்டில் குடிபோவான் என்றும் அறிவதுபோல், இந்தத் தேகத்தில் ஆகாரக் கூலி கொடுத்துக் குடியிருக்க வந்த ஜீவன், இதற்கு முன்னும் வேறொரு தேகத்தில் அந்தக் கூலியைக் கொடுத்து ஜீவித்திருந்தானல்லது, தேகமில்லாமல் ஜீவித்திருக்க மாட்டானென்றும், இந்தத் தேகத்திலும் கலகம் நேரிட்டால் பின்னும் வேறொரு தேகத்தில் குடிபோவானென்றும், அறியவேண்டும். ஆதலால், முன்னும் பின்னும் ஜீவர்களுக்குத் தேகங்கள் நேரிடும் என்று அறிய வேண்டும்.

***13. ஜீவர்கள் முன்தேகத்தில் செய்த பாப கர்மங்கள் இந்தத் தேகத்திலும் வருமென்பது எப்படி? என்னில்;***

ஒரு சமுசாரி முன் குடித்தனஞ் செய்திருந்த வீட்டில் தன் தலைவன் கட்டளைப்படி நடவாமல் துன்மார்க்கர்களை வருவித்து அவர்களோடு கூடிப் பழகியிருந்தானானால் அந்தச் சமுசாரி அந்த வீட்டை விட்டு வேறொரு வீட்டில் குடிவந்த காலத்திலும் அந்தத் துன்மார்க்கர்கள் இந்த வீட்டிலும் வந்து, அவனுடன் பழக்கஞ் செய்வார்கள். அதுபோல, ஒரு ஜீவன் முன் குடியிருந்த தேகத்தில், கடவுள் கட்டளைப்படி நடவாமல் துன்மார்க்கத்தால் பாவ கர்மங்களை விரும்பிச் செய்திருந் தானானால், அந்த ஜீவன் வேறொரு தேகத்தில் வந்தபோதும் அந்தப் பாவகர்மங்கள் இப்போது வந்த தேகத்திலும் வந்து அந்த ஜீவனைச் சேருமென்று அறிய வேண்டும்.

***14. முன் பிறப்பில் ஜீவகாருணிய ஒழுக்கத்தை விட்டுத் துன்மார்க்கத்தில் நடந்த ஜீவர்களை இந்தப் பிறப்பில் பசி, தாகம், பயம் முதலியவற்றால் துக்கப்படச் செய்வது, கடவுள் அருளாக்கினை நியதி யென்றால் அந்த ஜீவர்கள் விஷயத்தில் காருணியம் வைத்து ஆகாரம் முதலியவை கொடுத்து அவர்கள் துக்கத்தை மாற்றுவது கடவுள் அருளாக்கினைக்கு விரோத மாகாதோ? என்னில்;***

ஆகாது. அரசன் தன் கட்டளைக்கு முழுவதும் விரோதித்து, கால்களுக்கு விலங்கிடப்பட்டுச் சிறைச்சாலையில் இருக்கின்ற பெரிய குற்றவாளிகளுக்கும் தன் சேவகர்களைக் கொண்டு ஆகாரங் கொடுப்பிக்கின்றான். அதுபோல், கடவுள் தன் கட்டளைக்கு முழுவதும் விரோதித்துப் பலவகையால் பந்தஞ் செய்யப்பட்டு நரகத்திலிருக்கின்ற பாவிகளுக்கும் தம் பரிவார தேவர்களைக் கொண்டு ஆகாரங் கொடுப்பிக்கின்றார். அரசன் தன் கட்டளைப்படி நடவாமல் வேறுபட்ட சாதாரண குற்றமுடையவர்களைத் தன்னால் அவர்கள் பெறத்தக்க லாபத்தைப் பெறவொட்டாமல் உத்தியோகத்தினின்றும் நீக்கி, அவர்களுக்கு நல்லறிவு வருவிக்கின்ற நிமித்தம் அவ்விடத்தை விட்டு வேறிடங்களில் வெளிப்படுத்துகிறான். அவர்கள் உத்தியோகம் இழந்தபடியால், சுகபோஜன முதலிய போகங்களையிழந்து, ஊர்ப்புறங்களிற் போய் ஆகாரம்

முதலியவை குறித்து அலைந்து வருந்துகின்ற போது, தயவுள்ளவர்கள் கண்டு, ஆகார முதலியவை கொடுக்கின்றார்கள். அரசன் அதை கேட்ட காலத்திலும், கண்ட காலத்திலும், கொடுத்தவர்களை இரக்கமுள்ள நல்ல சமுசாரிகளென்று சந்தோஷித்து உபசரிக்கின்றானே யல்லது கோபிக்கின்றானில்லை.

அதுபோல் கடவுள் தம் கட்டளைப்படி நடவாத சாதாரண குற்றமுடைய ஜீவர்களைத் தமது சத்தியால் அவர்கள் பெறத்தக்க சுகங்களைப் பெறவொட்டாமல் தாம் கொடுத்த சௌக்கிய புவன போகங்களை விடுத்து, அந்த ஜீவர்களுக்கு நல்லறிவு வருவிக்கும் நிமித்தம் அந்தத் தேகத்தினின்றும் நீக்கி வேறொரு தேகத்தில் விடுகின்றார். அந்த ஜீவர்கள் சௌக்கிய புவன போகங்களை இழந்தபடியால், சௌக்கிய போஜன முதலியவற்றை இழந்து, வேறு வேறிடங்களில் ஆகார முதலியவை இல்லாமல் வருந்தும் போது, தயவுள்ளவர்கள் அந்த வருத்தத்தைக் கண்டு ஆகார முதலியவை கொடுத்தால் அப்படிக் கொடுத்தவர்களை நல்ல இரக்கமுள்ளவர்கள் மேன்மேலும் சுகத்தை அடையக் கடவார்களென்று சந்தோஷித்து உபசரிப்பாரல்லது கோபிக்கமாட்டார். ஆதலால், கடவுள் அருளாக்கினைக்கு ஜீவர்களிடத்து ஜீவர்கள் காருணியம் வைப்பதே சம்மதமென்று உண்மையாக அறியவேண்டும்.

***15. இந்த ஜீவகாருணியத்தால் இகலோக ஒழுக்கம் வழங்குகின்றது ஜீவகாருணியம் இல்லையாகில் இகலோக ஒழுக்கம் எவ்வளவும் வழங்கமாட்டாதென்று அறிய வேண்டும். எப்படி? என்னில்;***

ஜீவகாருணியமில்லாதபோது - அறிவும் அன்புந் தோன்றா; அவைதோன்றாத போது, கண்ணோட்டமும், ஒருமையும், உபகாரமும் விளங்கா; அவை விளங்காதபோது வலிய ஜீவர்களால் எளிய ஜீவர்க ளொழுக்கம், பொறாமை முதலானவைகளால் தடைப்பட்ட ழிந்துபோம். பின்பு வலிய ஜீவர்கள் ஒழுக்கங்களும், தாமச ஒழுக்கங்களாகி ஒருவ ரொழுக்கத்தால் மற்றொருவ ரொழுக்கம் மதத்தினாற் சோர்வடைந்து மாறுபட்டழிந்து போம்.

ஜீவகாருணிய ஒழுக்கஞ் சிறிதுமில்லாத புலி, சிங்கம் முதலிய மிருகங்கள் வழங்குகின்ற காட்டில் இகலோக ஒழுக்கம் வழங்கவேயில்லை. அதுபோல், ஜீவகாருணிய மில்லாத மனிதர்கள் வழங்கு மிடத்திலும் இகலோக ஒழுக்கம் வழங்கவே மாட்டாதென்று அறியவேண்டும்.

***16. பரலோக ஒழுக்கம் ஜீவகாருணியத்தால் வழங்குகின்றது. அது இல்லையாயின் பரலோக ஒழுக்கமும் வழங்கமாட்டாது எப்படி? என்னில்:***

ஜீவகாருணியம் இல்லாதபோது அருள் விளக்கம் தோன்றாது. அது தோன்றாதபோது, கடவுள் நிலை கைகூடாது. அது கூடாத போது, முத்தியின்பம் ஒருவரும் அடைய மாட்டார்கள். அடையாத பட்சத்தில், பரலோக ஒழுக்கம் வழங்கவே மாட்டாதென்று அறியவேண்டும்.

***17. ஜீவகாருணிய ஒழுக்கம் மிகவும் வழங்காமையால், துன்மார்க்கப் பிறவியே பெருகியெங்கும்புல்லொழுக்கங்களே வழங்குகின்றன; எப்படி? எனில்;***

ஜீவகாருணிய மில்லாத கடின சித்தர்களெல்லாம் அவரவர் கடின செய்கைக்குத் தக்கப்படி, சிலர் நரக வாசிகளாகவும்; சிலர் சமுத்திர வாசிகளாகவும், சிலர் ஆரணிய வாசிகளாகவும்; சிலர் புலி, கரடி, சிங்கம், யாளி, யானை, கடமை, கடா பன்றி, நாய், பூனை, முதலிய துஷ்ட மிருகங்களாகவும்; சிலர் காக்கை, கழுகு முதலிய பட்சி சண்டாளங்களாகவும்; சிலர் எட்டி, கள்ளி முதலிய அசுத்த தாவரங்களாகவும் பிறந்திருக்கின்றார்கள். ஆதலால், புல்லொழுக்கங்களே மிகவும் வழங்குகின்றன என்றறிய வேண்டும்.

ஜீவகாருணியம் கடவுளருளைப் பெறுவதற்கு முக்கிய சாதனமென்பதுமல்லாமல், அதுவே அந்த அருளின் ஏகதேச விளக்கமென்றும் அறிய வேண்டும். ஜீவகாருணியம் ஆன்மாக்களின் இயற்கை விளக்கம் ஆதலால், அந்த இயற்கை விளக்கமில்லாத ஜீவர்களுக்குக் கடவுள் விளக்கம் அகத்திலும் புறத்திலும் வெளிப்படவே மாட்டாது.

***18. ஜீவகாருணியத்திற்கு முக்கியமான லக்ஷியம் எது? என்னில்;***

ஆன்மாக்களெல்லாம் இயற்கை உண்மை ஏக தேசங்களாயும் இயற்கை விளக்கமாகிய அருள் அறிவுக்கறிவாய் விளங்குவதற்கு ஒற்றுமை உரிமை இடங்களாயும் இருக்கின்றன வென்றும், அந்த ஆன்மாக்கள் ஜீவர்களாகி, அதிகரிப்பதற்குப் பூத காரியதேகங்களே உரிமையாக இருக்கின்றன வென்றும், அந்த தேகங்களில் ஆன்மாக்கள் ஜீவர்களாகி, அதிகாரியாவிடில் ஆன்ம விளக்கம் மறைபடுமென்றும்,

அதனால் அருள் விளக்கம் வெளிப்படாதென்றும் அப்போது மூடமுண்டாகுமென்றும், அதுவே ஆன்மாக்களுக்குப் பந்தமாகுமென்றும், அது பற்றி அவசியம் பூதகாரிய தேகம் வேண்டு மென்றும், பூதகாரிய தேகங்களுக்கு மாயை முதற் காரணமாததால், அந்த மாயையின் விகற்பஜாலங்களாகிய பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை என்பவைகளால் அந்தத் தேகங்களுக்கு அடிக்கடி அபாயங்கள் நேரிடுமென்றும், அப்படி அபாயங்கள் நேரிடாமல் கரணேந்திரிய சகாயங்களைப் பெற்றதம் அறிவைக் கொண்டு சர்வ ஜாக்கிரதையோடு முயற்சி செய்து தடுத்துக் கொள்வதற்குத் தக்க அற்ப சுதந்தரம் ஜீவர்களுக்கு அருளாற் கொடுக்கப்பட்ட தென்றும், அந்தச் சுதந்தரத்தைக் கொண்டு ஜீவர்களெல்லாம் தேகங்களிலிந்து அபாயங்களை நீக்கி ஆன்ம லாபத்தைப் பெறுவதற்கு முயற்சி செய்யக் கடவரென்றும், ஊழ்வகையாலும்,அஜாக்கிரதையாலும் பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை என்பவைகளால் வரும் அபாயங்களை நிவர்த்தி செய்து கொள்ள மாட்டாமல் வருந்துகின்ற ஜீவர்கள் விஷயத்தில் அவைகளை நிவர்த்தி செய்விக்கத் தக்க சுதந்தர முள்ள ஜீவர்கள் காருணியத்தால் நிவர்த்தி செய்ய வேண்டுமென்றும்;

## அபர ஜீவகாருணியம்

அப்படி நிவர்த்தி செய்விப்பதில் பசியினால் வருந் துன்பமும் கொலையினால் வருந்துன்பமும் தவிர மற்றவைகளால் வருந்துன்பங்களை மாற்றுவது அபர ஜீவகாருணியம். ஆதலால் இவ்வுலக இன்பத்தை மாத்திரம் சிறிது உண்டு பண்ணுமென்றும்;

**பர ஜீவகாருணியம்**

பசியினால் வரும் துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் நிவர்த்தி செய்விப்பது பர ஜீவகாருணியம், ஆதலால் இவ்வுலக இன்பங்களையும், அளவிறந்த சித்தி இன்பங் களையும் எக்காலத்தும் அழியாத முத்தி இன்பத்தையும் அருளால் அடையப் படுமென்றும்; ஊழ் வகையாலும் அஜாக்கிரதையாலும் அன்னிய ஜீவர்களுக்கு நேரிடுகிற அபாயங்களை நிவர்த்தி செய்விப்பதற்குத் தக்க சுதந்தரமும், அறிவு மிருந்தும், அவ்வாறு செய்யாமல் வஞ்சித்தவர்களுக்கு, இவ்வுலக இன்பத்தோடு மோக்ஷ இன்பத்தை அனுபவிக்கின்ற சுதந்தரம் அருளால் அடையப்படுவதில்லை யென்றும் தற்காலத்தில் அனுபவிக்கின்ற புவனபோக சுதந்தரங்களையும் இழந்து விடுவ ரென்றும் கடவுள் வேதத்தில் விதித்திருக்கின்றபடியால் ஊழ் வகையாலும் அஜாக்கிரதையாலும் பசி, கொலை என்பவைகளால், வரும் அபாயங்களை நிவர்த்தி செய்து கொள்ளத்தக்க அறிவும் சுதந்தரமுமில்லாத ஜீவர்கள் விஷயத்தில் அவைகளை நிவர்த்தி செய்விக்கத்தக்க அறிவும் சுதந்திரமும் உள்ள ஜீவர்களை வஞ்சியாமல் தயவினால் நிவர்த்தி செய்விப்பதே ஜீவகாருணியத்திற்கு முக்கியமான லட்சியமென்றும்: அதில் சத்தியமான நம்பிக்கை வைத்துப் பசித்த ஜீவர்களுக்கும் ஆகாரத்தால் பசி நீக்கியும், கொலைபடும் ஜீவர்களுக்குச் செய்வகையால் கொலை நீக்கியும், திருப்தி இன்பத்தை உண்டு பண்ணுவதே மேலான பிரயோஜன மென்றும் அறிய வேண்டும்.

***19. பசி, கொலை, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம் என்பவைகளால் வரும் அபாயங்களை நிவர்த்தி செய்விப்பது விதியாக இருக்கவும், இவ்விடத்துப் பசியினாலும், கொலையினாலும் வரும் அபாயங்களை மாத்திரம் நிவர்த்தி செய்விப்பது விசேஷமென்று குறித்தது ஏன்? என்றறியவேண்டில்;***

ஜீவகாருணிய ஒழுக்கத்தில், அபர ஜீவகாருணிய மென்றும், பர ஜீவகாருணியமென்றும் இருவகையாம். அவற்றில் பசி நீக்கலும் கொலை நீக்கலும் பர

ஜீவகாருணியமாதலால் விசேஷமாகக் குறிக்கப்பட்டது என்றறிய வேண்டும்.

**தாகம்**

அன்றியும், பசியினால் வருந்துகின்ற ஜீவர்களுக்குப் பசியை நிவர்த்தி செய்விக்கின்ற தயவுடையவர்கள், தாகம் நீங்குதற்குத் தண்ணீர் கொடாமலிரார்கள். தண்ணீர் கொடுப்பது பிரயாசமு மல்ல. தண்ணீர் ஏரி, குளம், கால்வாய் முதலான இடத்து மிருக்கின்றது. தாகத்தால், மாற்றிக் கொள்ளத்தக்க ஏகதேச அபாயம் நேரிடுமேயல்லது, அதனால் தேகத்திற்கு ஆனி நேரிடாது; பசியினால், மாற்றிக் கொள்ளக்கூடாத கெடுதி தேகத்திற்கு நேரிடும்.

**பிணி**

பசியினால் வரும் துன்பத்தை நிவர்த்தி செய்விக்கத்தக்க தயவு உடையவருக்குப் பிணியினால் வரும் துன்பத்தை நிவர்த்தி செய்விப்பதற்குத் தயவுண்டாகாமலிராது. பசி மிகுதியினாலேயே பிணிகள் விருத்தியாகின்றன. ஆகாரப் பக்குவங்களாலேயே அப்பிணிகள் நீங்குகின்றன. பிணிக்கு வேறு மருந்து கொடுப்பினும் பத்திய ஆகாரமே தேகம் நிற்பதற்கு அவசியமான ஆதாரமாயிருக்கின்றது. பிணியோடு தேகத்தை நெடுநாள் வைத்திருக்கக் கூடும்; ஒரு நாளாகிலும் ஆகாரமில்லாமல் தேகத்தை வைத்திருக்கக்கூடாது.

**இச்சை**

பசித்தவர்களுக்கு ஆகாரத்தால் பசி நீக்குவிக்கின்ற தயவுடையவர்களுக்கு, இச்சையால் வருந் துன்பங்களை நீக்குவிப்பதற்குத் தயவு வராமலிராது. ஜீவர்களுக்கு உள்ளபடி பசி நேரிடுமாகில் ஆகாரத்திலல்லது மற்றொன்றிலும் இச்சையே இராது. ஆகாரங் கிடைக்கில் உண்டு பசி தீர்ந்தவர், தம் இச்சையைச் சிறிய முயற்சிகளால் முடித்துக் கொள்ளவுங் கூடும்; அல்லது சமாதானஞ் செய்து கொள்ளவும் கூடும் இச்சையோடு பலநாள் தேகத்தை வைத்திருக்கலாம்' பசியோடு ஒரு நாளும் வைத்திருக்க முடியாது.

**எளிமை**

பசித்த ஜீவர்களுக்கு ஆகாரத்தால் பசியை நிவர்த்தி செய்விக்கின்ற தயவுள்ளவர்களுக்குச் சுதந்தரமற்ற ஜீவர்களது

எளிமையை நீக்கத் தயவு வராமலிராது. பசியினால் வருந்துகின்ற எளிமைக்கு மேற்பட்ட எளிமையே இல்லை. எளிமையைச் சில நாள் சென்று மாற்றிக் கொள்ளக்கூடும். பசியை அவ்வாறு மாற்றிக் கொள்ளக்கூடாது. எளிமையோடு தேகத்தை வைத்திருக்கக் கூடும், பசியோடு வைத்திருக்க முடியாது.

**பயம்**

பசியை நிவர்த்தி செய்விக்கின்ற தயவுடையவருக்குப் பயத்தை நிவர்த்தி செய்விப்பதில் தயவு வராமலிராது. பசியினால் வரும் பயத்திற்கும் கொலையினால் வரும் பயத்திற்கம் மேற்பட்ட பயமேயில்லை. பயத்தை உபாயத்தால் நீக்கிக் கொள்ளக்கூடும். பசியை உபாயத்தால் நீக்கிக் கொள்ளக் கூடாது. பயத்தோடு தேகத்தை வைத்திருக்கலாம்; பசியோடு வைத்திருக்கப் படாது. பசியினால் வரும் அவத்தைகளும் துன்பங்களும் கொலையினால் வரும் அவத்தைகளும் துன்பங்களும் தம்முள் ஒத்திருக்கின்றன, ஆகையால், பசியினால் வரும் துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் நிவர்த்தி செய்விப்பதே ஜீவகாருணியத்திற்கு முக்கிய லட்சியம் என்றறிய வேண்டும்.

***20. பசியினால் வருந்துன்பத்தை நீக்குதலும் கொலையினால் வருந்துன்பத்தை நீக்குதலும் ஜீவகாருணியத்திற்க முக்கிய லக்ஷியமாக இருக்கவும், இவ்விடத்தில் பசி நீக்குதலை மாத்திரம் அடிக்கடி வலியுறுத்துவது ஏன்? எனில்:***

ஒரு ஜீவன், பசியினால் கொல்லப்படும் என்பதை அறிந்து ஜீவகாருணியத்தால் பசியை நீக்கி உயிர்பிழைக்கம்படி செய்பவர், வேறு வகையால் உயிர்கொலை நேரிட்டால் அதற்கிரங்கி அந்தக் கொலையால் வருந்துன்பத்தை நிவர்த்தி செய்யாமலிரார்கள். கொலையால் வருந் துன்பத்தை நிவர்த்தி செய்யாதவர்கள், பசியால் வருந் துன்பத்தையும் நிவர்த்தி செய்விக்க தக்க தயவுடையவர்களாவார்கள். பசியால் வருங் கொலையை, ஆகாரத்தாலன்றி வேறு வகையால் நிவர்த்தி செய்விக்கப்படாது; பகை முதலியவற்றால் வருங் கொலையை அநேக உபாயத்தால் நிவர்த்தி செய்விக்கக் கூடுமாதலால்,

கொலையால் வருந்துன்பத்தைப் பசியால் வரும் துன்பத்திலமைத்து அடிக்கடி வலியுறுத்துகின்றது என்றறிய வேண்டும்.

அன்றியும், தாகத்தால் வருந்துகின்றவரும், பிணியால் வருந்துகின்றவரும், இச்சையால் வருந்துகின்றவரும், எளிமையால் வருந்துகின்றவரும், பயத்தால் வருந்துகின்றவரும், பசி வருத்த முண்டாகும் போது அவ்வவ் வருத்தங்களை எல்லாம் மறந்து பசி வருத்தம் மேற்பட்டு ஆகாரந்தேட முயற்சி செய்கின்றார்கள்.

அன்றி, அரசன் ஆக்கினையால் கொலைக்குற்றம் பற்றிக் கொலை செய்ய விதிக்கப்பட்ட குற்றவாளியும் பசி வந்தபோது தன் பயத்தையும் துன்பத்தையும் மறந்து அந்தப் பசியை மாற்றிக் கொள்ள முயலுகிறான்.

வைத்தியரால் தாம் இறந்து விடுவது நிச்சயமென்று தெரிந்து கொண்ட வியாதியாளரும், மூப்பாளரும், பசி வந்த போது, தமது துன்பத்தை மறந்து, பசி நீக்க முயலுகின்றார்கள்.

பசிக்குத் தயவினால் ஆகாரங் கொடுக்கத் துணிந்தவன் வேறு வகையால் ஜீவர்கள் இம்சைப்பட்டு அழிவதற்குச், சம்மதிக்கவே மாட்டான், ஆதலினும் பசியால் வருந் துன்பத்தை நிவர்த்தி செய்விக்கின்ற தருமத்தை அடிக்கடி வலியுறுத்துவ தென்றறிய வேண்டும்.

***21. பசியினால் வரும் கெடுதி எல்லா ஜீவர்களுக்குந் தேக நாசஞ் செய்வது உண்மையானால், எல்லா ஜீவர்கள் பசியையுமறிது நிவர்த்தி செய்விக்க வேண்டும்; அப்படி நிவர்த்தி செய்விக்கத் தொடங்கில் கடவுளால் சிருஷ்டிக்கப் பட்ட தேவர், மனிதர், நரகர், மிருகம், பறவை, ஊர்வன, தாவரம் என்கின்ற இவ்வேழு வகைப்பட்ட அளவிறந்த பேதங்களுடைய ஜீவர்களது பசியை அறிந்து நீக்குவது அசாத்திய மாகுமோ? என்னில்'.***

தேவர்கள், மனித சுதந்தரத்தினும் மேற்பட்ட சுதந்தர முடையவர்களாய்த் தங்களுக்கு நேரிட்ட பசியைத் தங்கள் முயற்சியினாலேயே மாற்றிக் கொள்ளத்தக்க வல்லபமுடை யவர்கள் ஆதலால் அவர்கள் பசியைக் குறித்து மற்றவர்கள் யோசிப்பது அவசியமல்ல என்றும், தேவர்களுக்கும் பசி

நேர்ந்தால் துன்பமுண்டாகுமேயென்று இரங்குவது மாத்திரம் அவசியமென்றும்;

நரகர்; நாம் பசியாற்றுவிக்கத்தக்க இடங்களில் இல்லாமல் வேறிடங்களிலிருக்கின்ற படியாலும், நரகர் பசிக்குத் தண்டனை பரிவாரங்களால் பசியாற்றுவித்தலாலும், அந்நரகர் பசியைக் குறித்து யோசிப்பது அவசியமல்ல வென்றும், அந்நரகரும் பசிநேரிடில் வருந்துவார்களேயென்று இரங்குவது மாத்திரம் அவசியமென்றும்;

ஊழ்வகையினால் சிறிதுஞ் சுதந்தரமில்லாத மரம், புல் முதலிய தாவரங்களில் மனிதர் தங்கள் வாழ்க்கைக்குச் சகாயமாகத் தங்கள் முயற்சியால் விளைவிக்கின்ற தாவரவர்க்கங்களுக்குப் பசி குறித்து நீர் விடுவது அவசிய மென்றும், மற்றைத் தாவர வர்க்கங்களெல்லாம் அருள் நியதியின்படி ஆகாரங் கொடுப்பிக்க உயிர்த்திருக்கின்றன. ஆதலால் அவைகளுக்கெல்லாம் பசியறிந்து ஆகாரம் கொடுப்பது நமது சுதந்தரமல்ல கடவுள் சுதந்தரமென்றும், அவை குறித்து யோசிப்பது அவசியம் அல்ல வென்றும், ஆகாரமில்லாவிடில் வருந்துமேயென்று இரங்குதல் மாத்திரம் அவசிய மென்றும்.

நிலத்திலும் நீரிலும் ஊருகின்ற உயிர்களுக்கும், பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் அவ்வவற்றின் ஊழ்வகைக்குத் தக்கபடி அருள் நியதி ஆகாரங் கொடுப்பிக்க உண்டு பசியாறுகின்றன வென்றும், அவ்வவைகளுக்குத் தக்க ஆகாரம் அறிந்து கொடுப்பது நமது சுதந்தரமல்ல, கடவுள் சுதந்தர மென்றும், அவைகளில் மனிதர் வாழ்க்கைக்குச் சகாயமாகத் தங்கள் சுதந்தரத்தால் சம்பாதித்துக் கொள்ளுகின்ற பசு, எருது, எருமை, கடா, ஆடு, குதிரை முதலிய சில மிருகங்களுக்கு ஆகாரங் கொடுத்துப் பசியாற்றுதல் அவசியமென்றும்:

மனிதர்களில், ஆண்மக்கள், பெண்மக்கள் என்றிரு வகைப்பட்ட எல்லா மனிதர்களுக்கும், பசியால் வரும் நஷ்டங்களும், துன்பங்களும் பசி நிவர்த்தியால் வரும் லாபங்களும், இன்பங்களும் பொதுவில் ஒரு தன்மையாயிருந்ததாலும்; பசியால் வரும் நஷ்டங்களையும் துன்பங்களையும் மன முதலான அந்தக்கரண விருத்தியினாலும் கண் முதலான இந்திரியங்களாலும், மிகவும் அறிந்து

கொள்கின்ற ஆன்ம அறிவு ஒத்திருத்தலாலும்; மனிதர்களுக்கு ஊழ் வகையினால் அருள் நியதியின்படி கொடுப்பிக்கின்ற ஆகாரமட்டில் ஜீவித்துத் தேகத்தை வைத்திருக்கக் கூடாமையாலும்; தங்கள் முயற்சியாலும், அறிவாலும், சுதந்தரத்தாலும் சம்பாதிக்கின்ற,ஆகாமிய ஆகாரத்தாலும் பசியை நீக்கித் தேகத்தை வைத்திருக்க வேண்டுமாதலாலும் ஆகாமியத்தால் சம்பாதிக்கின்ற ஜீவ சுதந்தரம் மனிதர்களுக்கு அருளால் மிகவுங் கொடுக்கப்பட்ட படியாலும்! ஊழ்வகையால் ஆகாரம் நேரிடாமல் பசித்து வருந்தும் படியாகவும்; அந்தப் பசியை நீக்கும் நிமித்தம் ஒருவரை யொருவர் எதிர்பார்க்கும் படியாகவும்; அவர் தயவினால் ஆகாரங் கொடுத்து அப்பசியை நீக்கி அவரை நன்முயற்சியிற் செலுத்தவும்,ஆகாரங் கொடுத்தவர் சித்தி முத்திகளை யடையவும், அருள் நியதியாக விதிக்கப்பட்ட படியாலும்.

மனிததேகம் மற்ற ஜீவதேகம்போல இலேசிலே எடுக்கக் கூடாதாகலாலும், மனித தேகத்தில் ஆன்ம விளக்கமும் அருள் விளக்கமும், மிகவும் விளங்குதலாலும், இந்த மனித தேகம் போனால் மீளவும் இந்தத் தேகம் வருமென்கிற நிச்சயமில்லாமையாலும், இந்த மனித தேகம் முத்தியின்பம் பெறுதற்கே எடுத்த தேகமாதலாலும், இந்த மனித தேகம் மாத்திரமே முதல் சிருஷ்டி தொடங்கிக் கடவுள் சம்மதத்தால் சிருஷ்டிக்கப்பட்ட உயர்ந்த அறிவையுடைய தேகமாதாலும், மனிதர்கள் மாத்திரம் பசியாற்று விக்கின்ற ஜீவகாருணிய விதியைப் பொதுவில் அவசியம் உறுதியாகப் பிடிக்க வேண்டுமென்றும், கடவுள் விதித்திருக்கின்ற படியால், பசியை ஆகாரத்தினால் நிவர்த்தி செய்விக்கின்ற ஜீவகாருணிய ஒழுக்கம் மனிதர்களிடத்தே பெரும்பான்மை நடத்த வேண்டுமென்று அறியவேண்டும்.

***22. ஊழ்வகைக்குத் தக்கபடி மிருகம், பறவை முதலிய ஜீவர்களுக்கு அருளால் நியதி ஆகார மாத்திரம் இருக்க மனிதர்களுக்கு மாத்திரம், ஊழ் நியதி ஆகாரத்தோடு, ஆகாமிய முயற்சி ஆகாரமும் வேண்டுவது அவசிய மென்றது, எப்படி என்னில் :-***

மனிதர்கள் பிராரத்தப்படி நியதி ஆகாரத்தைப் புசித்துப்

பிராரத்த அனுபவத்தை நீக்கிக் கொண்டு, ஆகாமியத்தால் முயற்சியாகாரத்தைப் புசித்துக் கரணேந்திரிய தேகத்தை வலுவுள்ளதாகச் செய்து கொண்டு, சன்மார்க்க சாதனத்தை அனுசரித்துச் சித்திமுத்தி இன்பங்கள் பெறக்கடவரென்று கடவுள் விதித்திருக்கின்றபடியால், மனிதர்களுக்குப் பிரார்த்த ஆகாரமும் ஆகாமிய முயற்சி ஆகாரமும், அவசியம் வேண்டுமென்று அறியவேண்டும். மிருகம், பட்சி, ஊர்வன, தாவரம் என்கின்ற ஜீவதேகங்கள் தண்டனை நிமித்தம் விதித்த தேகங்களாதலால், பிராரத்த ஆகாரம் கடவுள் விதித்த வண்ணம் அருட் சத்தியால் தடைபடாமல் கொடுக்கப் படுமாகாலில், ஆகாமிய ஆகாரம் சம்பாதிக்க வேண்டாமென்றறிய வேண்டும்.

***23. ஆனால் ஜீவகாருணியம் எல்லா ஜீவர்களுக்கும் பொதுவென்று முதலில் குறிக்கப்பட்டது என்ன? எனில்;-***

ஜீவகாருணிய ஒழுக்கத்தில் முக்கியமாக எல்லா மனிதர்களுக்கும் பொதுவில் பசியினால்வரும் துன்பத்தை நிவர்த்தி செய்து ஆகாரத்தினால் திருப்தி இன்பத்தை உண்டு பண்ண வேண்டுமென்றும், பசியைப் போல் வேறு வகையினால் ஜீவகொலை நேரிடுவதனால் அந்த ஜீவ கொலையைத் தம்மாற் கூடிய வரையில் எவ்விதத்திலாயினும் தடை செய்து உயிர் பெறுவித்துச் சந்தோஷிப்பிக்க வேண்டுமென்றும், பிணி, பயம் முதலியமற்ற ஏதுக்களால் ஜீவர்களுக்குத் துன்பம் நேரிடில் அத்துன்பங்கள் தங்களால் நீக்கத்தக்கவைகளாகில் நீக்க வேண்டுமென்றும், மிருகம், பறவை, ஊர்வன, தாவரம், முதலிய ஜீவர்களிடத்துப் பயத்தினால் வரும் துன்பத்தையும், கொலையினால் வரும் துன்பத்தையும் எவ்விதத்தும் நிவர்த்தி செய்ய வேண்டுமென்றும், அவற்றுள் துஷ்ட ஜீவர்களிடத்தும் சிறிது பயத்தினால் வரும் துன்பம் மாத்திரமே அல்லது கொலையினால் வரும் துன்பங்களைச் செய்யப்படாது என்றும், இவ்வகை முழுதும் ஜீவகாருணியமே ஆதலால், எல்லா உயிர்களிடத்தும் ஜீவகாருணியம் வேண்டு மென்று கடவுளால் ஆணை செய்ததென்றறிய வேண்டும்.

***24. மனிதர்கள், தங்கள் வாழ்க்கைக்குச் சகாயமாகச்***

***சம்பாதிக்கின்ற உயிர்களில் சில உயிர்கள், தாமச ஆகாரமாகிய மாமிச ஆகாரஞ் செய்வதனால், அவைகளுக்குப் பசியாற்றுவிக்கும் போது அந்த ஆகாரத்தைக் கொடுத்து ஆற்றுவிக்கப்படாதோ? என்னில்;***

ஒரு ஜீவனைக்கொன்று ஒரு ஜீவனுக்கு மாமிசத்தால் பசியாற்றுதல் ஜீவகாருணிய ஒழுக்கமேயல்ல வென்றும் - கடவுள் சம்மதமும் அல்லவென்றும் - இயற்கைக்கு முழு விரோதமென்றும் அறிய வேண்டும்.

எல்லா ஜீவர்களும் இயற்கையுண்மை ஏகதேசங் களாகிக் கடவுள் இயற்கை விளக்கமாகிய அருளுக்கு இடமாக இருக்கின்ற படியாலும், கடவுள் இயற்கை விளக்கம் மறைபடும்போது ஜீவத்தன்மை இல்லாதபடியாலும், கடவுளியற்கை விளக்கமும், ஜீவனியற்கை விளக்கமும், ஒன்றோடொன்று மாறுபடாததாலும், கடவுளியற்கை விளக்கமும் ஜீவன் இயற்கை விளக்கமும். அந்தந்தத் தேகங்களிலும் விளங்குகின்றபடியாலும், ஒரு ஜீவனை வதைத்து அதனால் மற்றொரு ஜீவனுக்குப் பசியாற்றுதல் ஜீவகாருணிய ஒழுக்கத்திற்கு முழு விரோதமென்றே அறியவேண்டும்.

***25. புலி, சிங்கம் முதலிய மிருகங்கள் மற்றொரு ஜீவனைக் கொன்று தின்று தாமச ஆகாரத்தால் பசியாற்றித் திருப்தி இன்பத்தையடைந்து சந்தோஷிக்கின்றன; அந்தச் சந்தோஷம் கடவுள் இயற்கை விளக்க ஏகதேசமும், ஜீவன் இயற்கை விளக்க நிறைவும் என்றும் கொள்ளக் கூடாதோ? என்னில்***

கூடாது - தாமச ஆகாரத்தால் பூரணசத்துவமாகிய கடவுளியற்கை விளக்க ஏகதேசமும் ஏகதேச சத்துவமாகிய ஆன்ம இயற்கை விளக்கமும் விளங்கா, இருளால் ஒளி விளங்காதது போல்.

***26. இதைத் தாமச ஆகார மென்பது என்னை? எனில்,***

கடவுள் விளக்கம் வெளிப்படாதபடி ஆன்ம விளக்கத்தை மறைத்த இம்சை ஆகாரமாதலால் தாமச ஆகாரமாயிற்று.

***27. இந்த ஆகாரத்தால் வந்த திருப்தியின்பமாகிய சந்தோஷ விளக்கம் எதனுடைய விளக்கம்? எனில்,***

***28. பசு என்பது என்னை? எனில்,***

ஆணவம், மாயை, கன்மம் என்கிற மும்மல பந்தத்தால் ஒன்றுபட்டு அறிவிழந்த ஆன்மாவையே பசு வென்பது.

***29. அப்பசுவிற்கு விளக்கந் தோன்றுவது எப்படி? என்னில்;***

சூரியனை மறைத்த மேகவண்ணத்திலுள்ள இருளினிடத்தும் சூரியப் பிரகாச விசேஷம் தோன்றுதலால் அவ்விருளும் விளக்கமாக வழங்குகின்றது; அதுபோல், அசுத்த மாயா கரணங்களும் தாமச குணமும் இருள் வண்ணமுடைய வாயினும், தம்மால் மறைக்கப்பட்ட பரஜீவ விளக்க விசேஷத்தால், அசுத்த மாயா கரணமும், தாமச குணமும் விளக்கமாக வழங்குகின்றன. இதனால் மாமிச ஆகாரத்தில் வரும் விளக்கம், அசுத்த மாயா கரண விளக்கமே யென்று அறிய வேண்டும்.

**தாவரங்களும் உயிர்கள்தான்**

***30. ஆனால், மரம், புல், நெல் முதலான தாவரங்களும் உயிராகவே சொல்லப்படுகின்றனவே, அவைகளை இம்சை செய்து ஆகாரமாகக் கொண்டால் அவை தாமச ஆகாரமல்லவோ? அதனால் வந்த சந்தோஷம் அசுத்த மனோகரண சந்தோஷ மல்லவோ? என்னில்;***

மரம், புல், நெல் முதலான தாவரங்களும் உயிர்கள்தான். அவைகளை இம்சை செய்து ஆகாரங் கொண்டால் அது ஏகதேச தாமச ஆகாரந்தான்; அந்த ஆகாரத்தால் வந்த சந்தோஷமும் அசுத்தகரண சந்தோஷந்தான்; ஆனாலும் அப்படியல்ல.

மரம், புல், நெல் முதலான ஜீவர்கள் பரிசமென்கிற ஓரறிவையுடைய ஜீவர்களாதலாலும், அவ்வுடம்பில் ஜீவ விளக்கம் ஒரு சார் விளங்குதலாலும், அவ்வுயிர்கள் தோன்றும் வித்துக்களும் மற்ற வித்துக்கள் போல் சடமாதலாலும், அவ்வித்துக்களை நாமே விதைத்து உயிர் விளைவு செய்யக்

கூடுமாதலாலும், அவ்வுயிர்களை வேறு செய்யாமல் அவ்வுயிர்களிடத்து உயிரில்லாமல், உயிர் தோன்றற் கிடமான சடங்களாகத் தோன்றிய வித்துக்களையும், காய்களையும், கனிகளையும், பூக்களையும், கிழங்குகளையும், தழைகளையும் ஆகாரங்களாகக் கொள்வதேயன்றி அவ்வுயிருள்ள முதல்களை ஆகாரமாகக் கொள்ளாதபடியாலும், அவைகளில் வித்து, காய், கனி, முதலானவை கொள்ளும்போது, சுக்கிலம், நகம், ரோமம் முதலியவைகளை வாங்கும்போது, இம்சை உண்டாகாமை போல், இம்சை உண்டாகாதபடியாலும், தாவரவர்க்கங்களுக்கு மனமுதலான அந்தக் கரணங்கள் விருத்தியில்லாத படியாலும், அது உயிர்க்கொலையுமல்ல துன்பம் உண்டு பண்ணுவதுமல்ல; அதனால் அது ஜீவகாருணிய விரோத மாகாது. அந்த ஆகாரத்தால் வந்த சந்தோஷமும் ஜீவ விளக்க சகிதமான கடவுள் விளக்கமே யாகுமென்று அறியவேண்டும்.

***31. மரம் முதலிய தாவரங்களில் தோன்றிய வித்துக்களை இனி உயிர் ஏறுதற்கிடமாகிய சடங்களென்பது எப்படி? என்னில்;***

*1.* வித்துக்களில் ஜீவனிருந்தால் நிலத்தில் விதையா முன்னமே விளைய வேண்டும். நிலத்தில் விதைத்த காலத்தும், சிலவித்துக்கள் விளையாமலே யிருக்கின்றன, அன்றியும் வித்தென்பது காரணம். இந்தக் காரணம், உடம்பு தோன்றுதற்கேயென்று சிறுபிள்ளைகளாலும் அறியப்படும். அன்றி, உயிர் நித்தியம்; உடம்பு அநித்தியம்; நித்தியமான உயிர் காரணம் வேண்டாது; அநித்தியமாகிய உடம்பே காரணம் வேண்டும். ஆகலில், வித்துக்களைச் சடமென்று அறிய வேண்டும்.

***32. ஆனால் வித்துக்களினிடத்து ஆன்மாக்கள் ஏறுவது எப்படி? என்னில்;***

நிலத்திற் கலந்த வித்திற்கு நீர்விடில் அந்த நீரின் வழியாகக் கடவுள் அருள் நியதியின்படி ஆன்மாக்கள் அணுத் தேகத்தோடு கூடி நிலத்திற் சென்று அந்நிலத்தின் பக்குவ சத்தியோடு கலந்து வித்துக்களினிடமாகச் செல்கின்றன வென்று அறிய வேண்டும்.

***33. முளைகளையே பிடுங்கப்படா தென்று சிலர் சொல்லுகின்றார்கள்; வித்து, காய், இலை முதலியவைகளைப் புசிக்கலா மென்று சொல்வது எப்படி? என்னில்;***

வித்து நிலத்திற் படிந்தபின்நீர்வழியாக ஆன்மாவானது சென்று பக்குவ சத்தியிற்கலந்து வித்திலேறி முளைத்தபடியால், முளையானது வித்து, காய் முதலியவைகளைப் போலச் சடமல்ல, ஆகலால், முளைகளைப் பிடுங்கப்படா தென்பது உண்மை யென்றறிய வேண்டும்.

**தாவர ஆகாரம்**

***34. வித்து, காய், கனி முதலியவற்றில் உயிர்க்கொலை யில்லாவிடினும், நகம், ரோமம், சுக்கிலம் முதலியவற்றி லிருக்கின்ற அசுத்தமாவதில்லையோ? என்னில்;***

தத்துவ விருத்தியும், தாது விருத்தியும் இல்லாதபடியால் அசுத்தமுமில்லை ஆகலில், மரம், புல், நெல் முதலியவைகளின் வித்து, காய், கனி, தழை முதலியவற்றைப் புசிப்பது ஜீவகாருணிய விரோதமல்ல வென்றறிய வேண்டும்.

**மாமிச ஆகாரம் நியதியல்ல**

***35. மாமிச ஆகாரம் புலி முதலாகிய துட்ட மிருகங்களுக்கு நியதியாகார மல்லவோ? என்றறிய வேண்டில்;***

அது அவ்வுயிர்களுக்குச் சிருஷ்டி நியதி ஆகாரமல்ல; பரம்பரை வழக்கத்தாற் பெற்ற ஆகாரமென்றறிய வேண்டும், ஆகலில், அதை நிவர்த்தி செய்வித்துச் சத்துவ ஆகாரங்களைப் புசிப்பிக்கும்படி செய்யவுங் கூடும். ஒரு சீலமுடையவன் கிரகத்தில் வழங்குகின்ற பூனைக்கும், நாய்க்கும் வேறிடங்களிற் போய் அசுத்த ஆகாரங் கொள்ளாமல் காவல் செய்து அடிநாள் தொடங்கிச் சுத்த ஆகார வழக்கமே செய்விக்கின்றான்; அவைகள் அவைகளைப் புசித்து உயிர் வழங்கி வருகின்றன; அப்படியே புலி, சிங்கம் முதலிய துட்ட வர்க்கங்களையும் மேல்நின்று சுத்த ஆகாரத்தில் பழக்குவாரில்லாமையால் அசுத்த ஆகாரங்களைப் பழக்கத்தாற் புசிக்கின்றனவென்று அறியலாம்.

ஆகலில் ஒரு ஜீவனைக் கொன்று மற்றொரு ஜீவனுக்குப் பசியாற்றுவித்தல் கடவுளருக்குச் சம்மதமுமல்ல, ஜீவகாருணிய ஒழுக்கமும் அல்லவென்று சத்தியமாக அறியவேண்டும்.

இந்த ஜீவகாருணிய மென்கின்ற சாதனத்தில் சாத்தியமாகின்ற இன்பம், அபரஇன்ப மென்றும் பர இன்பமென்றும் இருவகைப்படும்.

## அபர இனபம்

இச்சை முதலியவவைகளைப் பற்றி உண்டாகின்ற துன்பத்தை நிவர்த்தி செய்விப்பதில் வருமின்பம் அபர இன்பமாகும். அவை இம்மையில் அனுபவிக் கின்ற இன்பங்களில் சிலவென்று அறிய வேண்டும்.

### *36. அவை எவை? என்னில்*

உடுப்பதற்கு வஸ்திரமில்லாமலும், இருப்பதற்கு இடமில்லாமலும், உழுவதற்கு நிலமில்லாமலும், பொருந்துவதற்கு மனைவியில்லாமலும், விரும்பிய படி செய்வதற்குப் பொருள் முதலிய வேறு வேறு கருவிகளில்லாமல், துன்பப்படுகின்ற ஜீவர்கள் விஷயத்தில் ஜீவகாருணியந் தோன்றி, உடுப்பதற்கு வஸ்திரம், இருப்பதற்கு இடம், உழுவதற்கு நிலம், பொருந்துவதற்கு பெண், விரும்பியபடி செய்வதற்கு பொருள் முதலானவை கொடுத்த போது, பெற்றுக் கொண்டவர்களுக்கு உள்ளிருந்து முகத்தினிடமாகத் தோன்றுகின்ற இன்ப விளக்கமும், அந்த இன்பத்தைக் கண்டு கொடுத்தவர்களுக்கு உண்டாகின்ற இன்ப விளக்கமும் கடவுள் கரணத்தில் ஏக தேமும், ஜீவகரணத்திற் பூரணமுமாகத் தோன்றுகின்றவை யாதலால், அது அபர இன்ப மென்று அறியவேண்டும்.

## பரஇன்பம்

பசியினால் வருந்துன்பத்தை நிவர்த்தி செய்விப்பதில் வருமின்பம் பரஇன்பமாகும். அவை இம்மையில் போக சித்திகளாலும், யோக சித்திகளாலும், ஞான சித்திகளாலும் வருகின்ற இன்பங்களும், முடிவில் அனுபவிக்கப்படும் மோட்ச இன்பமும் ஆகுமென்றறிய

வேண்டும். உண்பதற்கு ஆகாரமில்லாமல் சோர்வடைந்த ஜீவர்களுக்கு ஜீவகாருணியத்தால் ஆகாரங்கொடுக்க, உண்டு பசி நீங்கிய தருணத்தில், அந்த ஜீவர்களுக்கு அகத்தினிடத்தும், முகத்தினிடத்தும் தழைத்து பொங்கித் ததும்புகின்ற இன்பம், அது கண்டபோது கொடுத்தவர்களுக்கு அகத்திலும் முகத்திலும் அவ்வாறு உண்டாகின்ற இன்பமும், ஆன்ம சகிதமாகிய கடவுள் கரணத்திற் பூரணமாகத் தோன்றுகின்றவையாதலால், பர இன்பமென்று அறிய வேண்டும்.

வஸ்திரம், இடம், நிலம், பெண், பொருள் முதலானவை களில்லாமல் துன்பப்படுகின்றவர்கள், அத்துன் பங்களை மனவெழுச்சியால் சகித்துக் கொண்டு உயிர்தரித்துத் தங்களாற் செய்யக் கூடிய முயற்சியைச் செய்யக் கூடும். பசியினால் துன்பம் நேரிட்ட போது மனவெழுச்சியால் அத்துன்பத்தைச் சகித்துக் கொள்ளக் கூடாது. சகிக்கத் தொடங்கில் உயிரிழந்து விடுவார்கள்.

## பசியின் சகியாமை

### பசி நேரிட்டபோது

பெற்றவர்கள் பிள்ளைகளை விற்றும், பிள்ளைகள் பெற்றவர்களை விற்றும், மனைவியைப் புருடன் விற்றும், புருடனை மனைவி விற்றும், அந்தப் பசியினால் வருந்துன்பத்தை மாற்றிக் கொள்ளத் துணிவார்களென்றால், அன்னியமாகிய வீடு, மாடு, நிலம், உடைமை, முதலியவைகளை விற்றுப் பசியை நீக்கிக் கொள்வார்களென்பது சொல்ல வேண்டுவதில்லை.

உலகமுழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தியாகிய அரசனும் பசி நேரிட்டபோது தனது அதிகாரவுயர்ச்சி முழுவதும் விட்டுத் தாழ்ந்த வார்த்தைகளால் ‘பசி நேரிட்டது என்ன செய்வது’ என்று அருகிலிருக்கின்ற அமைச்சர்களிடத்துக் குறை சொல்லுகிறான்.

பகைவரால் எறியப்பட்டு மார்பிலுருவிய பாணத்தையும் கையாற் பிடித்துக் கொண்டு, எதிரிட்ட பகைவரை யெல்லாம் அஞ்சாது ஒருநிமிஷத்தில் வெல்லத்தக்க சுத்த வீரரும், பசி

நேரிட்டபோது சௌகரியத்தையிழந்து பசிக்கு அஞ்சிப் பக்கத்தில் நிற்கின்றவரைப் பார்த்து 'இளைப்பு வருமே! சண்டை எப்படிச் செய்வது!' என்று முறையிடுகின்றார்கள்.

இவ்வுலக போகங்களோடு இந்திரபோக முதலிய போகங்களையும், துரும்பாக வெறுத்து, முற்றும் துறந்து அறிவையறிந்து அனுபவம் விளங்கிய ஞானிகளும், இந்திரியங்களை அடக்கி மனோலயஞ் செய்து உண்மை நிட்டையிலிருக்கின்ற யோகிகளும், இறந்தோரையும் எழுப்பத்தக்க அளவிறந்த மகத்துவங்கள் விளங்கிய சித்தர்களும், முனிவர்களும், தவசிகளும், பசி நேரிட்டபோது, தங்கள் தங்கள் அனுபவ லட்சியங்களை விட்டு, அடுத்த ஊரைநோக்கிப் பலிக்கு(பிச்சை)வருக்கின்றார்கள்; பலி நேராத போது நிலை கலங்குகின்றார்கள்.

சொற்பனத்தில் ஓர் இழிவு வரினும் அது குறித்து உயிர்விடத்தக்க மானிகளும், பசி நேரிட்டபோது செல்லத்தகாத வரிடத்துஞ் சொல்லி மானம் குலைகின்றார்கள்.

சாதி, சமய ஆசாரங்களில் அழுத்தமுடைய ஆசாரியர்களும், பசி வந்த போது, ஆசாரத்தை மறந்து ஆகாரத்திற்கு எதிர்பார்க்கின்றார்கள்.

கல்வி கேள்விகளில் நிரம்பி, அறிதற்கரிய நுட்பங்களை அறிந்து செய்தற்கரிய செய்கைகளைச் செய்து முடிக்க வல்லவர்களும், பசி நேரிட்டபோது, அறிவும் கருத்தும் அழிந்து தடுமாறுகின்றார்கள்.

இராப்பகல் தோன்றாது புணர்ச்சி இன்பத்திற் பொங்குகின்ற காமிகளும், பசி நேரிட்டபோது, புணர்ச்சியை மறந்து காமத்தைக் கசந்து கலங்குகின்றார்கள்.

நாமே பெரியவர் நமக்குமேற் பெரியவரில்லை என்று இறுமாப்படைகின்ற அகங்காரிகளும், பசி நேரிட்டபோது, அகங்காரங் குலைந்து ஆகாரங் கொடுப்பவரைப் பெரியவராகப் புகழ்கின்றார்கள்.

ஒருவகை காரியங்களில் அநேக வகைகளாக உபசரிக்கச் செய்கின்ற டம்பர்களும், பசி நேரிட்டபோது, டம்பத்தை இழந்து மயங்குகின்றார்கள்.

இவரிவர் இப்படி இப்படியானால் ஒருவகை ஆதாரமுமில்லாத ஏழைகள், பசி நேரிட்டபோது, என்ன பாடுபட்டார்கள்! அந்தக் காலத்தில் அந்த ஏழைகளுக்கு ஆகாரம் கிடைத்தால் எப்படிப்பட்ட சந்தோஷமுண்டாகும்! அந்த சந்தோஷத்தைத் தோற்றுவித்தவர்களுக்கு எப்படிப்பட்ட லாபம் கிடைக்கும்! இப்படிப்பட்டதென்று சொல்வதற்கும் அருமை என்றறிய வேண்டும்.

## பசியின் அவத்தை

### *ஜீவர்களுக்குப் பசி அதிகரித்த காலத்தில்*

ஜீவ அறிவு விளக்கமில்லாமல் மயங்குகின்றது, - அது மயங்கவே அறிவுக்கறிவாகிய கடவுள் விளக்கம் மறை படுகின்றது, - அது மறையவே புருடதத்துவம் சோர்ந்து விடுகின்றது. அது சோரவே பிரகிருதிதத்துவம் மழுங்குகின்றது. - அது மழுங்கவே குணங்களெல்லாம் பேதப்படுகின்றன, மனம் தடுமாறிச் சிதறுகின்றது, - புத்தி கெடுகின்றது, - சித்தம் கலங்குகின்றது, - அகங்காரம் அழிகின்றது,-பிராணன் சுழல்கின்றது, - பூதங்களெல்லாம் புழுங்குகின்றன,- வாதபித்த சிலேட்டுமங்கள் நிலை மாறுகின்றன, - கண் பஞ்சடைந்து குழிந்து போகின்றது, காது கும்மென்று செவிடுபடுகின்றது- நா உலர்ந்து வறளுகின்றது,-நாசி குழைந்து அழல்கின்றது, - தோல் மெலிந்து ஸ்மரணை கெடுகின்றது, -கை கால் சோர்ந்து துவளுகின்றன, - வாக்குத்தொனிமாறிக் குளறுகின்றது, - பற்கள் தளருகின்றன - மல சல வழி வெதும்புகின்றது, - மேனி கருகுகின்றது, ரோமம் வெறிக்கின்றது,- நரம்புகள் குழைந்து நைகின்றன, - நாடிகள் கட்டுவிட்டுக் குழைகின்றன, - எலும்புகள் கருகிப் பூட்டுகள் நெக்குவிடுகின்றன,-இருதயம் வேகின்றது,-மூளை சுருங்குகின்றது,- சுக்கிலம் வெதும்பி வற்றுகின்றது, - ஈரல் கரைகின்றது, இரத்தமும் சலமும் சுவறுகின்றன,மாமிசம் குழைந்து தன்மை கெடுகின்றது, - வயிறு பகீரென்று எரிகின்றது, - தாப சோபங்கள் மேன்மேலும் உண்டா கின்றன. உயிரிழந்து விடுவதற்கு மிகவும் சமீபித்த அடையாளங்களும் அனுபவங்களும் மேன் மேலும் தோன்றுகின்றன; பசியினால் இவ்வளவு அவத்தைகளுந் தோன்றுவது ஜீவர்களுக்கெல்லாம் பொதுவாகவே

பசிநீக்கலும், கொலை நீக்கலும், பரஜீவகாருணியம். மற்றவை அபர சீவகாருணியம். ஆகலில், பரஜீவகாருணியம் விசேஷமாகக் குறிக்கப்பட்டதென்று அறியவேண்டும். அன்றியும், பசியினால் வருந்துகின்ற சீவர்களுக்குப் பசியை நிவர்த்தி செய்விக்கின்ற தயவுடையவர்கள் தாகம் நீங்குவதற்குத் தண்ணீர் கொடாமலிரார்கள். தண்ணீர் கொடுப்பது பிரயாசமுமல்ல. தண்ணீர் ஏரி, குளம், கால்வாய். முதலிய இடங்களிலும் இருக்கின்றது.

இதன் தொடர்ச்சி கூடிய விரைவில் வெளிப்படுமாறு இறைவன் திருவருள் புரிவாராக.

திருச்சிற்றம்பலம்



# வியாக்கியானங்கள்

1. ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தி

2. தொண்டமண்டல சதகம் - நூற் பெயர் இலக்கணம். வழிபடு கடவுள் வணக்கப் பாட்டுரை

3. "உலகெலாம்" என்னும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம்

4. "தமிழ்" என்னும்சொல்லுக்கிட்ட உரை

5. பொன் வண்ணத்தந்தாதி 22ஆம் செய்யுள் உரை

6. வேதாந்த தேசிகர் குறட்பா ஒன்றன் உரை

# 1. ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தி

## சிறப்புப் பாயிரம்

### நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்
வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்துரைத்தா னுள்ளத்
தழிவிலடு க்குந்தேனை யன்பரெலா முண்ண
வொழிவி லொடுக்கநூ லோர்ந்து.

இச்செய்யுள் கருதிற்று யாதோ எனின், இந்நூன்முகத்து ஆசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து நிற்றலின் சிறப்புப் பாயிர ஒழுக்கம் உணர்த்தல் கருதிற்று என்க.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் வள்ளன் மலர்த்தாடலைமேல் வைத்து என்பது:- வள்ளலார் என்னும் திருப்பெயருடையவர், ஞானாசாரிய நிருபராகிச் சமயவாதிகள் தருக்கச் செருக்குகள் பிற்பட்டொழியப் பேரருள் நெறியான் வெற்றி கொண்டு சீகாழி என்னும் திருநகர்க்கண்ணே மெய்ந் நெறி விளங்க வீற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளை யாரது வள்ளற்றன்மையுடைய மலர்போலும் திருவடிகளைத் தமது நன்முடிக்கண் ஓர் பொன்முடியாக அணிந்து,

ஓர்ந்து உள்ளத்தழிவி லடுக்குந் தேனை யன்ப ரெலா முண்ண வொழிவி லொடுக்கநூ லுரைத்தான் என்பது:- அத்திருவடிகளின் அருட்டுணையால் தத்துவங்க ளனைத்தும் சடமென்று ஓர்ந்துணர்ந்து அவற்றைக் கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியும் செய்து, அங்ஙனம் வாதனையால் அசைந் தெழும் போதந்தோற்றாது அதனை அத்திருவருள் ஒளியில் அடக்கி ஆண்டு மேன்மேலும் எழா நின்ற சிவானந்தத் தேனைத் தாம் அனுபவஞ் செய்தவாறு அதன் கண் அன்புள்ள பக்குவரும் செய்தற்பொருட்டு, அச்சிவானந்தானுபவ அந்தரங்க மெல்லாம்

வெளிப்பட்டுவிளங்க, ஒழிவிலோடுக்கம் என்று ஓர் உபதேச முறையை உரைத்தருளினார் என்றவாறு.

வள்ளல் என்னும் பெயர் ஆசிரியர்க்குத் தாம் முன்னிருந்த கிரியா சாரிய நிலைக்கண் அவ்வாசாரிய மரபின் வழித்தாய் வந்த காரண அபிடேகச் சிறப்புப் பெயர் என்க. அல்லதூஉம், பின்னர் ஞானாசாரிய நிலைக்கண் தமது அருள்ஞான நோக்கால் இயைந்த கண்ணுடைய என்னும் காரண விசேடண மேற்கொண்டு நின்ற இவ்வள்ளலென்னும் பெயர் ஈண்டு அவ் விசேடணம். இசையெச்ச நிலையில் நிற்ப நின்றது எனினும் அமையும் என்க.

இஃது வினை பண்பு முதலிய அடுத்த தொகை நிலைச் சொற்றொடராகாது. தொகாநிலையாய்த் தனைத் தொடர் பயனிலை அண்மைப் பொருளுணர்ச்சியின்றி இடையிட்டு நிற்கத் தான் செய்யுள் முதற்கண் தனித்திருந்தமையின் ஆற்றலின்றாலோ எனின், அற்றன்று. கொடை மடங்குறித்த குணங் காரணமாக வந்த இவ்வள்ளல் எனும் பெயர் தன்னுறுப்புகளுட் கொடை, குணம், புகழ் , அழகு, வளம் என்னும் நல்வகை குறித்த பல்பொருட் பகுதியாய வண்மை என்னும் முதலுறுப்பான் ஆசிரியர்க்கு குளவாய அக்கொடை முதலிய அருட்குணங்களைக் குறிப்பிற் புலப்பட விரித்தலின் பொருளாற்றல் உண்டென்க. அல்லதூஉம், இப்பெயர் உயர் பொருட்கிடனாய் உடனிலைக் கூட்டாய் ஒருநெறியசைத்தாய் ஓரினந்தழுவிப் பல்வகைக்குறிப்பிற் படர்ந்து முற்றியையு வண்ணப் பெருஞ் சொல்லாக நிற்றலின் சொல்லாற்றலும் உண்டென்க. ஆயின் இவ்வாசிரியர் பெயர் இச்செய்யுளின் இடை கடைகளில் ஒன்றின் நிறுத்தாது முதலடி முதற்சீர் எதுகைத் தொடைக்கண் நிறுத்தத்திற் குறித்தது யாதோ எனின், ஒன்றிரண்டெனக் கொண்டுறும் மறை ஆகம நன்றிரு முடிபின் நடுநிலை நடா அய்ப் புலம்பெறு தத்துவ நியதியிற் போந்து உண் மலந்தெறும் அறிஞர் வாழ்த்திப் பரவும் ஆசிரியர் சன்மார்க்கம் முதலிய மார்க்கம் நான்கனுள் தலைமையில் தலைமையாய

உத்தம சன்மார்க்கத்தினர் என்பது குறித்த தென்க. இங்ஙனம் உத்தம சன்மார்க்கத்தினர் என்பதை ஆசிரியர் கூறிய "இது வென்ற தெல்லாம் பொய்யென்றான்"[1] என்னுந் திருவெண் பாவாற் காண்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

குருராயன் என்பது திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப் பெயராய் நின்று, ஓதி உணர்ந்து பன்னாள் பல சாதனங்களில் முயன்று முயன்று ஆசாரியத்தன்மை ஒருவாறு அரிதிற் கிடைக்கப்பெற்றும் ஓரோர் காலங்களில் அவத்தை வயப்பட்டு மயங்கும் மற்றை ஆசாரியர் போலாது ஓதாமல் வேதாகமாதிகளை முற்றும் உணர்ந்து இறைப்போதும் ஓர் சாதனங்களில் முயன்ற தின்றி. ஞானாசாரிய அருளிலக்கணங்கள் அனைத்தும் தாமே தம்பால் நிரம்பி நிற்ப அமர்ந்தனர் என்பதூஉம், ஓதி உணர்ந்த அவ்வாசாரியர்க்கெல்லாம் அவரவர் அறிவின்கண் அருளுருவாய் நின்று அறிவித்தும் ஆசாரிய உருவாய் வெளிநின்று அனுக்கிரகித்தும் நின்றனர் என்பதூஉம், திரு நோக்கஞ்செய்தல் முதலிய அறுவகைத் தீக்கையாலும் அன்றித் தமது திருவுருவைக் காண்டல் நினைத்தல் மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன் பெற நின்ற திருவருட் பெருமையர் என்பதூஉம் குறித்த தென்று உணர்க. இங்ஙனம் ஓதாமல் வேதாகமாதி உணர்ந்தமை முதலியவற்றை ஆசிரியர் கூறிய "தன்மையு முன்னிலையும்"[2] என்னும்திருவெண்பாவாற் காண்க.

அல்லதூஉம், குருராயன் என்பது வாதுவென்ற சம்பந்தன் என்பதற்கு மேனிற்க வைத்த விதப்புக் குறிப்பால் பிள்ளையார் இவ்வவ தாரத்தின் மேனின்ற அவதாரத்தினும்

1. இதுவென்ற தெல்லாம்பொய் யென்றான் எனக்குப்
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு – அதுநாங்காண்
என்றா னதன்பேர் இரவைப் பகலாக்கும்
ஒன்றோ பரமசுக மோ. 44

2. தன்மையு முன்னிலையுந் தானாய்ப் படர்க்கையுமாய்
என்னொழிவில் இன்புமாய் இன்புமிது – என்னாத
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்றான்
ஓதாமல் வேதமுணர்ந் தோன். 42

குமாரசற்குருவாய் அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித் தருளிய ஆசாரியத் தலைமையும் குறித்த தெனக் கொள்க. அருணகிரிநாதர்,

தென்ன வனங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றாற் றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே. [3]

என்றதனால் பிள்ளையார் இவ்வவதாரத்திற்கு மேனின்ற அவதாரத்தில் குமாரசற்குரு வென்பது காண்க.

கல்லாடம்,

உழன்மதிற் சுட்டதழனகைப் பெருமான்
வணங்கிநின்றேத்தக் குருமொழி வைத்தோய்
குறுமுனி தேற நெடுமறை விரித்தோய், [4]

சித்தியார்,

"அருமறை ஆ கமம் அங்கம் அருங்கலைநூல் தெரிந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அருட்குருவாங் குருளை" [5]

என்பவைகளால்அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித்த ஆசாரியத் தலைமையை உணர்க.

ஆயின், குருவேந்தன் என்னாது குருராயன் என்றது எது குறித்தற்கோ எனின், நான்காம் வேற்றுமையால் அடுத்து மிக்குயர் நெறிப்பொருண்மையின் வந்த காரகச் சிறப் பொருதலைத் தொடர் மொழிப் பெயராய் இக் குருராயன் என்பதன் கண் குரு என்பதன் முதனிலை யெழுத்துத் தமிழியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும், ராயன் என்பதன் முதனிலை யெழுத்து தமிழியல் விதியின்றி ஆரியவியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் வந்து இருவகை இயலுங் கோடலின், இதனைத் தம் பெயராகவுடைய பிள்ளையாரும் தமிழ்நூல் வடநூல் என்னும் இருவகை நூற்கும் உரியர் என்பது குறித்தற்கு என்க. ஆசிரியர் "மறைப்புலவன் தமிழ்க்குரிசில்

3. கந்தரந்தாதி, 56
4. முருகன் துதி.
5. பரபக்கம், முருகன் துதி.

*சீகாழிச் சம்மந்தன்"[6] என்றதனால் இருவகை நூற்கும் உரியர் என்பது காண்க என்க. அல்லதூஉம், பொருள் வேறுபடாது சிறிதே வடிவு வேறுபட்டு நின்ற குருராயன் என்பது தன்னை உள்ளூன்றி நோக்கினார்க்குக் இலைமறைகாய்போல் ஐ என்னும் உயிர்மெய்யோடிருந்த தன் முன்வடிவ முட்கொண்டு விளங்கக்காட்டி நிற்கின்றதாகலின், இதனையுடைய பிள்ளை யாரும் தமது கடவுட்டன்மை வேறுபடாது உத்தமபுருட உருவங் கொண்டு நின்ற தம்மை அன்பால் உள்ளூன்றி நோக்கி னார்க்குக் குமாரசற்குரு என்னும் பெயர் கொண்டு அளவிகந்த சூரியர் உதயம் போன்று ஒளி வீசும் தம் முன்னுருவாய தெய்வத் திருவுருவுட் கொண்டு விளங்கக் காட்டி நின்றனர் என்று குறித்தற் கென்பதுமா என்க. ஆளுடைய பிள்ளையார் புராணம்,

மறையவர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியின் ஒளியே வெளியேவந்
திறையவன் உமையா ளுடனருள் தரஎய் தினையென்பார்.[7]

என்று மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக் கண்டு சீகாழியுள்ளார் வியந்து கூறிய வாறாய இச்செய்யுளால் உள்ளூன்றி நோக்கினர்க்குத் தம் முன்னுருவைக் காட்டி நின்றனர் என்பது காண்க என்க. இனி இன்றியமையாக் காட்டுளதேற் காட்டுவதன்றி மற்றைய விரிக்கிற் பெருகும் என்க.

அல்லதூஉம், குரு என்பதன் ஈற்று உயிர்மெய்யோடு ராயன் என்பதில் முதலுயிர்மெய்ப் புணராப்புணர்க்கையாய் நின்றதாகலின்,

இங்ஙனம் ஆனந்த வடிவராகிய பிள்ளையாரும் தாம் கொண்டருளிய மானிடத் திருவுருவோடு புணராப்

6. சத்தியநிர் வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்துவழி காட்டு மறைப்புலவன் – சுத்தன்
தமிழ்க்குரிசிற் சீகாழிச் சம்பந்த னென்பான்
எமக்கருளிச் செய்த திது.
7. 92 வது திருப்பாட்டு (பெரியபுராணம் – 1995)
*சீகாழி - சீர்காழி

புணர்க்கையாய் நின்றனர் எனக் குறித்தற் கென்பதுமாம் என்க.

அல்லதூஉம், குறிலிணைக் கெதிர் நெடில் குறில் எண்ணீடாக நிற்பவும் ஈற்றில் அவ் வெண்ணீடின்றி ஒற்று நிற்பவும் தொடர்ந்த மொழியாகலின் பிள்ளையாரும் பக்குவர்க்கு மறைப்பொருளாயும் அதிபக்குவர்க்கு அனுபவப் பொருளாயும் இவ்விரண்டினும் கலவாது அதீதப் பொருளாயும் நின்றனர் என்று குறித்தற்கென்பதுமாம் என்க. இங்ஙனம் குருராயன் என்பதில் கு - வென்பது இருள், ரு - வென்பது அருள், ராயன் என்பது விளங்கச் செய்கின்றோன் என்பது பொருளாம். இதனால் கு - வென்னும் அசுத்தாவத்தையில் நின்றோரை ரு - வென்னுஞ் சுத்தாவத்தையில் தாம் நின்ற வண்ணம் நிறுத்து கின்றோர் குரு ஆவர். இச்சுத்தாவத்தைக்கு ஆதார னாகியும் அதீதனாகியும் விளங்கி இவ்வவத்தை யினின்றும் அக்குருவா யினோர் தாழாத வண்ணம் அருள் செய்து நின்று அதீதப் படுத்து கின்றோன் ராயன் ஆவான் ஆகலின், இதனாலும் உணர்க என்க.

எழுத்தாதிப் பல்வகைக் குறிப்பிற் பொருள்நெறி பற்றி நின்ற நோக்கம் செறிவு நுட்பம் இங்கிதம் இன்பம் கம்பீரம் சிறப்பு உறுதி முதலிய நற்குணந் தழீ இய சொற்புண ரீதென்றே, ஆசிரியரும் "சரி தாதி நான்கினுக்கும்"[8] என்னும் திருவெண் பாவின் இடைக்கண் குருராயன் என்று இதன்பெருமை தோன்ற வைத்தனர் என்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகுமென்க.

வாது வென்ற சம்பந்தன் என்பதில் பொதுவானே வாது வென்ற என்றது என்குறித்தோ எனின், எண்வகைக் குன்றத்து எண்ணாயிரவராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்கள் ஒருங்கே கூடித் தென்மதுரைக்கண் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருக்காற் செய்த சுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானும் திருவாக்கானும்

8. சரிதாதி நான்கினுக்குஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல் – குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ணால்வர்க் குபதேச
மானத் தையுநிகழ்த்தி னான்.

வென்று திறல் கொண்டமை யன்றியும், பரசமய கோளரி என்று தானே ஒலித்த திருச்சின்னத்தின் தெய்வப்பேரொலி கேட்டு உளம் பொறாது எதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்த நந்தியின் பொய்த் தருக்கமும் புழுத்தலையும் பொடி பட்டழியவும், பின்னர் உள்ளது போன்றில்லதைப் பற்றிச் சாக்கியக் குழுவுள் தலைவனாய சாரிப்புத்தன் சிற்சில வகையாற் செய்த சமய வாதந் தலை தடுமாறவும், செந்தமிழ் வேதத் திருமுறை தாங்கி மேம்படும் அறிஞரான் வெற்றிகொண்டமையும், திருவோத் தூரின்கண் அரனுக்கிடுபனை ஆண்பனையாயிற்றே என்று அசதியாடிய அமணக்குழு உக்களின் வாய்வாதங்கள் மண் பட்டொழியத் தாம் திருவாய் மலர்ந்த திருக்கடைக்காப்புள் ஓர் மொழியானே அவ்வாண்பனை பெண்பனையாகச் செய்து விறல் கொண்டமையும் குறித்ததென்க.

அல்லதூஉம், வாது என்பது இலக்கணையாகக் கொண்டு பெருமண நல்லூரின்கண் திருமண நல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட்கெல்லாம் தொன்று தொட்டு இடைவிடாது உடல்நிழல் போல் சூழ்ந்துள பிறவிப் பெருவாதுகள் அனைத்தும் வென்றதூஉம், திருப்பாச்சில் ஆச்சிராமத்தின் கண் மழவன் மகளார்க்கு அடுத்த முயலக வாது வென்றதூஉம், மருகற்கண் ஓர் வைசியனுக்கு அடுத்த விடவாது வென்றதூஉம், இவை முதலியவும் குறித்த தெனினுமாம் என்க.

வெற்றி கொண்ட பொருட்டிறன் முதலியவற்றுள் ஒன்றேனும் தோன்றக் கூறாது இலேசானே வாது என்றது என்குறித்தோ எனின், பிறர்க்கு இங்ஙனம் வேறல் தம்மானும் துணைமையானும் பற்பல நாள் பற்பல வகையில் முயற்சி செயினும் முற்றாதெனினும், பிள்ளையார்க்குச் செந்தமிழ் பொழியும் திருவாக்கானே ஆண்டாண்டு அவ்வேறல் முற்றிய தென்பது குறித்தென்க. வாது என்பது குருராயன் என்பத னோடும் சம்பந்தன் என்பதனோடும் சாராது நடுநின்றமையின், அத்துவித நெறியினும் சேராது துவிதநெறியினும் சாராது நின்ற பதிதவாதிகளது பயனில்வாதம் எனினும் அமையும் என்க.

எதிரேற்கப்பட்டு எதிர்வினைக் கீழ்ப்பட மேற்கொள் வினையெழுச்சிப் பொருளின் வந்த வெல் என்னும் பிற வினைப் பகுதியால் அடுத்த வென்ற என்னும் பெயரெச்சம் சம்பந்தன் என்னும் பெயர் கொண்டு முடிந்து, இங்ஙனம் வெற்றி கொண்ட பருவம் பிள்ளையார்க்கு இளங்குமாரப் பருவம் எனக் குறித்ததென்க. என்னை? எச்சம் என்பது இளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தன் என்பது பிள்ளையார்க்கு மூவகைவைக்கண் மூவுலகம் புகழப் பொற்பொடு புணர்ந்த அற்புதத் திருப் பெயராகலின் ஆண்டுப் பெருமான் அருளப் பிராட்டியார் அளித்த சிவஞானத் தெள்ளமுதருந்தி அச்சிவஞானத்திற்கு உரிமை பூண்டமை குறித்ததென்று உணர்க. ஆயின் சிவஞான சம்பந்தன் என்னாது சம்பந்தன் என வைத்தது என்கொலோ எனின்:- சிவஞானமுமன்றிச் சிவானந்தம் ஆனந்தாதீதம் என்பவைக்கும் உரிமை பூண்ட தலைமை பற்றியும் அவற்றை உலகுயிர்க்கு இங்ஙனமென் றுணர்த்தி உரிமை செய்விக்கும் மாட்சி பற்றியும்அங்ஙனம் வைத்த தென்க.

அல்லதூஉம், சுருங்கச் சொல்லுதல் வனப்பினால் சம்பந்தன் எனவே சிவஞானசம்பந்தன் என உரிமைச்சிறப்பு வழக்கால்தானே தோன்றும் என வைத்ததெனினுமாம் என்க. எங்ஙனம் எனின், இந்திரன் என்பது இறைமைச்சிறப்பு வழக்கால் தேவேந்திரனையும், உடையானென்பது பொருட் சிறப்பு வழக்கால் பொன்னுடையானையும் குறிக்குமாகலின் என்க.

வள்ளல் மலர்த்தாள் என்னும் ஒருவகை வனப்பு இரு வகைச் சந்தி மூவகை மொழித்தொகைச் சொற்றொடர்க்கண் வள்ளல் என்னும் குணப்பெயர் வினைமுதற்றொழிற் பயனுறப் படுமுடைமைக் குணப்பெயராய் நின்று பிள்ளை யாரது திருவடிகள் தம்மை அடைந்தோர்க்கு வரையாது ஆனந்தப் பேற்றை அளித்து அவரைத் தாங்கிக் கோடலைக் குறித்ததென்று உணர்க. அஃதேல் ஆனந்தப் பேற்றைத் தருதற்குந் தாங்கிக் கோடற்குங் கருத்தர் பிள்ளையாரன்றோ?

அங்ஙனம் இருப்பத் திருவடிகட்கு இங்ஙனங்கூறல் எங்ஙன மெனில்:- திருவடிகள் தம்மை வழிபடுவோர்க்கு இரங்கி இன்ப மீதற்பொருட்டு எழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை அவ்வழிபடுவோர்பால் வருவித்தலானும், ஞானதீக்கை பண்ணுங்கால் அவர் சென்னியிற் சூட்டப்பட்டு ஐக்கியம் வருவித்தலானும், நித்தியானந்தப் பேறு வாய்க்கு மாகலின் இங்ஙனமென்க.

அல்லதூஉம், வாட்டமில் அருளும், கோட்டமில் குணனும், அசையா நிலையும், நசையா மனனும், வெகுளாப் பண்பும், விடாப் பேரன்பும் செவ்வியின்மரீஇ எவ்வெவர் எவ்வகை வேட்டனர் அவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையாதீதல் வள்ளற்றன்மை என்பவாகலின், இவ்வள்ளற் தன்மையைத் தம்பால் அடைந்தோரிடை அடைவித் தருளும் கருணைபற்றி அங்ஙனங் கூறியதெனினும் அமையும் என்க. அஃதேல் வள்ளற் றன்மை வழங்கு மலர்போலுந் திருவடி யென்றன்றோ உரை விரித்தல் வேண்டும், அங்ஙனமன்றி வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் தாளென விரித்திருக் கின்றதே எனின்; அங்ஙன மடைவித்தலும் வள்ளற் றன்மையே யாகலினும் உடைய தொன்றன்றே உதவப்படு மாகலினும் இங்ஙனம் விரித்தல் அங்ஙனம் கூறற்கும் அமைதியாம் என்க.

அல்லதூஉம், அருளின்றி அமையாத வள்ளற் றன்மைக்கு அவ்வருளே முதற்காரணமாகலின், ஆனந்த வடிவராகிய பிள்ளையார் அவ்வானந்தப் பேற்றை அளிக்கும் வள்ளற் றன்மைக்கு முதற் காரணமாகிய திருவருட்சத்தியே திருவடி என்று குறித்தற்குக் காரணத்தைக் காரியமாக ஈண்டு உபசரித்த தெனினும் அமையுமென்க.

அல்லதூஉம், எமது திருவடிகளை வழிபடின் வீட் டின்பம் எளிதில் தருவோம் என்று பிள்ளையார் விதித்தருளிய அருள் விதிப்படி அறிந்து வழிபடின், அவ்வழிபாட்டால் அவ் வீட்டின்பந் தரப்பெறுதல் உண்மையாகலின், அவ்வுண்மை நோக்கி ஈண்டுக் கூறியதெனினும், பிள்ளையார் திருமேனி

முற்றுந் தெய்வத் தன்மை பூரணமாகலின் அதனைஅறிவிக்க ஈண்டு கூறியதெனினும் அமையுமென்க. திருவடிகட்கு அடையாய வள்ளல் என்பதூஉம் ஆசிரியர் பெயராய வள்ளல் என்பதூஉம், அடி இணை எதுகைத் தொடையாய் எழுத்து அசை சீர் ஒலி பொருளாதிகளால் ஒற்றுமை கொண்டு நின்று பிள்ளையாரது திருவடித் தீக்கைக்கும் ஆசிரியர் அதிபக்குவத் தன்மைக்கும் உள்ள ஒற்றுமைப் பொருத்தம் விளக்கின என்க.

வள்ளல் என்பது பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப் பெயராகக் கொண்டு பொருள் கூறுவாறும் உளர். அங்ஙனங் கூறின், இத்துணைச் சிறப்பின்று என்று மறுக்க. என்னெனின், அவயவச் சிறப்பால் அவயவ குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலும் இன்பமாகலில் என்க. இதனைப் "போற்றிமா னான்முகனுங் காணாதபுண்டரிகம்"[9] என்பதனாற் காண்க என்க. வள்ள மலர்த்தாளெனப் பாடமோதி வள்ளம் போலுங் குவிந்தவாய் மலரென மலர்க்கடையாக உரை விரிப்பாரும் உளர். அங்ஙனம் விரித்தலின் இத்துணைப் பெரும்பயனின் றென மறுக்க. இங்ஙனம் இன்னும் விரிக்கிற்பெருகும் என்க.

மலர் என்பது வள்ளற் றன்மையின் அருகு வைத்த மையின், ஈண்டு நிறைதலுங் குறைதலுமாய் உள்ள நீர்நிலைக் கண் தோன்றியும் அழிந்தும் விரிந்தும் குவிந்தும் வாடியும் நின்று, வண்ணமும் நறையும் வாசமும் சிறிதே சிறுபோது கொண்டு பறித்தலாதிய சிறுதொழிற்படும் மலர்களை நீக்கி, ஆண்டுத் திரிபிலாத் தெய்வத் தெண்ணீர் நிலைக்கண் ஒழியா மலர்ச்சியும் அழியாமணமும் பொன்னிறப்பொலிவும் இன்னற வொழுக்கும் மென்மையுந் தண்மையும் வியப்புறு முருவும் கண்டோர் கண்கவர் காட்சியும் மாட்சியுங் கொண்டு முக் காலமுங் குன்றா மலரைக் குறித்தமை காண்க. என்னெனில் பிள்ளையார் திருவடிகள் மெய்ஞ்ஞான விளக்கமாய் அருண் மணம் வீசிப் பொன்னிறம்பொலிந்து ஆனந்தமொழுக்கி மெல் லெனவுற்றுத் தண்ணெனக் குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்

9. திருவாசகம், திருவெம்பாவை – 20.

புறுமுருவாய் அவரது விருப்ப நோக்கம் பரவ என்றும் ஒரு தன்மை யவாய் இருக்கின்றமையின் என்க. ஆயின் மலர் போலுந்தா ளென்று உவமை விரிந்தபடி நிற்றற்கு இடங்கொடாது மலர்த் தாளென்றது என்னெனின், அத்தெய்வத் திருமலர்தனைக் கண்டோர்க்குச் சிறிய விடயானந்தந் தருதலே யன்றித் திருவடி போற் சிவானந்தந் தரமாட்டாச் சிறுமை நோக்கி என்க.

அல்லதூஉம், சுபவடிவாய் எவ்வகைச் சுபங்கட்கும் முன்னின்று அதனை விளங்குறச் செய்வதாய் மகிழ்வுடையோர் யாரும் மேற்கொண்டணியப்படுவதாய் நிற்கும் நன்மலர் போலும் எனக் கூறினும் அமையும்; என்னெனின், திருவடிகள் அருள் வடிவாய் ஆனந்தப் பேற்றிற்கு முன்னின் றளிப்பதாய் அறிவுடையோர் தம் தலைமேற் கொண்டுஅணியப்படுவதாய் நிற்றலின் என்க.

அல்லதூஉம், மலரை அடைந்த வண்டுகள் அதனது தேனுண்டு களிகொள்ளுதல் போல் திருவடிகளை அடைந் தோரும் அருளானந்தம் பெற்று இறுமாத்தலின் இங்ஙனம் கூறிய தெனினும் அமையும் என்க. இதனைத் தொகையுவமை அணியாகக் கூறியலின்றி வள்ளன் மலர்த்தாளெனக் கூட்டி அற்புதத்தொகையுவமை யணியாகக் கொண்டு பொருள் கூறுவாரும் உளர். அவர் கூறுங் கூற்றிற் பெரும் பயனின் றென மறுக்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகு மென்க.

தாள் என்பது அடிகட்கன்றியும் முயலுதற்கும் உண் ணின்ற பொருள் வெளிப்படாமைக்கும் அதனை வெளி நின்றோர் உட்சென்று கவரப்படாமைக்கும் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கும் அணிதற்கணியின் இருகடையும் இணைத்து நிற்கும் இடைப்பூட்டிற்கும் இடனாகி வந்த பல பொருளொரு சொல்லாகலின், திருவடிகள் தம்மை அடைந் தோரை ஆனந்த நிலையுட் சேர்த்தலும் அங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டும் அவ்வானந்த நிலையினின்றும் போத அசைவு தோற்றி வெளிப்படாமைக்கும் அவத்தைகளுள் சென்று தாக்கிக் கவரப்

படாமைக்கும் காப்பாக அருளுருவாய் அதன் முன்னிற்றலும் சிவத்துடன் சீவனை இடைநின்று கூட்டுவித்தலும் குறித்தது காண்க. இக்குறிப்புணர்த்த வன்றே மலர்க்கால் என்னாது மலர்த்தாள் என்ற தென்றுணர்க.

தலைமேல் வைத்து என்பது: ஆசிரியர் தம் ஆசாரியராகிய பிள்ளையார் திருவடி தீக்கை செய்யத் தாம் பெற்றமை குறித்தது காண்க. அஃதேல், வைக்கப்பட்டு எனச் செயப்பாட்டு வினை யெச்சத்தால் இருத்தற் பாலதன்றோ எனின், ஆசிரியர்க்கு அத் திருவடிக் கண்ணே உள்ள பிரியத்தொடர்ச்சியின் பெருமை தோன்ற இங்ஙனம் நின்று அங்ஙனங் குறித்தது என்க. இதற்கு இவ்வாறன்றித் தலைமேல் பாவனையால் வைத்தெனக் குறித்த தென்று கூறுவாரும் உளராலோ எனின், அவ்வாறு கூறிற் பிள்ளையார் இந்நூலாசிரியர்க்கு ஞானாசாரியர் என்பதும் இவர் ஞானதீக்கை யுடையார் என்பதும் விளங்குதலின்றி மற்றை ஆசிரியர்போல் எடுத்த நூல் இனிது முடிதற்பொருட்டுப் பாவனையால் வழிபடு கடவுட் பழிச்சினர் என்று இலேசிற் கருதப்படுமாகலின் அங்ஙனங் கூறல் மரபன்றென்க. தலையில் வைத்து என்னாது தலைமேல் வைத்து என்றமையால், மறைமுடிக்கண்ணே வயங்காநின்ற அச்செல்வத் திருவடியின் சீர்மை தோன்றிற்று என்க.

ஓர்ந்து என்பதில் ஓர் என்னும் பிறவினை முதனிலை, அறிவு தனக்கெதிரிட்ட உணர்ச்சிப் பொருட்கண் எதிரிடுவது போன்று எதிரிடாது உள்ளாழ்ந்த அப்பொருட்டிறன் எதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியும் எதிரிட்ட பின்னர் விகற்பியாது எதிர்க்குந்தொறும் எதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியும் கோடலின் கருவித்திறனும் தன் திறனும் அருட்டிறனும் உற்றுணர்ந்து அவ்வுணர்ச்சி விகற்பியாது தேறி நின்றமையைக் குறித்தது காண்க. இக்குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவநாயனரும் "ஓர்ததுள்ள முள்ள துணரின்"[10] என்றா ரென்று அறிக.

உள்ளத் தழிவில் என்பதில் உள்ளம் என்பதன் பகாப்

பதவி யீற்றுப் பகுபதப் பொருளின் இடவாகு பெயராய் அணுப் பொருட்கண் வந்த உள் என்னும் பகுதி உட்புறத்தும் அப்போதம் எழுஞ் சிற்றசையும் பேரசையுங் குறித்தது காண்க.

உள்ளம் என்பது வாதனையால் உள்ளெழும் போதத்திற்கு ஆகுபெயராயது. வள்ளலென்பது போன்று ஒழுகிசையாய் வர உள்ள வழிவில் என்னாது பொறுத்திசையாய் வர உள்ளத் தழிவில் என்றது என்கொலோ எனின்:- வேற்றுமை வழியாகஃ-லினும், போதவசைவு சார்பின்றி யமையாமை குறிக்க வேண்டுமாகலினும், சாரியையோடுபுணர்த்தி அங்ஙனங் கூறியதென்க. அழிவு என்பதில் அழி என்னும் பொதுவினைப் பகுதி முன்னர்த் தோற்ற நிகழ்ச்சிப் பின்னர் ஓர் காலத்தும் ஓரிடத்துமின்றிக் கெடுதற் பெயர்ச்சிக்கண் வந்ததாகலின், அப்போத நிகழ்ச்சி பின்னரெக்காலத்தும் உட்புறமென்னு மெவ்விடத்துந் தோற்ற நிகழ்ச்சியின்றி ஒடுங்கியவாறு குறித்த தென்று உணர்க. இங்ஙனமன்றி உள்ளத்தழிவில் என்பதற்கு மனத்தின் அசைவற்ற இடத்தெனப் பொருள் கூறுவாறும் உளராலோ எனின், மனத்தின் அசைவு போத வசைவறில் தானேயறும் ஆகலினும் அஃதறாத விடத்து இஃதெவ்வாற்றானும் அறாதாகலினும் அது பொருந்தா தென்க. இதனை ஆசிரியர் கூறிய "பற்றாத போதும் பதறும்"[11] என்னும் திருவெண்பாவாற் காண்க என்க.

அடுக்குந் தேன் என்பதில் அடுக்கும் என்பது அடுத்தல் என்னும் தொழிற்பெயர்க்கண் தல் விகுதி தன்னொற்றுச் சந்தியொடு நீங்க எதிர் காலப் பெயரெச்ச இடைநிலை உம்மை ககரமெய்ச் சாரியை யூர்ந்து தன்னொற்றுச் சந்திபெற்று ஆண்டு நின்று இறையும் இடைப்பாடு தோற்றாது செறிதற் பெயர்ச்சியும், அடுக்கல் என்னும் தொழிற்பெயர்க் கண் அல் விகுதி நீங்க அவ் வெதிர்காலப் பெயரெச்ச இடைநிலை உம்மை விகுதி நீங்க

10. ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 357

11. பற்றாத போதும் பதறும் பழக்கமதைக்
கற்றா லென்னாகக் கலக்காது சற்றேநீ
தீண்டிவிடிற் றான்காண் செனன மரணமது
மாண்டுவிடி னீசிவமா வை. 106

நின்று தன் வரவு கண்டோடிய குற்றுகரமூர்ந்த மெய்க்கண் ணேறி நின்று இறையும் இடைப் போதின்மை படாது பன் முறை மேன்மேலுறுதற் பெயர்ச்சியும் பொருளாகக் கொண்டு இரு வகைப் பகுதி யொருவகை யெச்சமாக நிற்றலின், சிறிதும் இடத் தானும் காலத்தானும் பிரிவு தோன்றாது செறிந்து பன்முறை மேன்மேலெழும் ஆனந்தத் தேனென்று குறித்த தென்றுணர்க.

உள்ளத் தழிவி லடுப்பது ஆனந்த மாகலின் தேனென்பதை உவமக் குறிப்பால் சிவானந்தத்தேன் என்ற தென்று உணர்க.

தேனுண்ட வண்டு அசைவின்றி அத்தேன் மயமா யிருத்தல் போல, ஆனந்தானுபவத்தர் போத அசைவின்றி இவ்வானந்த மயமாகயிருத்தலின் உவமையாகக் குறிக்கப்பட்ட தென்று உணர்க. இதனை யொப்புமைக் கூட்ட மொட்டாதி களாகக் கூறுவாறும் உளராலோ எனின், அவ்வாறு கூறினும் பொருள் சிதையாமையின் ஒருவாறு அமையும் என்க. போத அசைவின் கண் தோற்றல் விடயானந்த மாகலில், போத ஒழிவின் கண் தோற்றல் சிவானந்தமெனக் குறித்தற்கு உள்ளத் தழிவில் அடுக்குந்தேன் என்ற தென்று உணர்க, எங்ஙன மெனின், உள்ளத் தழியாமையின் அடாத் தேனென்று எதிர் மறுக்கப் படுதலின் என்க. மதுரம் பற்றித்தேனை ஆனந்தத் திற்கு உவமை கூறுவாரும் உளராலோ எனின் அது நா விடய மாய் இற்றைப்போது நிற்றலின் இத்துணைச் சிறப்பின்று என்க.

அன்பரெலா முண்ண என்பதில், அன்பர் என்பது பொருள் புகழாதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவானந்தம் எந்நாள் அடைதும் இன்று இடைவிடாது அதனையே விரும்பிப் பயில்வோரைக் குறித்ததென்று உணர்க. எலாம் என்பது சரிதாதி கன்ம மார்க்கங்களைக் கூறும் பிற நூல்களெல்லாம் பருவம் நோக்காது சாதி சமயாசார விகற்பங் களை நோக்கிச் சிலரை நீக்கியும் சிலரை நிறுவியும் அதிகரித்தல் போலாது அச்சாதி சமயாதிகளில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் யாரேனும் பருவத்தராயின் இந்நூற்கு உரியராவர் என்பது குறித்தது என்று உணர்க.

உட்கொள என்னும் பொருளுட்கொண்டு பொருட்டுப் பொருளிற்போந்த உண்ண என்னும் வினையெச்சம் ஆனந் தானுபவத்திற்கு விடாத இலக்கணை யாயிற்று என்று உணர்க. என்னை எனில், உண்ணலில் பசி நீங்கல் போல் ஆனந்தானு பவத்திற் பசுத்துவ நீங்கலின் என்க.

பயன் காரணம் பற்றி வந்த ஒழிவிலொடுக்க நூல் என்பது ஒழிவிலொடுக்க மென்னும் நூல் ஒழிவிலொடுக்கந் தருநூல் என இரு வழிக்கும் பொதுவாய சந்தியால் வந்தமையில், தன்னை வேதாந்தத்திற்கும் சித்தாந்தத்திற்கும் பொது வென்று குறித்த தென்று உணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தான் என்பதில் வேற்றுமை சாரியை உருபு முதலிய ஒன்றும் விரியாது நிற்றலின், ஞானா சார மன்றிக் கருமாசார மொன்றும் விரியாத இந்நூலின் நின் மலத் தன்மை தோன்றிற் றென்று உணர்க. உரைத்தான் என்பது ஒருவர் மதி நுட்பத்தால் தாம் கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன் னின் தன்மையைப் பிறரும் அறிந்து பயன் கோடற்குக் கட்டளைக் கல்லில் உரைத்துக் காட்டல் போல், சுருதி குரு அனுபவத்தால் தாம் அனுபவித் தறிந்த சிவானந்தப் பேற்றின் தன்மையைப் பக்குவரும் அறிந்து பயன் கோடற் பொருட்டு நூற்கண் உரைத்துக் காட்டினார் என்று குறிப்புறுத்திற்று என்று உணர்க.

என்னெனில் உரை என்பது பொன்னுரையும் பொருளாகக் கோடலின் என்க. உரைத்தான் என்னும் பயனிலை செயப்படு பொருளின் இறுதியில் இயையாது செயப்படு பொருட்கும் கருவிப் பொருட்கு மேல் தாடலை மேல் வைத்து என்பதன் இறுதியில் தொடர்ந்து நின்றது என் னெனின், சிவஞானத் திக்கை யுடையராய் உரைத்தா ரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடி சான்றாகத் தாம் கண்ட அனுபவத்தை விளங்க உரைத்தாரென்பதும் குறித்தற்கு என்க. என்னை? தாடலை மேல்வைத்து எனவே சான்றாக வைத்து என்பது தானே அமையுமாகலின்.

தலைமேல் வைத்து என்பதன்பின் நிற்கக் கடவதாய ஓர்ந்து என்பது செயப்படு பொருட்பின் இறுதி நிலையாய் நின்றது என்னெனின், இந்நூல் கற்றோர்க்குக் கருமங்குறைந்து ஞானமேலிடுதலுண்மை குறித்தற்கு என்க. எங்ஙனம் எனின், அவ்வோர்ந்து என்பது வினைக்குறையாகலின் என்க. 'உள்ளத் தழிவி லடுக்குந்தேனை யன்பரேலா முண்ணவொழிவி லொடுக்கநூ லோர்ந்துரைத்தான்' எனக்கொண்டு போத ஒழிவின்கண் அடுப்பதாய ஆனந்தத்தை அன்பரெல்லாம் அனுபவிக்கும் பொருட்டு வேதாகம முடிபான ஞானநெறியை ஆராய்ந்து ஒழிவிலொடுக்கம் என்றோர் நூலை உரைத்தார் எனப் பொருள் கூறுவாரும் உளர். அங்ஙனங் கூறின் ஆசிரியர் பரஞானமுடைய ரென்பது தோற்றாது அபரஞான முடை யாராகப் பொருள்படு மாகலினும். அபர ஞானத்தாற் கூறப் பட்ட நூல்மிகச் சிறவாமையானும் அது பொருந்தாதென்க.

இந்நூல் இயற்றற்கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்புப் பாயிர இலக்கணத்துள் ஆக்கியோன் பெயரே என முதனிறுத் தப்பட்ட நிமித்த காரணச் சிறப்புடைமையும் இச்செய்யுள் முடிபுக்கு எழுவாயாந் தலைமை யுடைமையும் பற்றி வள்ளல் என முதல் நிறுத்தியது என்க. இந்நூலாசிரியர்க்கு ஆசாரியர் இவரென்பது தோன்றற்கு அவ்வள்ளல் என்பதன் புடை குருராயன் என்பதை நிறுத்திய தென்க. இங்ஙனம் ஆசாரிய ரென்பவர் பிள்ளையார் என்பது தோன்றற்கு ஞானசம்பந்த னென வைத்தல் வேண்டுமாகலின் அந்த ஞானத்தைக் குறிக்கும் பாசவெற்றியாய 'வாதுவென்ற' என்பது முன் கூட்டிச் சம்பந்தன் என அதன்புடை நிறுத்திய தென்க. இரண்டாம் அடிக்கண் பிள்ளையார் தாள்கள் நிறுத்தத் தொடங்கி முன்னர் அத்தாள்களின் இயற்கை அருளென்று குறிக்க வள்ளல் என்றும், அதன் வடிவம் ஆனந்த மென்று குறிக்க மலரென்றும் முறையே வைத்து வள்ளல் மலர்த்தாள் என நிறுத்தியதென்க. தாள்களன்றியும் பிள்ளையாரும் அருளியற்கையரே என்பது குறிக்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந் தோற்றியவுடன் வள்ளற் சத்தந் தோன்ற நிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தியவை சொற்

பொருண் முறைநிலை. தாள் என்பதற்கும் தலை என்பதற்கும் உள்ள சொற்பொருள் சம்பந்த இன்பம் பற்றித் தாடலை என்றும், தலை என்பதற்கும் மேலென்பதற்கும் உள்ள உரிமை நோக்கம் பற்றித்தலைமேலென்றும், மேலென்னும் இடப் பொருட்கு வைத்தற்றொழில் சிறந்தது பற்றி மேல்வைத்து என்றும், வைத்து என்பதற்கும் உரைத்தான் என்பதற்கும் இறுதியும் முதலும் இனமாதல் பற்றி வைத்துரைத்தான் என்றும் முறையே நிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தியவை சொன் முறை நிலையும் சொற்பொருண்முறை நிலையுமாம். இங்ஙனம் முற்றும் முறை நிலை கூறப்புகின் மிகக் பெருகுமாகலின் ஒரு வாறு காட்டினம். மற்றயவும் இவைகொண்டு உணர்க என்க.

இச்செய்யுள் பொருள் ஆசிரியரது அருளறிவின் மாட்சிமையை வெளிப்படையானும் குறிப்பானும் விளங்க விரித்தலின் வாகைத்திணையுள் சால்புமுல்லைப் பொருளின் பாற் பட்ட தென்க. என்னை? "சால்பு முல்லைப் பொருள்; வான் றோயு மலையன்ன சான்றோர்தஞ் சால்புரைத்தன்று"[12] என்பவாகலின்.

இச்செய்யுள் தன்னுள் செயப்படு பொருளாய் நின்ற நூற்சிறப்பைத் தன்னாலும் தன்னுறுப்புக்களாலும் குறிப்பாற் குறித்து நின்ற நன்னோக்குடைச் செய்யுள் என்று உணர்க. அங்ஙனம் குறித்தவை எங்ஙனமெனின் :-

இச்செய்யுள்தான் கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா என்னும் முப்பாவினும் சிறந்த வெண்பாவாகலின், இக்குறிப் பால் இந்நூல் சரியைநூல், கிரியைநூல், யோகநூல் என்னும் முந்நூலினும் சிறந்த ஞானநூல் என்று குறித்தது என்க.

தான் ஈரசையான் ஆசிட்டு இருவகைத் தளைதழீஇ ஒழுகிசைச் செப்பலோசையான் வந்ததாகலின், இக்குறிப்பால் இந்நூல் ஆகம முடிவும் வேதமுடிவும் கூறும் இருவகை நெறியும் ஒருவகை நெறியாத் தழீஇக் கொண்டிருந்தமை குறித்தது என்க.

12. புறப்பொருள் வெண்பாமாலை, 185.

தான் ஒன்றடுத்த இரட்டை முப்பத்தா றெழுத்துக்களைக் கொண்டு நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் பாசமொன் றடுத்த தத்துவ முப்பத்தாறென்றும் முப்பத்தாறன் தன்மை இவை யென்றும் பகுத்தறிதல் வகையு முணர்த்துவ தெனக் குறித்த தென்க.

தான் நான்கடுத்த முப்பத்தாறு அசைகளை அசைத்து நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் அத்தத்துவ முப்பத்தாற னையும் நியதி களைதல் முறையை உணர்த்துவதெனக் குறித்தது என்க. அஃதேல் முப்பத்தாறன் மேல் நான்கடுத்தது என் னெனின், ஆன்ம தத்துவத்தின் வன்மை தோன்றற்கு ஓரசையும், வித்தியா தத்துவத்தின் வலி தோன்றற்கு ஓரசையும், நாத தத்துவத்தின் பெருமை தோன்றற்கு ஈரசையும் மிகுந்தன என்க.

தான் பதினைந்துசீர் சீர்கொளநிற்றலின், இக்குறிப் பான் இந்நூல் ஆசாரியத் தன்மை, சீடத்தன்மை, பதித்தன்மை, பசுத்தன்மை, பாசத் தன்மை, உபதேசத் தன்மை, பக்குவத் தன்மை, யோகநிவர்த்தி, கிரியை நிவர்த்தி, சரியை நிவர்த்தி, விரத்தி விளக்கம், துறவுத் தன்மை, அருளவத்தைத் தன்மை, வாதனை மாண்டார் தன்மை, நிலை இயல்பு என்னும் இப் பதினைந்தனையும் சீர் பெறக் கொண்டதெனக் குறித்தது என்க.

தான் எழுவகைத் தளையின் இயைந்த தாகலின், இக் குறிப்பான் இந்நூல் ஆன்மதரிசனம், அருட்டரிசனம், பரை தரிசனம், பரையோகம், பரையோக நீக்கம், போத ஒழிவு, இன்பப்பேறு என்னும் எழுவகை நிலையும் அறிவிப்ப தெனக் குறித்தது என்க.

தான் தனிச்சொல் பெற்று நான்கடியுடன் நடந்த தாகலின், இக்குறிப்பான் இந்நூல் கூறும் ஒப்பற்ற ஞானமும் சுத்தச்சரியை, சுத்தக் கிரியை, சுத்தயோகம், சுத்த ஞானம் என நான்கு பாதத்தோடு நடப்பதெனக் குறித்தது என்க.

தான் ஒரூ உத்தொடையொடு முத்தொடையான் இயன்றதாகலின், இக்குறிப்பான் இந்நூல் சுருதி குரு அனுபவம் என்னும் மூன்றும் ஒத்தியன்ற தெனக் குறித்தது என்க.

அல்லதூஉம், இச்செய்யுள் அடி நேரடியாய் விதித்த எழுத்தெல்லையின் இகவாது நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் மெய்வீட்டின் நெறித்தாய் அவ்வீட்டின் நெறிக்கு எல்லையாய ஞானத்தின் இகவாது நின்றது எனினுமாம் என்க. எல்லை என்னெனில், "பத்தெழுத்தென்ப நேரடிக்களவே, ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே"[13] என்பவென்க. இங்ஙனங் குறித்தற் கன்றே இச்செய்யுள் ஈற்றடியில் நூற்பெயரென வேறு அடை கொடாது தனிமையில் நிறுத்தியது என்க.

இச்செய்யுள் சிறப்புப் பாயிரத்தது ஆயின் அப்பாயிரத் திலக்கணம் இதனுள் இருந்தவாறு எங்ஙனம் என்னின் :- வள்ளல் என்பதனால் ஆசிரியர் பெயரும், குருராயன் வாதுவென்ற சம்பந்தன் வள்ளல் மலர்த்தாடலைமேல் வைத் துரைத்தா னென்பதனால் ஞானாசாரியராகிய பிள்ளையார் அருளுபதேச வழித்தென உட்கொளப்படுதலின் வழியும், இந்நூற்றொடர் தமிழ்த்தொடராகலின் இத்தமிழ் வழங்கு நிலமே இந்நூல் வழங்கு நிலமெனக் கருதப்படுதலின் எல்லையும், ஒழிவிலொடுக்க நூல் என்பதனால் நூற்பெயரும், ஒழிவிலொடுக்கமென அன்மொழித் தொகைப் பெயர் மாத்திரையின் நில்லாது நூலென விரித்தமையின் இந்நூலுந் தொகைவிரியுடைய தெனக் கருதப்படுதலின் யாப்பும், உள்ளத் தழிவில் என்பதனாற் கருதிய பொருளும், அன்பரெலாம் உண்ண என்பதனால் அன்பரெலா முனற்பொருட்டு இஃதி யற்றுக என்று உள்ளெழுந்து எதிரிட்டு நின்றது ஆசிரியரது பெருங்கருணை எனக் கருதப்படுதலின் கேட்போரும், உள்ளத் தழிவில் அடுக்குந்தேன் என்பதனால் பயனும் புலப்படு மாகலின்; அவை இருந்தவாறு இங்ஙனம் என்க.

இப்பாயிரச் செய்யுள் முற்காலத்தது.

*இவ்வுரை திரு அருட்பிரகாச வள்ளற் பெருமானார் அவர்களாற் செய்யப்பட்டது.*

13. தொல்காப்பியம், செய்யுளியல், 38.

---

## இந்நூல் உரைபாடத்திற் சிலசில இடங்களிலுள்ள மறைசொற் பொருட்குத் தெளிசொற் பொருள்

1. பவுரிக்கூத்து - வலமிடமாகச் சூழ்ந்தாடுங் கூத்து. குறுமன்னியர் - சிலரால்அறிந்து மதிக்கப்படும் பிரபுத்தும் உடையோர்.

மகாமன்னியன் - பலராலும் அறிந்து மதிக்கப்படும் பிரபுத்தும் உடையோன்.

பிரளயாகலர் - மும்மலங்களுள் ஒருமல நீத்தோர், அவர் பிரமன் முதலானோர்.

2. ஞாதுரு -- காண்பான், ஞானம் - காட்சி, ஞேயம் - காணப் பட்டது.

3. சூக்குமைவாக்கு-வார்த்தைதோன்றற்குமுதற் காரணமாய் உந்தியிலே நாதவடிவாய் நிற்கும் ஒரு சத்தி.

பகடிக் கூத்து --- உள்ளது போன்று இல்லாததைக் காட்டும் வெளிவேடம்அல்லதுஅகசியக் கூத்து

4. பரஞானம் - அனுபவஞானம், அபரஞானம் - வாசகஞானம்.

5. அரிப்பாளன் - குப்பை முதலிய இடங்களில் பொன் முதலிய அரித்தெடுக்கின்றோன்.
கொழுந்தாடை- கரும்பின் நுனித்தழை

10. சாயாபுருடன் - தன் நிழலைப் பார்த்துப் பின் ஆகாயத்தை உற்று நோக்குகின்றார்க்கு அவ்வாகாயத்தின் கண் புருட வடிவம் போல் தோன்றும் அந்நிழற் காட்சி.

12. பைமறித்தல் - உள்ளிருந்த சரக்கு வெளிப்படப் பைவாய் தொட்டு உட்புறம் மேற்பட்டும் வெளிப்புறம் உட்பட்டும் மடங்க மடக்கல்.

16. கிண்கிணி வாய்செய்தலர்தல் - வட்ட வடிவாக முகங் கொண்டு மலர்தல்.

21. பஃறுளை - பலதுளை.

42. பற்ற - பார்க்கிலும்.

43. அருகித் தோற்றல் - சுருங்கித் தோற்றல்.

52. பிரேரகம் - காரியப்படுத்தல்.

54. பிரதிபலிதம் - எதிர்பிம்பம்.

56. சகச மலம் - அனாதியாகிய மலம்.

65. கடா - வினா.

66. விட்டிசையா திசைத்தல் - நடுவே நில்லாமல் ஒலித்தல்

67. நக்கினம் - நிருவாணம்.

80. தேறிட்ட நீர் - தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப் பட்டநீர்.

99. கவுசனை - யாதாயினும் ஓர் பொருளை உள்வைத் மறைய மேல் மூடிக்கட்டும் மேற்கட்டு.

105. சுழல் விறிசு - கொள்ளி வட்டம்போல் சுற்றுவதாய ஒருவகை மருத்துவாணம். இத்தேயத்து இக்காலத்தில் சுழல்புறிசு என்று வழங்குகின்றது.

109. அநன்னியம் -அன்னிய மல்லாமை.

113. நெற்பொலி - தூற்றாதநெல்

114. தும்பு செறித்து - தும்பு அவிழ்த்து

121. அனுபவிக்கச் சிதைக்கும் - அனுபவிக்க வறிகின்ற போதும்.

150. அவித்தியாகதம் - அஞ்ஞானமயம்.

153. முடி களச முத்தி; முடி - சிரசு, களசம் - நீக்கம், முத்தி - வீடு.

154. வாசியென்ற வார்த்தை - இது செய்க விடுகவென்று நியாய மாகக் கூறும் வார்த்தை.

159. வியாபகம் - கலப்பு, வியாத்தி - கலக்கப்படுவது.

160. விசர்க்கரித்தல் - விடுத்தல்

167. வெறுவீடர் - அனுபவிப்பதற் கில்லாமையால்

விட்டோர் போன்றிருப்போர்.

கறண்டல் - பற்களால் நெருக்கிப் புறண்டுதல்.

177. சேட்டித்தல் - தொழிற்படுத்தல் அல்லது குணக்கேடான தொழில் விளைத்தல்.

183. சிங்கி - விலங்கு.

194. நாங்கூழ் - நாகப்பூச்சி யென்னும் ஓர் கிருமி. விகளம் -மௌனம்.

198. மடலெடுப்பு - பனைமடலால் குதிரைசெய்து ஏறுதல்.

207. ஐவரரசர் - பாண்டு மக்களாகிய தருமன் முதலிய ஐவர்.

227. மந்தகாசப் பிரகாசம் - புன்னகைப் பிரகாசம்.

அடிக்குறிப்புகள்

காப்பு 3:- "உள்ளவுரை நாயேற் குறச் செய்யும்" என்று பாடமோதலுமுண்டு.

காப்பு :- ஈண்டு - இத்தோத்திரச் செய்யுட்கண் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிது முடிதற் பொருட்டு இயற்றப் பட்டன.

41. பரிபூரணமே பரையாய் என்பதைப் பரிபூரணப் பரையேயாய் என்று கூட்டுக.

42. இங்ஙனம் செய்யுட்கட் டானா யென்னுமொருமையை உரைக்கட் டாமாகி யெனப் பன்மையாகக் கூறியது என்னைஎனின், பிள்ளையார் என்னும் திருவருட் பெயரின் பெருமை நோக்கி என்க. இவ்வாறு கூறியவற்றிற்கெல்லாம் விதி இங்ஙனமென்றுணர்க.

51. கதறல் - கதற்றல் என விகாரமாயிற்று.

53. அகந்தை என்பது அந்தையென் றிடைக்குறை யாயிற்று.

76. செட்டையாற் பரிசித்தல் முதலியன அவ்வம் முட்டைகள் தத்தம் பருவமடைதற் கென்றறிக.

அமைத்துக் கொளல்

காப்பின்கண் "ஈண்டு - இத்தோத்திரச் செய்யுட்கள்" என்றவையுள் ஆனைமுக னாறுமுக னென்னுஞ் செய்யுளை யொழித்து வேறு கொள்க.

4. "இக்கதையை இப்பொருளுக்கு" என்றதை அக்கதை இப்பொருளுக்கு கெனக் கொள்க. இங்ஙன மின்னும் சிலவி டங்களிலுள; அவற்றையு மங்ஙனங் கொள்க.

"மாறுபாடாய்க் கருதி" என்பதில் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய ஆய் என்பதை செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாய ஆகவெனக் கொள்க. இங்ஙனம் இன்னும் சில இடங்களிலுள; அவற்றையு மங்ஙனங் கொள்க.

5. 10 முதலியன வடசொற்களுள் ஞாநம் - ஞானம், ஆநந்தம் - ஆனந்தம் எனத் தமிழுக்குப் பொதுவுஞ் சிறப்புமாய நகர - னகரங்கள் சிற்சில இடங்களில் விரவி நின்றன. அவற்றைத்தமிழ்ச் சிறப்பு வழக்கு நோக்கி யமைத்துக் கொள்க.

8. "இருப்பது மன்றி அங்ஙனம் நின்று கேட்குமொழி பிரமோபதேச மொழியாகலின் " என்பதும் சில வுரை பாடங்களி னுண்டு.

69. "ஞானத்தி லின்பை நசிப்பித்து நானதுவா மூனத்தையா ரொழிவிப்போர்" என்பதற்கு, "சுவாநுபவத்தான் ஞானா நந்தத்தைப் பெறாது அதனை விடயச் சேற்றாற் கெடுப்பித்து விடயச் சேற்றி லழுந்தி நின்று அவ் வாநந்தத்தை யடைதற் கேதுவாய்க்கூறும் ஞான சாத்திரங்களைக் கேட்டறிந்த மாத்திரத்தினால் அவ்வாநந்தமயனா னென்று கூறும்" என்பது சிலவுரை பாடங்கிளிலுண்டு; இது உரை வேறுபாடு.

---

# 2. தொண்டமண்டல சதகம்

## 1. நூற்பெயர் இலக்கணம்

தொண்டமண்டல சதகம் - ஒருவாறிதனிலக்கணம் விரிக் கின்றாம்.

இஃது மூவகைமொழி, இருவகைச்சந்தி, முத்திறத் தொகை, ஒரு தலைநோக்க முந்நிலை யிலக்கணச் செந்நிலைத் தொடர்.

முற்பாட்டுயர்பொருட்டலைமை யுடையதி னிலைமை, இடைப்பாட்டுடைய டதுரிமை உடைமை நிலைமை, பிற் பாட்டுடைமை யுரிமையுடைய துடையமையாய இத்தொடரைச் சொற்றிறந் தோன்றத் தொடர்பின்மை செயின், தொண்டன் - மண்டலம் - சதகம் என்று செய்க.

இதனுள், தொண்டனென்பது வழக்கியற்பாடு, ஒற்றுமைச் செறிவு, வேற்றியற்கரணம், குறிப்புயர்நோக்கம், பொருள் விரியாக்கம் குற்றியல் வண்ணம், இடைப்பல் வயிற்றொகை முதலிய சொல்லியற் பாகுபாட்டினமைந்த முதற்றொகைச் சிறப்புயர்திணைக் காரணப் பொருட் பெயர். மண்டல மென்பது வடசொன் னோக்கியற் காரணப் பண்புகோ ளிடப் பெயர். சதகமென்பது வடசொற் பாட்டியற் காரண எண்ணிலைக் குழூ உக்கோட்பெயர்.

இத்தொடர்க்கண் இயைபின்மையிற் பொருள் கொளின்; - தொண்டன்- ஆதொண்டன், மண்டலம் - வட்டம், சதகம் - நூற்றினாலாய கூட்டம் என்று கொள்க. இயைபுண் மையிற் பொருள் கொளின்:- தொண்டன் - ஆதொண்ட னென்னுமோர் அரையன், மண்டலம் - இருபதின் காத எல்லை வட்டமாய நாடு, சதகம் - நூறு செய்யுட்களாலாய கூட்டம் என்று கொள்க. பொருத்த இயைபிற்பொருள் முடிபு கொளின்:- ஆதொண்ட னென்னும் அரையனால்ஆளப்பட்ட இருபதின் காத எல்லை வட்டமாய நாட்டின் வண்மையைக் குறித்த நூறு செய்யுட் கூட்டத்தானாய ஓர்வகை யாப்பென்று கொள்க. இங்ஙனம் வழங்கல் சொற்சுருங்கியல், பொருளாழ்பியல், குறிக்கோளியல், தொகையின்பம், அளவிசைப்பாடு, பல்வயின் வழக்கு, ஒருங்கியலுடைமை முதலிய தோன்றக் காரணம்

பற்றிய பெயர்க்கோள்களை வழங்குவிக்குங் கலைவல்லோர் கண்ணியநிலை யென்றுணர்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

இதனுள் தொண்டமண்டல மென்பத னியலை விளங்க வகுத்துணர்த்துக வெனின்; - ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப் பட்டதனால் ஆதொண்டன் எனக் காரணக்குறிப்பெயரேற்று, இரவி மரபின் கண் ஓர் இறைமகனால்ஆளப்பட்ட எதிரிலாட்சி யுடைமையின் இம்மண்டலத்திற்கு தொண்டமண்டலமெனப் பெயர் வழங்கிற்று.

இனி, ஆதொண்டந் தழையானும்மலரானும் இயற்றிய தொங்கலணிந் தமையின் ஆதொண்டனெனப் பெயர் வழங்கிற்று என்பாரும் உளராலோ எனின் அங்ஙனங் கூறினும் இங்ஙனம் வழங்கல் ஒத்த நிலையென்க.

அற்றேல், ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப்பட்டவனை ஆதொண்ட னென்று குறியீடு செய்தல்எங்ஙன மெனின்; - மேற் கலைவல்லோர் - கண்ணியநிலை யென்றாம், அதனாலுணர்க. வெண்க. அன்றி, கடப்பந்தழைவயிற் கிடத்தப்பட்டவனைக் கடம்பனென்றும், வேப்பந்தழையானும் மலரானுந் தொடுத்த தொங்கலணிந் தோனை வேம்பனென்றும் இங்ஙனம் பலபட வழங்குங் காரணக் குறிப் பெயர்கள் பலஉள. அவற்றாற் றேர்ந்து தெளிக வென்க.

அற்றேல், ஆதொண்டன் மண்டல மெனல்வேண்டும்; தொண்டமண்டல மெனல் எங்ஙன மெனின்;- நிறுத்த மொழிக் கண்ணீற்றுச் சிறப்புயர்திணை ஆண்பாற் படர்க்கை விகுதி யாய அன் னென்பதன்னகர மெய் குறித்துவரு கிளவியோடந் நிறுத்தமொழி பிளவுபட் டிரு சொன்னீர்மையிற் பொருந்தாப் புணர்ச்சியாய்ப் புணர்ச்சியின்பம் பெறாமை நோக்கி, அவை யொன்றுபட் டொருசொன்னீர்மையிற் பொருத்தப் புணர்ச்சி யாய்ப் புணர்ச்சியின்பம் பெறற்பொருட்டு ஒத்த கிழத்திக்குங் கிழவோற்கும் புணர்ச்சியின்பந் தோன்றற் பொருட்டகன்று நிற்கு முயிர்ப்பாங்கிபோன் றகன்றுநிற்பவும், நிறுத்தமொழிக் கண் முதனிலை வேற்றுமை யொற்றுமை விரவுறுப்பாகாரம்

பல்வயின் வழக்குத் தொகையின்ப முதலிய நோக்கித் தொகுக்கப்பட்டுந் தொகாவியலின் ஞாபக விடய வுருவி னருகிக் கண்ணுற்றுநிற்பவும் தொண்டமண்டல மென்று வழங்கிற்றென்க

இஃது இருவயிற்றோற்றம், சிறப்பாட்சியுடைமை, பொருளடைச் சேர்பு, ஒற்றுமைச்செறிவு, ஒத்திசைப்பேறு, நுனித்துணர்புணர்வு, முதலிய நோக்கியலைப் பெற்றுத் தேயவழக்குச் சிறப்புடைச் சொற்றொடரிற் போந்த காரணக் குறிப்பெயரென்க.

தொண்டமண்டல மெனிற் காரணக்குறி விளங்கப் புலப்படலின்றாலோ வெனின்:- மேற் சொற்சுருங்கியன் முதலிய குறித்து வழங்கு வித்தல் கவிஞர் கண்ணிய நிலையென்றாம், ஆதலிற் கூர்ந்தறிக வென்க.

கூர்ந்தறிதற் றன்மையது செய்யுள் வழக்கே யன்றிப் பாடை வழக்குத் தேயழவக்கு முதலிய வன்றா லெனின்:- இத்தொண்ட மண்டலமென்பது செய்யுள்வழக்கு முதற் பல்வகை வழக்கினும் பயின்று வரலானும் முற்காலத்ததன்றிப் பிற்காலத்துக் காரணக் குறியாக்கப் பெயராய் வழங்கலானும் புறப்பாட்டிற் பொருண் முடிபு வல்லுநரல்லார்க்கும் விளங்கப் புலப்படுதலானு மதனகப்பாட்டிற் செய்கை முடிபு முதலிய இயன்மாத்திரையே கூர்ந்தறிக வென்றாமென்க.

இஃது செய்யுண் முதலிய பல்வகை வழக்கினும் பயின்று வருதன் முதலிய இச்சதக யாப்பின்கண்ணும் காஞ்சி மான்மியத்தைக் குறித்த காப்பிய முதலியவற்றின்கண்ணும் பாடைவழக்குத் தேயவழக்கு நகர்வழக்கு முதலிய வழக்கியற் கண்ணும் பல்வகைப் பெயர்க்கு மிலக்கணம் புலப்படுத்தற் கருவியாய முந்துநூன் முதலிய நூன்முடிபின்கண்ணும் வழக்குணர்ச்சிக்கண்ணுங் காண்க வென்க.

அற்றேல் கூர்ந்தறிக என்ற அகப்பாட்டிற் செய்கைமுடிபு முதலிய விளங்கப் புலப்படுத்துக வெனின்:- பயன்றரூஉந் தொழிலது புடை பெயர்ச்சிக்கண் உரிமைதோற்றி உரிமை யுடைமைக்கு முதலாய முதற்பொரு ளெஞ்சிநிற்ப அம்முதலாய

முதற்பொருட் டொழின் முடிபிடனேற்ற தன் றொழிற் பயனுறுதற் கிடனாய செய்பொரு ளாம்முதற்பொரு நோக்கிய லொருபுடை யொப்பத் தொழிற்பயன் றோற்றற்கிடனாயதாப் பொருள் வேற்றுரிமையேற்றுத்தன்றொழின் முடிபின் முற்றிப் புடைபெயர்ச்சியி னுரிமை பெற்ற முதற் பொருண்மையி னொப்புமை பெற்றுந் தன் புடை பெயர்ச்சியினுரிமையேற்று வேற்றுரிமை முதற் பொருட் கரணத் தொழிற் பயனுறப்படூஉஞ் செய்பொருளைத்தன் கருமத் தொழிற் பயனுறப்படூஉம் செய்பொருளாப் புடைபெயர்ந்த தனுரிமை யேற்ற முதலாய முதற்பொருட்பாடு பெற்றும் வந்த விரி சொற்றெரிநிலை வினைமுற்றா ணைந்த பெயர்க்கோணிலை நோக்காய, ஆதொண்டந் தழையிற் கிடத்தப்பட்டவன் ஆதொண்டத் தழையிற் கிடத்தப்பட்டவன், ஆதொண்டந் தழையானு மலரானு மியற்றப்பட்ட மாலையைத் தரித்தவன் என்பன தன் வினைமுதற்றொழிற்பயன் றோற்று மிடனுந் தன்றொழிற்பய னுறப்படூஉம் செய் பொருளு மிடனாக ஆதொண்டந் தழையன் ஆதொண்டைத் தழையன் என விரிசொற் குறிப்பு வினை முற்றானணைந்த பெயர்க் கோணிலை நோக்காய்ப் பின்னர் இடப்பொருளவயவியுங் கருவிப்பொரு ளவயவியு மிடனாகப் பெற்று, ஆதொண்டை யென்பதனீற்றைகாரங்கெட் டஃதூர்ந்த மெய்ம்மேல் விகுதி அன்னூர்ந்து ஆதொண்டன் எனக் குறுந் தடியுஞ் செம்பட்டு மாயவாறு போற் றொகை நிலையேற்றுப் பெயரேயாய் நின்றது.

அல்லதூஉம், ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

பனையு மரையு மாவிரைக் கிளவியு
நினையுங் காலை யம்மொடு சிவணு
மையெ னிறுதி யரைவரைந்து கெடுமே
மெய்யவ ணொழிய வென்மனார் புலவர் [1]

என்னுஞ் சூத்திரத்துள் 'நினையுங்காலை' யென்பதனாற் றழை யென்னுஞ் சொல்வந்துழி தொண்டை யென்னுஞ் சொல் இறுதி ஐகாரங் கெட் டஃதூர்ந்த மெய்ம்மேல் அம்முச் சாரியை யூர்ந்து நின்றதன்றே; அங்ஙனம் உயர்திணை ஆண் பாற்

படர்க்கை விகுதியாய அன்னென்பதனையேற்குமிடத் தத்தழையென்ப தெஞ்சி யத்தழையிற் கிடத்தப்பட்டவனென் றறிந்துகோடற் குறியாத் தழையாற் போந்த அம்முச் சாரியையின் மகரவொற்றுநீங்க நின்ற அகரத்தின் பின்னர் அவ்வுயர்திணை ஆண்பால் விகுதி அன்னென்பதினகர நீங்க நின்ற னகரவொற்றடுத்து ஆதொண்டன் என்றாயது எனினு மமையும். இதனை, முதனிலை இறுதிநிலை இடைநிலைமுதலிய பல்வகை யுறுப்புக்களிற் பல்வகை நோக்குடைப் பல்வகைப் பெயரும் செறிப்பிற் றிறப்பட நெறிப்படூஉம் வழக்கிற் பல்வகை விகாரத்தாற் செந்நிலைபெறூ உமென விதித்த வுணர் வுடையோர் ருயர்நெறி வழக்கா லுய்த்துணர்க.

இங்ஙனம், ஆதொண்டனென்னும் பெயர் முதற்பொருண் முடிபு தன்முடிபிற் பெற்ற தன்றொழிற் பயனுறப்படூஉஞ் செய்பொருட்டன்மையக் பாட்டினும், உடைப்பொருட் பிறிதி னுரிமை யுடைமைத் தன்மை புறப்பாட்டினும், உயர் பொருளடைச் சிறப்பிடப் பெயர்அவ்விருவயினும் பொருந்த நின்ற மண்டல மென்பதனோடு மருவும்வழி, மேல் வகுத்த வண்ணந் தன்னீறும் முதலுந் தொகுத்தலைப் பெற்றதென்க. அல்லதூஉம், முதலெஞ்சி நின்ற இப்பெயர் மண்டலத் தோடணைந்த வழி விகுதி அன் எஞ்சி அம்முச்சாரியை பெற்று வருமொழி நோக்கி மகரமொழியத்தொண்ட மண்டல மென்றாயதெனினு மமையும். இதனை ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

அப்பெயர் மெய்கெடுத் தன்கெடுவழியு
நிற்றலு முரித்தே யம்மென் சாரியை
மக்கண் முறைதொகூஉ மருங்கி னான [1]

என்னுஞ் சூத்திரநோக்கத்தாற் காண்கவென்க.

ஆதொண்ட னென்பது தென்சொன்னோக்கு மண்டல மென்பது வடசொன்னோக்கு தம்முட் செறிவானொத்தவேனும் பாடையா னொவ்வாமைபெறலின் அங்ஙனம் பெறாமை

1. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், 81

நோக்கியும், முன்னிலையாய அந்நிலைக்கும் பின்னிலையாய இந்நிலைக்கும் இலச்சினையாதல் நோக்கியும், விசேடண விசேடியச் செந்நிலைமரபு நோக்கியம் இங்ஙன முதலு மீறுந் தொகுத்தலைப் பெற்ற தெனினும்; முதனிலை வண்ண வொற்றுமை, இசை யொற்றுமை, உருபொற்றுமை நோக்கியும், இறுதி நிலை சிறப்புநிலை இனவொற்றுமை நோக்கியுந் தொகுத்தலைப் பெற்றதெனினு மமையும். இஃதின்னுங் கூறிற் பெருகும், ஆகலின் ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

உணரக் கூறிய புணரியன் மருங்கிற்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே [3]

என்னுஞ் சூத்திரக் கருத்தானமைக வென்க.

அன்றி, ஆதிநாராயணன் புரம்-நாரணபுரம், ஆபூதன் மங்கலம் - பூதமங்கலம், பெரும்பற்றினாற் புலிப்பாதன் பூசித்தவூர் - பெரும்பற்றினாற் புலி பூசித்தவூர்-பெரும்பற்றப் புலியூர் - புலியூர் முதலிய பெயர்க் கோள்களையும்; புள்ளம் பூதன் குடி - பூதங்டி, கொற்றன் குடி - கொற்றங்குடி, சாத்தன் குடி - சாத்தங்குடி, கொற்றன் மங்கலம் - கொற்ற மங்கலம் - சாத்தன் மங்கலம் - சாத்தமங்கலம், வேடன் மங்கலம் - வேட்ட மங்கலம், வேடன் குடி - வேட்டங்குடி, சாத்தன்மங்கை - சாத்தமங்கை, விஜயன் மங்கை - விஜயமங்கை, கண்ணன் மங்கை - கண்ணமங்கை, கண்ணன் புரம் - கண்ணபுரம், கண்ணன் குடி - கண்ணங்குடி, சிராமன் விண்ணகரம் - சிராமவிண்ணகரம், வரகுணன் மங்கை - வரகுண மங்கை, ஐயைபுரம் - ஐயபுரம் முதலிய பெயர்க்கோள்களையும்; நந்தன் மண்டலம் - நந்தமண்டலம், சேரன் மண்டலம் - சேரமண்டலம் சோழன்மண்டலம் - சோழமண்டலம் முதலிய பெயர்க்கோள்களையும் பற்றாகக் கொண்டமை வென்க. இதனைப் பிற்காலத்து மரூஉ வழக்கென்று கொள்வாரு முளராலோ வெனின், அங்ஙனம் கொள்வதுமரபன்று; கொள்கினுங் கொள்கவென்க.

---

2. தொல். எழுத்து. புள்ளி மயங்கியல், 55
3. தொல். எழுத்து. புள்ளி மயங்கியல், 110

இத்தொண்டமண்டல மென்பது பல்வகைப் புணர்ச்சிக்கும் பல்வகை வழக்கியற்கும் இயற்பா டின்னோசை முதலியவற்றிற்கும் ஒத்த நிலை யென்க.

இங்ஙனமன்றி, தொண்டைமண்டல மென்பாருமுள ராலோ வெனின்; - அங்ஙன மாறுபடக் கூறுவோர் நுண்ணியஃ- அறிஞர் கண்ணிய நிலையும், மாற்றம் பொருளூறாஉ மாற்ற னிலையும், பல்வகைப்புணர்ப்பிற் செல்வகை நிலையுங், கடிபுகோ ணெறியின் முடிபுறாஉ நிலையும், இழுக்கறாஉம் பல் வகை வழக்கிய னிலையும், ஒருவாற்றானும் ஓர்ந்துணர்கில ராய்ப் போலியியனிலை கோலுநரென்க, என்னை? இலக்கண நுட்பங் கூர்ந்துய்த் துணர்தற் றன்மையுளரேல் அங்ஙனங் கூறற் கியையாராகலின். அவர்சில வழூஉநெறி வழக்குப்பற்றிக் கூறுதன் மாத்திரைய ரன்றி விவகரிக்கக் கடவ ரல்லர்.

ஆயினும், அவர்க்கும், மற்றவர்க்கும் அவ்வழக்கு அழி வழக்கே யன்றி இழிவழக்குமாம் என்றுணர்ச்சி தோன்றற்கு யாமே அத்தலைத் கண் நின்று அவர் கூற்றாக விவகரித்து அதனை மறுக்கின்றாம் ;--

அவர் கூற்றாக விவகரித்தல்;- தொண்டைத் தழையானும் மலரானும் இயற்றிய மாலையணிந்தவன் ஆண்ட மண்டல மாகலின், தொண்டைமண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் :- தொண்டைமண்டல மெனின், கொவ்வைத் தூற்றையுடைய மண்டலமென்றும் ஒருவாறு ஆதொண்டைத் தூற்றையுடைய மண்டலமென்றும் தெளி வின்றிக் கருதப்படுவதன்றித் தொண்டைத் தழையானும் மலரானும் இயற்றிய மாலையணிந்தவனா லாளப் பட்ட மண்டல மென்று கருதப்படுவதன்று.

அல்லதூஉம், சேரன் மண்டலம் - சேரமண்டலம், சோழன் மண்டலம்-சோழ மண்டலம் என்பனபோ லிம் மண்டலத்திற்கு, முன்னர்துண்டீரனா லாளப்பட்டமையின் துண்டீரன் மண்டலம் - துண்டீர மண்டலம், துண்டீரன் புரம்- துண்ரபுரம் என்றும்; பின்னர் தண்டகனாலாளப்

பட்டமையின் தண்டகன் நாடு - தண்டகனாடு, தண்டகன் புரம்- தண்டகபுரம் என்றம் பெயர் வழங்கின. அவைபோல், அதன் பின்னர் ஆதொண்டனா லாளப்பட்டமையின், ஆதொண்டன் மண்டலம் – ஆதொண்டமண்டலம், தொண்டன் மண்டலம் – தொண்டமண்டல மென்றே மரவு வழுவாமை வழங்கல் வேண்டும். இதற்குப் பிரமாணம்.

முக்கணான் கணநா தர்க்கு முதன்மைத்துண் டீர னாண்டு
மிக்கதுண் டீரனாடாய்த்த ண்டக வேந்தன் றாங்கித்
தக்கதண் டகனன் டாய்த்தபனன்மா குலத்துச் சோழன்
றொக்கதார்த் தொண்டமான்காத் தாயது தொண்ட னாடே.

இங்ஙனம் பல்காப்பியங்களினும் பலபிரபந்தங்களினும், பிரபல வித்துவான்களாக முன்னிருந்த ஔவையார் கம்பன் ஒட்டக்கூத்தன் முதலானோர்கள் பல்வகைக் காரணங் குறித்துச் செய்த பல்வகைச் செய்யுட்களினும், ஈண்டு முன்னும் பின்னும் வகுத்தமைக்குப் பிரமாணங்க ளிருக்கின்றன. அவைகளை விரிக்கிற் பெருகும். ஆகலின் அவற்றைத் தனித்தனி காண்டொறு மாங்காங் குணர்ந்தமைக.

அங்ஙனமன்றித் தொண்டைமண்டல மெனின், சான்றோர் வழித்தாய மரபு வழுவி மயங்குவதூஉமன்றிக் "காஞ்சி விருக்க முடைமையான் அந்நகருடை வளாகத்திற்குக் காஞ்சிமண்டலமென்று வழங்கிற்று; அங்ஙனமே, தொண்டைத் தூறுடைமை பற்றித் தொண்டமண்டல மென்று வழங்கிற்று; இஃதே துணிபு" என்று திரிபு தோற்றம். அன்றித் தொண்டைத் தழையானும் மலரானும் இயற்றப்பட்ட தொங்கலணிந்த வோரரையனா லாளப்பட்ட மண்டலம் அவ் வரையனுக் குரிமை தோன்ற நிற்றலின்றிப் பரம்பரையானன்றி யிடைப்பாட்டாற் பெற்ற அத்தொண்டையை வேற்றுரிமையாகப் பெறற்கு எவ்வாற்றானும் பொருத்தமின்று. இதனைக் கல்வியிற் சாதாரணத்தன்மையுடையோரும் "வாதராயண சம்பந்தத்தினினம் போலும்!" என்று எள்குவர்; அன்றிக் "குமரியைக் கொண்டவனை விட்டுக் கூடவந்தவனோடு கூட்டி யனுப்பியது போலும்! என்றசதியாடுவர்; என்னின், கற்று

வல்லோர் முகப்பின் இஃதென்னாம்? இதன்கண் உரிமை மலைவு, பொருண்மலைவு, மரபுமலைவு, வழக்கு மலைவு, தகுதி மலைவு, உணர்ச்சிமலைவு, யூகமலைவு, நியாய மலைவு, கருத்து மலைவு, முதலிய மலைவின் தொகையே புலப்படுகின்றன. ஆகலின், தொண்டைமண்டல மெனல் அமைவதன்று; தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:- அஃதேல், அற்றன்று; பாண்டியன் மண்டலம் பாண்டிமண்டல மென்றாயதுபோல் தொண்டையன் மண்டலம் என்பது விகுதிஅன் கெட்டுத் தொண்டை மண்டல மென்றாயது; ஆகலின் தொண்டை மண்டல மெனல்வேண்டும்.

அதனை மறுத்தல் :- பாண்டியன் மண்டலம் பாண்டி மண்டல மென்றாயது மரூஉவழக்கு. இஃதங்ஙனமன்று. மரூஉ வழக்காயினும் பாண்டி யென்பது குடிப்பெயர்க்கோளாய் அவ் வரையனையும் ஒற்றுமையுரிமையால்அம்மண்லத்தையு மன்றி வேறு குறித்தலின்றி நிற்றலின் அறிஞரா லமைத்துக் கொள்ளப் பட்டது. தொண்டைமண்டல மென்பதை மரூஉவழக்கி னமைத்துக் கொள்வோமெனின், இங்ஙனங் குறித்தலின்றிப் பல் வகையானும் வேறு குறித்து வழூஉநிலையைப் பெறுகின்றது. என்னை? தொண்டைத் தழையயானு மலரானுந் தொடுத்த தொங்க லணிந்தோனைத்தொண்டையன் எனின், பிற்காலத் தின் மக்கள் வரலாறுணராமையின் "பெருந் தொண்டை யனைத் தொண்டையனென்று வழங்கினர்கொல்? அன்றிப் புழைக்கை யுடைமையா றும்பி முகத்தவன் கொல்?" என்றையுறுதற்கும், தொண்டு ஐயனென்று பிரித்து ஏற்றபெற்றி கோடற்கும், ஒருவாற்றாற் கேள்வி யுடையோருங் " கொவ்வைத் தழையிற் புனைந்த மாலையுடையன்கொல்? ஆதொண்டைத் தழையிற் கிடத்தப்பட்டவன்கொல்? "என்றையுற்று மயங்கு தற்கும் இடனாய்ச் சொல்வலி பொருள்வலிஇன்னிசை வண்ண முதலிய சிதைவுற நின்று வழூஉநிலையைப் பெற்று மண்டலத் தோடணைந்து ஐயம் மயக்கம் கவர்கோண் முதலிய இழுக்கினை யேற்று வழுவி னும் வழுவாய் நிற்றலானும்; இங்ஙனம் வழங்கல்

அறிஞர் வழக்கன்றாகலானும் இதனை வழூஉ நிலையென்றாம். இஃது "உடற்றூய்மை கருதி நீராட்டுவந்து சென்று ஆண்டு அளற்றின் அழுந்திய தொக்கு" மென்று எள்குதற்கிடனன்றிச் சிறிது அமைத்துக் கோடற்கிடனன்று. ஆகலின், தொண்டை மண்டலமெனல் அமைவன்று; தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல் :--- அற்றேல், தொண்டை யென்பது ஆகுபெயராய் நின்று அரையனை யுணர்த்தி யுரிமை தோற்றி மண்டலத்தொடு புணர்ந்து தொண்டைமண்டல மென் றாயிற்று; அதனால் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்:- இடைப்பாட்டி னியதி யியைபின்றி வந்த கடம்பூர் என்பது கடம்ப விருக்கத்தையுடைய ஊரென்று தன்னளவே புலப்படுத்துமன்றி ஆகுபெயராய்க் கடப்ப மாலையைத் தரித்தவனூரென்று பிறிதளவு புலப்படுத்துவ தின்று. என்னை? ஆகுபெயர் ஒன்றன்பெயரா னதற்கியை பிறிதைத் தொன்முறையுரைப்பதாகலின். அங்ஙனமே பரம்பரை யானன்றி இடைப்பாட்டினிய தியியை பின்றிவந்த தொண்டை மண்டலத்தோடு புணர்ந்துழி தொண்டையை யுடைய மண்டல மென்று தன்னளவுணர்த்து அன்றித் தொண்டையையுடையன் மண்டலமென்று பிறிதினள வுணர்த்தற் கோர் வகையானும் வலியின்று. இஃது "யூகமின்றி ஒன்று குறித் தொன்று வரைய வொன்றுபட்ட" தென்று முலக வழக்கி னினம் போலும்!" என்றெள்குதற் கிடனாம். ஆதலில் தொண்டை மண்டல மெனலமைவன்று; தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல் :- அற்றேல், தொண்டை யுடையனாலாளப்பட்டது தொண்டையென்று ஈறுகெட்டு ஐ விகுதி யேற்றுச் சிறப்புப் பெயராய் மண்டலத்தொடு புணர்ந்து அங்ஙனமாயிற்று. ஆகலில் தொண்டைமண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் :- ஐயீற்றின் ஐகாரவிகுதி போந்து கெட்டுப் புணரிற் குறியீடின்மையிற் சிறப்பன்று; இங்ஙனம்

புணர்த்தல் இயற்பாடுமன்று; அறிஞர் மரபுமன்று. அங்ஙன மாயினும் தொண்டையையுடையதென் றாகுமன்றித் தொண்டை யுடையனா லாளப்பட்டதென்றொருவாற்றானு மாவதன்று. அன்றிச் சோழமண்டல முதலியவற்றோடு முரணும். அங்ஙனம் அமைதியின்றிக் கூறினுஞ் சந்தியின் பத்தான் நாகை பட்டினம் நாகப்பட்டினமென் றாயதுபோல், தொண்டை மண்டலம் தொண்டமண்டலமென்றாதலே வேண்டும். இதனை முன்னர் விலக்கியவற்றுட் காண்க. இஃது பலவகை யிழுக்கினுஞ் செல்வகைத்து. "இரும்பொற் பூண்டுரீஇச் சென்று கரும் பொற்றளைகை புகுத்தியதி னினம்!" என்றெள்குதற் கிடனாம். ஆகலில் தொண்டைமண்டல மெனல் அமைவன்று; தொண்ட மண்டல மெனல்வேண்டும்.

அல்லதூஉம், இங்ஙனம் தொண்டை யென்பது பல்வகைப் பொருட்கிடனாய பெயர்த் திரிசொல். ஆதொண்டை யென்பது தன்னளவே யுணர்த்தும் பெயரியற்சொல். இங்ஙனம் திரிசொல்லாற் சிறப்புப் பெயர்க் காரணக் குறிசெய்தல் வழக்கறிந்தோர் மரபன்று. இயற்சொல்லாற் காரணக் குறிப்பெய ரமைத்தலே யவரதுமரபு. இஃது ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப்படும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:-- அற்றேல், ஆதொண்டையன் என்பது மண்டலத்தோடு புணர்ந்துழி, முதலுமீறுங்கெட்டு அங்ஙனமாயிற்று; ஆகலின் தொண்டைமண்டல மெனல்வேண்டும்.

அதனை மறுத்தல்;- ஆதொண்டையன் எனின், தொகையின்பமும் இசையின்பமும் செறிவுகோளுமின்றிப் புல்லென்கையானும், சுருங்கியற் பேரின்பங் குறித்து முன்னும் பின்னும் தொகைசெய்தமைத்த சான்றோர் ஒரெழுத்தா னீட்டியற் பெயர்ப்பாற்படுத்தி முடிபுவழூஉச் செயற் கியையாராகலினும், இங்ஙனம் தொகுக்கப்படின் பொருளாட்சி முதலிய குன்றலின்றிச் செந்நெறியிற் பெரும்பயன்றரலானும், அங்ஙன மமைத்தல் வழுவேயாம். இஃது ஆதொண்டையன் சக்கரவர்த்தி ஆதொண்டயச் சக்ரவர்த்தி யென்னாது,

ஆதொண்டன் சக்ரவர்த்தி ஆதொண்டச் சக்ரவர்த்தியென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப்படும்.

அவர் கூற்றாக விவகரித்தல் :- ஆண்டு ஆதொண்டைச் சக்ரவர்த்தி யெனின் வழுவென்னெனின்.

அதனை மறுத்தல் :- அங்ஙனம் பெறின், அவ்வரையற்கு ஆதொண்டையாற் காரணக் குறிப்பெய ரமைப்பான் கருதிய வன்றே கருதியதாதல் வேண்டும். அங்ஙனமின்றிப் பின்னர் செங்கோன்மை ஆண்மை முலிய வண்மையுடைமை பற்றி முகமனாவமைக்கப்பட்டது ஆகலின், வழூஉ இங்ஙனமென்க. ஈண்டு ஆதொண்டன் சக்ரவர்த்தி ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்பது 'புடைப்புள கன்னிப் பொற்குலைக்கண்ணே இடைப்பிள வியையா விரட்டைப்பழம்போன்' றொரு பொருட் கிருவயி னெழுந் திடைப்பிளவறியாச் சிறப்பினப்பெயர். ஆதொண்டன் சோழன்ஆதொண்டச்சோழ னென்பதுமது. இதனை, தசரதன் சக்ரவர்த்தி - தசரதச்சக்ரவர்த்தி, நளன் சக்ரவர்த்தி - நளச் சக்ரவர்த்தி, புரூரன் சக்ரவர்த்தி, புரூரச் சக்ரவர்த்தி,சோழன்ராஜன்,-சோழராஜன்,சேரன்ராஜன்-சேரராஜன், பாண்டியன்ராஜன் - பாண்டியராஜன், சோழன் மஹாராஜன்- சோழமஹாராஜன் சைவன் சோழன் - சைவச்சோழன், குலோத்துங்கன் பாண்டியன்- குலோத்துங்க பாண்டியன், சோழன் மன்னன்- சோழமன்னன், சேரன் மன்னன் - சேரமன்னன் என வழங்கும் பல்வகை முடிபு வழக்குகளாற் றெளிந்தமையப்படும்; ஆகலின் ஆதொண்டனெனல் வேண்டும்; ஆதொண்டையனெனல் இழுக்கு. இங்ஙனம் இழுக்காய ஆதொண்டையனென்பது முதலுமீறுங் கெட்டு மண்டலத்தொடு புணர்ந்து தொண்டைமண்டலமென் றாயிற் றெனினும், மேற்குறித்த பல்வகை வழூஉக்கட்கும் பேரிடனாகத்தக்கது. "இடனறிந்து பிறாண்டாத்தினவுண்ணி எரிவிற் புழுங்கிற்று" என்பதற்கும், "கருத்தறியாமற்கலப்பான் புகுந்து அருத்த மிழுக்குமா' லென்பதற்குமினம்!" என்று எள்குதற் கிடனாம். ஆகலில் தொண்டைமண்டல மெனல் வழூஉ; தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:- தொண்டைக் காடுடைமையால் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்:- இங்ஙனம் தொண்டமண்டல வரலாற்றை வகுக்குங் காப்பியத்திற் கண்டதேயன்று; இவ்வாறு உண்டென்றறிஞரான் இது காறியாங் கேட்டது மின்று; ஆகலின் வழூவாம். இஃது 'வழியறியாக் கன்று குழிவழியாச் சென்' றென்பதற்கினம். இங்ஙனம் வழியறியாது மொழி யினும், பொய்கூறினும் பொருந்தக்கூறுக வென்னுமிழிந்தோர் வழக்கின்கண்ணு மேற்புடைத்தன்று. என்னையெனின் காஞ்சி தில்லை என்னு மரபுப்பெயர்கள் ஒற்றுமை யுரிமை குறித்து காஞ்சியைக் கண்டு தில்லையை யடைந்தானென்று வழங்கப்படுகின்றன. அங்ஙனம் தொண்டையைக் கண்டு என்று எவ்வகை வழக்கினும் வழங்கப்பட்டதினறாகலி னென்க. இதனாலுந் தொண்டமண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:- தொண்டைமான் என்னும் பெயருள் வேற்றோரரைய னிருந் ததிகரித்தமையின் தொண்டைமான் மண்டல மென்பதுமான்கெட்டு அங்ஙன மாயிற்று; ஆகலில் தொண்டைமண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் :- இங்ஙனம் புணரினும், மேற்குறித்த வழூஉ நிலைகட்கிடனாம்.

அன்றித் தொண்டைமானென்பதே வழு. என்னை? தொண்டைமா னென்பது தனிமொழி தொடர்மொழி என்பவற்றுள் எம்மொழி? விடை:- தனிமொழி. வினா :- தனிமொழியாயின் இதற்கு முதனிலை இறுதிநிலை இடைநிலை என்னை? விடை :- தொண்டை -- முதனிலை, ஆன் -- கடைநிலை, மகரம் -- இடைநிலையாம்.

அதனை மறுத்தல்:-- என்னின் முதனிலைக்கும் இறுதி நிலைக்கும் இடைப்பாடொத்து நிற்பது இங்ஙனம் வரூஉம் பெயர்கட்கு இடைநிலை, ஈண்டு முதனிலையீற்று ஐகாரக் குறுக்கம் விலங்கிப் பொறுத்திசைப்ப இடைப்பாடின்றி இறுதி நிலையோடு இணைந்து வேறு குறித்தலில் இடைநிலை

இலமைவின்று. அன்னீறன்றி ஆனீறு ஆறிறந்தன்றி ஐந்திறந் தியையுந் தொடர்மொழிப் பெயர்க்கன்றி இங்ஙனம் உரித்தாவ தன்று, நயப்பாடின்மையின். ஆகலின் இறுதிநிலையியலும் அமைவின்று. விகாரத்தால் வேறு குறித்தலின் முதனிலை யியலும் அமைவின்று.

அல்லதூஉம், இஃதிடைநிலையாயின், கோமான் என்பதற்கும் அங்ஙனம் இடைநிலையாகல் வேண்டும். அங்ஙன மாயின், கோ - ம் - ஆன்; - இவற்றுள், கோ - அரையன் என்னின், ஆன்விகுதி அதிகரிப்பின்றி மூங்கைபோலும் யானையுண்ட கனி போலும் பெயர்ச்சியும் பயனுமின்றி வற்றன்மரனி னின்றது. ஆகலின் இஃது இங்ஙனமன்று; ஆகலின் அஃது அங்ஙனமன்று. இஃது 'கைபடலறியான் பொய்படலொன்றோ' என்பதற்கினம். ஈண்டு, தொடர்மொழியாய்க் கோன்மன் - கோமான் என நிலைமொழி யீறு கெட்டு வருமொழி முதனீண்டது. இதனை வழுதிமன் என்னுங் காப்பிய வழக்கானுங் கண்டுணர்க. அன்றி, கோன் மஹான் - கோமான் என நிலை மொழி யீறு கெட்டு வருமொழி வடமொழியாதலின் விகாரம் பெற்றுக் கோமான் என்றாயது. அன்றி, கோன்மான் என நிலைமொழி யீறு கெட்டுக் கோமானென்றாயது. இங்ஙனமே தொண்டன்மன் - தொண்டன்மஹான் - தொண்டன்மான் என்பன தொண்டமா னென்றாயது. மன் மஹான் மான் என்பவைக்குப் பெருமையுடையவ னென்பது பொருள். ஆகலின், தொண்டைமானெனல் வழு; தொண்டமானெனல் வேண்டும். இங்ஙனமே சேரன்மான் - சேரமான், மலையன்மான் - மலைய மான் முதலியவுங் காண்க. ஆகலின் மண்டலத்தோடு கூடிய வழி தொண்டமண்டல மெனல் வேண்டும். அன்றி, தொண்ட னாடெனல் வேண்டும். தொண்டை னாடெனல் வழூஉ. என்னை? சேரன் நாடு - சேரனாடு, சோழன் நாடு - சோழனாடு, பாண்டியன் நாடு - பாண்டியனாடு, மலையன்நாடு - மலையனாடு என்பது போல, தொண்டன் நாடு - தொண்டனாடு எனல் மரபு. ஆகலின், தொண்டனாடு எனில் அடியனென்ன முதல் வேறு குறிக்குமே எனின், அங்ஙனங்

குறிப்பதில் ஆற்றலுமின்று பயனுமின்று. என்னை? ஆவென்பது கரண விடயமாக நின்று உரியானைக் குறிக்கின்ற தாகலின்; அன்றி, உடையா னையன்றி உடைமை குறித்தலின்றாகலி னென்க.

இங்ஙனம் பல்வகையாற் சொல்வகை செய்தலென்? தொண்டை மண்டல மெனின்மேற் குறித்த வண்ணம் உரிமை மலைவு, பொருண் மலைவு, மரபுமலைவு, வழக்குமலைவு, தகுதிமலைவு, உணர்ச்சிமலைவு, யூகமலைவு, நியாயமலைவு, கருத்து மலைவு, ஐயம், கவர்கோள், மயக்கம், வேற்றுக்குறிப்பு, வேற்றுரிமைநிலைமை, நியதியின்மை, இயைபின்மை, சொல்வலிச்சிதைவு, பொருள்வலிச் சிதைவு, பொய்க்கோள், அனர்த்தம், இன்னிசைவண்ணச்சிதைவு, பிளவுபாடு முதலிய பல்வகை வழுக்கட்கிடனாம்.

அன்றி, ஆதொண்டை என்பதன் ஈற்று ஐகாரக் குறுக்கம் குற்றலகே பெற்றது, தொண்டை என்பதன் ஈற்று ஐகாரக் குறுக்கம் குற்றலகோடு ஒற்றலகு பெற்றது. என்னை? ஆதொண்டை; ஆ+தொண்+டை; ஈரலகு - ஓரலகு - அரையலகு- முதலிடைப்பாடு இருகலை - நடுவிடைப்பாடு காற்கலை கடையிடைப்பாடு முக்காற்கலைஆகலின், ஆதொண்டைஈற்று ஐகாரக் குறுக்கம் குற்றலகே பெற்றது. தொண்டை; தொண்-டை ஓரலகு-அரையலகு-நான்கிடைப்பாடு காற்கலை - பின்னிடைப்பாடு அரைக்கலை ஆகலின், தொண்டை ஈற்று ஐகாரக் குறுக்கம், குற்றலகோடு ஒற்றலகும் பெற்றது, இங்ஙனம் தொண்டைமண்டலத்தோடு புணருங்கால், மண்-ட-ல-ம்; ஓரலகு - அரையலகு - ஓரலகு - அரையலகு - முன்னிடைப்பாடு; கால் - கால் - அரை- அரை பெற்று வேற்றிசை விரவி நிற்றலின், புணர்ச்சியிடை ஐங்கலையைப் பெற்றுப் பிரிந்து வேறு குறிக்கின்றது ஆகலினும், தொண்டை மண்டலமெனல் வழு; தொண்ட மண்டல மெனல்வேண்டும்.

இங்ஙனம் பெயர்க்கோள்கட்கு இயற்சொற்பெயர் முதலிய, சொல்விரிப்பெயர் முதலிய, செஞ்சொற்பெயர் முதலிய, சாதிக் கூற்றுப் பெயர் முதலிய, ஒருமொழிப்பெயர் முதலிய, உயர்

திணைப் பெயர் முதலிய, பாற்பெயர்முதலிய, பொதுவிற் பொதுப் பெயர் முதலிய, தன்மைப்பெயர் முதலிய, வழக்குப் பெயர் முதலிய, வெளிப்படைப்பெயர் முதலிய, வரையிய னடைப் பெயர் முதலிய, உயருரிமைப்பெயர் முதலிய, சிறப்பு நிலைப் பெயர் முதலிய, சித்துப்பொருட்பெயர் முதலிய, இடுகுறிப் பெயர் முதலிய, மரபு நிலைப்பெயர் முதலிய, எழுத்துத் தொடர்ப்பெயர் முதலிய, பொருணிநிலைப்பகுபதப் பெயர் முதலிய, பெருஞ் சொல்லாட்சிப்பெயர் முதலிய, முதனூல் வாய்பாட்டுப் பெயர் முதலிய - இவைமுதற் பெயர்ப் பாகுபாடு களின் இலக்கணங்களும்; எழுத்துப் புணர்ச்சி, பதப் புணர்ச்சி, தொடர்புப்புணர்ச்சி, பொருட்புணர்ச்சி, வண்ணப் புணர்ச்சி, அளபுப்புணர்ச்சி, இயைபுப்புணர்ச்சி, சமநிலைப் புணர்ச்சி, கலவைப்புணர்ச்சி, தெரிநிலைப்புணர்ச்சி, குறிப்புப் புணர்ச்சி, வேற்றுமைப்புணர்ச்சி, ஒற்றுமைப் புணர்ச்சி, சிறப்புடைப்புணர்ச்சி, பொதுவுடைப்புணர்ச்சி, இருமைப் புணர்ச்சி முதலிய புணர்ச்சிஇலக்கணங்களும் கூர்ந்துணரார்க்குத் தொண்டமண்டல மென்பதின் இலக்கணமும் புலப்படுவதன்று.

இங்ஙனம் உணரமாட்டாதார், ஆதொண்டச் சக்ரவர்த்தி என்பவர் தாம் அரசு செய்யுங் காலத்தில் தம்மாற் கட்டுவித்த ஆலயங்களில் தம் பெயரிலச்சினை சிலையின்கண் பொறிப் பித்தனர். ஆண்டும் ஆதொண்ட என்றே இலக்கண அமைதி பெற்றிருக்கின்றது. இதனை, திருவலிதாயம் திருமுல்லை வாயில் முதலிய சிவதலங்களிற் சென் றேனுங் கண்டு தெளியக் கடவர். இஃதின்னுங் கூறிற் பெருகும்.

தொண்டமண்டல மென்பதைத் தொண்டைமண்டல மென்று இச்சென்னை நகரிலிருக்கின்ற வித்துவான்களிற் சிலர் மாறாக வழங்க, அது குறித்துச் சில பிரபுக்களும் வித்துவான் களும் உபாத்தியாயர்களும் "இவ்விரண்டில் இலக்கண வமைதியும் உலகவழக்குமுள்ளதுயாது? அதனை யொருவாறு தெரிவிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டபடி, திருஅருட்பிரகாச வள்ளற்பெருமானரால் அருளப்பெற்றது.

நூற்பெயர் இலக்கணம் முற்றிற்று

# 2. வழிபடு கடவுள் வணக்கப் பாட்டுரை

## வழிபடு கடவுள் வணக்கம்

### ஆசிரிய விருத்தம்

கொண்டலை நிகர்க்கும்வேளாண். குடியொடு தழ இய தொண்ட
மண்டல சதகந் தன்னை வளமையான் வகுப்ப தற்குப்
புண்டர நுதலி ரண்டு புயமிசை யிருந்தி ரண்டு
குண்டல நிகரி ரண்டு குமரரை வணக்கஞ் செய்வாம்.

*கொ... ம்; இச் செய்யுள்-வியனுறுமெதிரதுாஉம், வீ ழாக் கொடையும், பயனுறூஉந்தொழிலும், பழியாப்பண்பும், வாய்மையும், அறிவும், மாஅண்பும், ஆண்மையும், தூய்மையும், பொறையும், தோற்றமும், அன்பும், உளங்கொள் இரக்கமும், ஒழுக்கமும் முதலா விளங்கு விழுக்குடி வேளாண் குடியே இத் தொண்டமண்டலத்திற் பெரும்பாலும் இறை கொளப் பட்டுத் தம் வளமையான் ஈண்டுறூஉம் மற்றைக் குடி கட்கும் இம்மண்டலத்திற்கும் வளமை தோற்றிற்று அஃது நெறிப் பானுஞ் செறிப்பானுந் தோன்ற வழிபடுகடவுட் பராஅய்ப் புலப்படுத்துவ லென்றுபுகுந்தமை யுணர்த்துகின்ற தென்க.*

*எங்ஙனமெனின், "கொண்டலை நிகர்க்கும் வேளாண் குடியொடு தழீ இய தொண்ட மண்டல சதகந்தன்னை வளமையான் வகுப்பதற்குக் குமரரை வணங்குவாம்" என்றது உய்த்துணர்க வென்க. இஃது வற்புறுத்தற்கு வேளாண்குடியை அளவை முகத்தான் வெளிப்படையின் விளங்கவைத்து மற்றைக் குடிகளை வேற்றுரு பொடுவிற் பரா முகத்தாற் குறிப்பின்கட் சார்த்தி வைத்ததே யமையுமென்க. விளங்கு விழுக்குடி வேளாண்குடி யென்றதனாலன்றே அங்கையிற்கனி போன்றிங்ஙனம் பெற்றாம்.*

*அஃதீண்டு எற்றாற் பெறுதுமெனின், கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடி என்றதனாற் பெறுது மென்க. எங்ஙன மெனின், கொண்டலை - பருவப்புயலை, நிகர்க்கும்-*

ஒக்கும், வேளாண்குடி - வேளாண்குடிப் பிறப்பினர் எனவே; வேளாண்குடிப் பிறப்பினர் கைமாறு கனவினுங் கருதலின்றி வரையாது வழங்கும் வள்ளற்றன்மை யுடையாரென்றும்; எவ்வாற்றான் உயர்ந்தோர்கட்குந் தம்மையன்றி உலகியல் நடத்தப் படாச் சிறப்புடைக் கருவியாந் தன்மையுடைய ரென்றும்; இங்ஙனம் வையகத்தார்க் கன்றி வானகத் தார்க்குங் குன்றா நன்றி குயிற்றுநரென்றும்; தம்மானே யன்றித் தங் கருவியானுங் கருமத்தானும் எவ்வெவ் வளாகத்து எவ்வெவ் வுயிர்கட்கும் இன்பந் தரூஉம் இயலின ரென்றும்; ஆன்ற கல்வி, ஊன்று கேள்வி, சான்ற வுணர்ச்சி, ஏன்ற ஒழுக்கம் முதலிய உயர்நெறிக் குன்றத் தும்பரிம்பர் பல்காற்பயிலுறும் பாங்கின ரென்றும், தொன்னெறி யரை யர்க்குத் துணைவராகிப் பகைப் புலனடுங்கிய படர்ந்தெதிருறீ இவாய்விட்டார்த்து வாள்புடை பெயர்த்து விற்புடைத்தழீஇ இப்பொற்பொடு பெய்யுமான்மைய ரென்றும்; தண்ணளி யுருக்கொடு தாங்கிச் செங்கோன் நிலைபெறச் செய்யுந் தலைமைய ரென்றும்; எத்திறத்தவரும் எதிர்கொடு பராஅய்ப் பற்பல திறப்படூஉம் பரிசிற்பழிச்ச உயரிடத்தோங்கிய பெயருளரென்றும்; கடவுளாணையிற் கடவாச்செறிவும், யாவரு மதிக்கும் ஏஎருடைமையும், புலவராற் புனையும் புகழின் ஈட்டமும், களக்கறும் ஒண்மையும், விளக்குறு பசுமையும், பொய்யா மாற்றமும், போக்கறு தோற்றமும், இன்சுவை நிறைவும், எத்திறநலனும் உடையரென்றும் உவமைக் குறிப்பாற் பெறப்படுதலின் இங்ஙனமென்க. ஈண்டு வகுத்தவை கொண்டலின்கண்ணும் உய்த்துணர்ந்துகொள்க. இஃது வகுத்ததன்றி விரிப்பிற் பெருகும்.

இனி, கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடி என்பதற்குக் கொண்டல் - கொண்டலை நடாத்தும், ஐ - தலைவ னாகிய இந்திரனை, நிகர்க்கும் - ஒத்த, வேளாண்குடி - வேளாண் குடிப்பிறப்பினர் எனினுமமையும். இங்ஙனம் பெறுங்கால், வேளாண்குடிப் பிறப்பினர் தமது நல்லொழுக்கம் என்னும் ஆணையாற் கொண்டலை ஆங்காங்குப் பெய்வித்து நடத்தலும்,

ஐவகைத் திணையினும் உய்வகைத் திணையாய மருதத் திணையை வளம்படுத்துக் காத்தலும், வேளாண் வேள்விக்கு வேந்தராதலும், வீழாதுதரூஉம் வேளாண்மைக்குரிய கருவியையுடையராதலும், யாவரானும்விரும்பப்படூஉம் இயற்கையராதலுங் கொள்க. ஈண்டு வகுத்தவை இந்திரன் மாட்டும் உய்த்துணர்க. இஃதும் விரிப்பிற் பெருகும்.

அன்றி, கொண்டல் என்பது இலக்கணையால் காவற் கடவுளாய விண்டுவாகக் கொண்டு அக்கடவுளை ஒத்த வேளாண்குடி யெனினும் அமையும். இங்ஙனங் கொள் ளுங்கால், வேளாண்குடிப் பிறப்பினர் நடுநின்று எவ்வெவ் வுயிர்க்கு நுகர்ச்சி வருவித்தலும், பகைப்புலன் முருக்கிப் பாதுகாத்தலும், திருவிற் பொலிந்த சிறப்புடைய ராதலும், இன்சுவை யமுதம் இரந்தோர்க் கீதலும், பூமகட்கு உரிமை பூண்டு நிற்றலும், சத்துவத் தனிக்குணத்தானே பயிறலும், ஊக்கமுஞ் செவ்வியும் உடையராதலுங் கொள்க. ஈண்டு வகுத்தவை விண்டுவின் மாட்டும் உய்த்துணர்க. இஃதும் விரிப்பிற் பெருகும்.

கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடியென விரியு வமையின் கண் உவமவுருபன்றி ஐயுருபும் விரித்தது இங்ஙனம் விரிப்பதற்குக் குறியுணர்த்தவென்க. உவமைக்கும் பொருட்கும் ஒரு நோக்கத்தானன்றிப் பலபட வகுத்த தெற்றாலெனின், உவமைப் பொருள் புகழ் பொருண் மிகை குறித்தழுக்கற்று முரணுதற் குறியா நிகர்க்குமென்னுந் தடுமாறு உவமவுருபு விரித்தமையின் என்னை என்க? ஆசிரியர் தொல்காப்பியர் உவமவுருபுகளை வகுத்து முடிபுசெய்யுமிடத்து, "கடுப்ப வேய்ப்ப"[4] வென்னுஞ் சூத்திரத்தா னிகர்ப்ப வென்பது மெய்யுவமவுரு பென்று வழுத்த வண்ணம்

4. கடுப்ப வேய்ப்பமருள புரைய
வொட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென்
றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்.
– தொல், பொருள், உவமஇயல், 15

அவ்வுருபு ஈண்டஃதேலாதுதொழில் பயன் முதலிய வேற்றதாகலின். அஃதேல் இஃதுயாண்டும் வரைதலின்றோ வெனின் "தடுமா றுருபுக டாம்வரையின்றே"[5] யென்பவாகலின் விரும்புமிடத் தின்றெனக. அன்றி இஃதழுக்கற்று முரணுதற் பெயர்ச்சிக்கட் போந்த வெச்சம்போறலின் அங்ஙனங் குறிக்க வைத்த தெனினு மமையுமெனக. இவ்வுவமை நோக்கைச் "சுட்டிக் கூறா"[6] வென்னுஞ் சூத்திர நோக்கத்தானுங் காண்க. உவமையும் பொருளு மொத்தல் வேண்டு மென்றவாறு ஒத்த வண்ணம் உய்த்துணர்க. அன்றி உவமப்போலி மறுக்கப்படா வாகலின் ஈண்டு அவற்றுள்ளும் ஏற்பன விருப்பினும்இழுக்கின் றெனக. இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

கொண்ட லென்பதுவிரவு மிகையொலிக் காப்பிய வழக்குத் தொடரியற் பால்பகாபவஃறிணைப் பல்பொருள் குறித்த வொரு பெயர்த்திரிசொல். ஈண்டுச் சிறப்புயருரிமைக் கருவி அவயவப் பொதுநிலைப் பூதப்பொருட்டாகிய மேகத்தை யுணர்த்திற்று.

வேளாண்குடி யென்பது உயர்நிலைக் காப்பிய வழக்குச் சொன்னடைச் சிறப்பு - முன்னிலைக் காரணம் பின்னிலை யிடுகுறிச் சாதிக் கூற்றுத் தொடர்நிலைகருத்துப் பொருட்புறத் துயர் திணைக் காட்சிப் பொருட் பன்மைத்தோற்றத்தன்மொழித் தொகைச் சொற்றொடர். இதனை வேளாண்மைக்குரிய குடிப் பிறப்பினரென்று விரித்துக்கொள்க, வேளாண்மை நன்றி ஈகை வேளாண்டொழின்மை முதலிய பல்பொருள் குறித்த வொரு சொல். அஃது வேளாண் டொழி லுடைமையா னன்றி ஈகை முதலிய நற்செய்கை யுடைமைக்கு முரியவோர்

5. தடுமா றுவமங் கடிவரை யின்றே.
— தொல், பொருள், உவமஇயல், 35

6. சுட்டிக் கூறா வுவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே.
— தொல், பொருள், உவமஇயல், 7

குடிப்பண்பாயிற்று. குடியென்பது குலம் ஊர் முதலிய குறித்த வோர்சொல். அஃதீண்டு குலத்தின் மேனின்றது., அன்றி மருதத்திணையூ ரென்பது மொன்று. வேளாண்டொழில் என்பதில் வேள் என்பது நன்னிலம், ஆண் என்பதுஉரிமைத் தலைமை, தொழில் என்பது முயன்றுமுடித்தல், இதனால் நன்னிலந் திருத்திச் செந்நெறி பொங்கப் பைங்கூழ் விளைக்கு முரிமைத்தலைமைத் தொழில் என்பது பெறப்பட்டது. அல்லதூஉம், வேள் என்பது விரும்பப்படுகை, ஆண்டொழில் - ஆண்மைத் தொழில். இதனால் அரையரால் விரும்பப்படூஉம் மந்திரித் தலைமை சேனைத்தலைமை யென்னும் ஆண்மைத் தொழிலுடையோ ரென்பதூஉம் அமையுமென்க. இதனை யுடைய குடிப்பிறப்பினர் வேளாண்குடிப் பிறப்பினர் வேளாள ரென்க. இவ்வேளாண்குடிப்பிறப்பினர் ஈகை முதலிய நற் செய்கைகளின் மிக்கா ரென்பதற்கு வேறு கூறு வேண்டுவ தின்று. இவர் குடிப்பெயரேதக்க சான்றென்க, அன்றி அந்தணர் அரையர் வணிகர் முதலியோர்தத்தமக்குரிய ஒழுக்கங்களை நடத்தற்கு வேளாண்குடிப் பிறப்பினரது உதவி முற்றும் வேண்டுதலின், இவர்நெறி பெருநெறி யென்பதற்கு மஃதே சான்றென்க. இதனைத் தொல் காப்பியத்தில் "நாற்றமு"7 மென்னுஞ் சூத்திரத்துள் "வேளாண் பெருநெறி" யென்ற தனாற் காண்க. அன்றி யிவர்க் கித்தொழிலுரிமைச் சிறப் பென்பதூஉம் இவரது மேம்பாட்டுத் தன்மையையு மரபியலிற்8 காண்க. இதனை விரிக்கிற் பெருகும்.

வழிபடு கடவுள் வணக்கப்பாட்டுரை முற்றிற்று.

---

7. தொல், பொருள், களவியல் 23
8. தொல், பொருள், மரபியல் 80 : 81

வேளாண் மாந்தர்க் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப அவர்பெறும் பொருளே.
வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப அவர்பெறும் பொருளே.

# 3. “உலகெலாம்” என்னும் மெய்ம் மொழிப்பொருள் விளக்கம்

## 1. மெய்ம்மொழிப்பொருள் விளக்கம் ஆமாறு

திருச்சிற்றம்பலம்

இஃது உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம் என்பது எங்ஙனமெனின்:- திருவருளின்பத்தை அங்கைக்கனியிற் பெற்ற பெரியரையும் அத்திருவருளையும் வாச்சிய லக்ஷியமாகக் கொண்ட பெரிய புராணத்தில் தெய்வத் தற்சிறப்புச் செந்தமிழ்ச் செய்யுட்கண் எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் எடுத்துக் கொடுக்கப்பட்ட உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன் என்னும் மெய்ம்மொழியினது பொருள்விளக்க மகாலின் மெய்ம்மொழிப்பொருள் விளக்க மென்றாயிற்றென்க.

இதனை மெய்ம்மொழி என்றது என்னையெனில்:- உணர்ந்தோர், இழிகுண ஆங்கார மொழியாய மனிதர் மொழியினும் சமகுண ஆங்கார மொழியாய தேவர்மொழி மெய்ம்மொழி என்பர்; அதனினும், உயர்குண ஆங்கார மொழியாய முனிவர்மொழி மெய்ம்மொழி என்பர்; அதனினும், இயல்புப் பிரகிருதி மொழியாய அரிபிரமாதியர் மொழி மெய்ம்மொழி என்பர்; அதனினும், சுத்தாசுத்தமாயா மொழியாய உருத்திராதியர் மொழி மெய்ம்மொழி என்பர்; இங்ஙனமன்றி, மொழித்திறன் தெரிந்துமுடிபு முற்றுணர்ந் தோர் அபரவந்துயிப் பிரணவமொழியாய சதாசிவாதியர் மொழியே மெய்ம்மொழி என்பர் என்னின் இவ்வபரவயிந்துவப் பிரணவமொழிக்கு உபாதான உபகரணஅதிகரண வியாபக சித்தமாய் சுத்த வியோமாகாரமாய் விளங்குகின்ற திருவருட் பரவயிந்துவத்துரியத் திருவாக்கான் மொழிந்த உலகெலாம் என்னும் மொழியை மெய்ம்மொழி யென்றல் இறும்பூதன் றென்க. வேறு இயைபியல் அடையொன்று வழக்கின்கண் இன்மையிற் கூறியதன்றி இஃதோ ரியைபியல் அடையுமன் றென்க.

இதனைத் திருவருட் பரவயிந்துவத் துரியமொழி என்றது எங்ஙனமெனின்:- சுத்தமுதலிய மாயாகாரிய ஆகாயங் களினன்றி, நாதாதீதமாய், சிதாகாசமென்று வேதாகமங் களால் மீக்கூறப்பட்ட சிற்சபைக் கண் தோன்றிய மொழி யாகலின் அங்ஙனங் கூறியதென்க.

ஆயின் இவ்வடைமொழிப் பொருட்டுணிபு என்னை யெனின்:- வாச்சியப் பொருளாங்கால் மெய்ம்மையை யுடைய மொழியென்று வேற்றுமை வழியான் விரித்து அபரவயிந்துவப் பிரணவமொழிக்கும், லக்ஷியப் பொருளாங்கால் மெய்ம்மையாகிய மொழியென்று அல்வழியான் விரித்து திருவருட் பரவயிந்துவத் துரியமொழிக்கும் இயைபுகோடல் துணிபென்க.

இங்ஙனம் வாச்சிய லக்ஷியமொழி வரலாறென்னை யெனின் :- மனிதர், தேவர், முனிவர், அரிபிரமர், உருத்திரா தியர் மொழியாய ஆங்காரமொழி, பிரகிருதிமொழி, மாயை மொழி என்பவை அசுத்தமும் சுத்தா சுத்தமுமாகிய சத்தார்த்தப் பிரபஞ்ச காரண வைகரியாதி நான்கு வாக்கின் காரியமொழி யாகலின் மெய்ம்மொழியன்றென்க. சதாசிவாதி மொழியாகிய பிரணவமொழி சுத்த சத்தார்த்தப் பிரபஞ்ச காரணமாகிய அபரவயிந்துவ காரியமொழி யாகலின் வாச்சிய மெய்ம்மொழி யாயிற்றென்க. பரசிவ மொழியாய திருவருள்துரிய மொழி, துரிய சத்தார்த்தப் பிரபஞ்ச காரணமாய்ச் சிற்சத்தி பரவிந்துவிற் பதிதலான் நாதமாத்திரத்தினுண்டாய மொழியாகலின், லக்ஷிய மெய்ம் மொழி யாயிற்றென்க

இஃது மெய்ம்மொழி என்பதைப் பெரியபுராணத்துள்

அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
மருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகு மெனப்புகல் வாமன்றே

என்ற செய்யுளுள்ளுங் காண்கவென்க.

இஃது அபூரவாக்கிய விவகாரமன்றாகலின் விசேட இலக்கணம் இயற்பட விரித்தலிலம் என்க.

இம் மெய்ம்மொழிப்பொருள் விளக்கத்தின் எல்லை எங்ஙனமெனின்:- யோகாந்த கலாந்த நாதாந்த போதாந்த வேதாந்த சித்தாந்த மென்னும் சடாந்தானுபவ சாத்தியர்களும் அவற்றை விரும்பி அவ்வழிக்கண் நின்ற சாதகர்களும் அந்தரானுபவ திட்டாந்தமாக உபாசிக்க விளங்குகின்ற சிதம்பர ராசியத்தைக் குறிக்குஞ் சிற்சபைக் கண்ணே, சேக்கிழா ரென்னுந் தெய்வப் புலவர் பொருட்டு இறைவர் பரமாகாய வாக்கான் மொழியப்பட்டுச் சமரசானுபவ சாட்சாத்காரமாய் ஆநந்தத்தினு நடிக்கின்ற சிதம்பர நடனத் திருவருட் பதத்தை வாச்சிய லக்ஷியமாகக் கொள்ளப்பட்டதாகலின், சடாந்த சமரச லக்ஷியப் பொருளெல்லையை யுடையதென்க.

இனி உலகெலாம் என்பதன் மட்டன்றி, உணர்ந்தோதற் கரியவன் என்ற தொடர்காறும் அத்திருவருட் பரவிந்துவத் துரியத் திருவாக்கின் எழுந்த மெய்ம்மொழி என்று ஐயமறக் கொள்கவென்க. எங்ஙனமெனின் :- திருவருட் புலமைசான்ற சேக்கிழாரென்னும் பெரியர்செயற்கரிய என்று அரையன் பணித்தவாறு அடுத்தகருவிகள் முறைப்பட ஒன்றேனுமின்றி முடித்தற்கு எங்ஙனங் கூடுமென்று ஐயுற்று அழுங்கிய உள்ளத்தோடு அருட் பொதுவின்கண் போந்து பணிந்து பழிச்சித் திருவருட் பெருமையைச் சிந்தித்து நிற்ப, ஆண்டு இறைவர் அவர் கருதிய பெருஞ்செயல் முடித்தற் பொருட்டு உளங்கொண்டு சிற்சபைக்கண் புறத்து உலகெலாம் என்றும் அவரகத்து அந்நிலைக்கண் உணர்ந்தோதற்கரியவன் என்றும் மொழிந்தருளியவா றென்க.

அங்ஙனமொழிதற்கு இயைபு எங்ஙனமெனின்:- உலகெலாம் என்பது பலநோக்குடைப் பெருமொழியாகலின் எந்நோக்கங் கருதி மொழிந்தனர் இறைவர் அந்நோக்கம் அவரறிந்தே முடித்தல் வேண்டும், மற்றையர் முடித்தற்கு

அணுத்துணையுங் கூடா. அன்றித் திருவருள் துரியத் திரு வாக்கில் எழுந்த பயனிலைமுற்றாக் குறைமொழியை மற்ற வாக்கான் முடித்தற்கு இயைபு எவ்வாற்றானும் இறைத்தனையு மின்று. அன்றி, சிவசுதந்தரச் செயற் குறையைச் சீவசுதந்தரத் தான் முடித்தலுங் கூடா. அன்றி, இதுகாறும் இறைவர் அருள் வடிவாற் பக்குவர்கட்கு உபதேச முதலிய திருவாக்களித்த வற்றுள் இங்ஙனம் குறைமொழியளித்ததின்று. அங்ஙனம் அளித்தல்அத்திருவருட்டுரியத் திருவாக்கின்இயலுமன்று. ஆகலினென்க.

ஆயின் ஓரிடத்தே மொழியாது அகத்தும் புறத்தும் மொழிந்தது என்னையெனின் :- அக்காலை அருட் பொதுவின் கண் நின்ற அந்தணர் அறவோர் முதலிய பலரும் அவர்வழி மற்றையோரும் சேக்கிழாரென்னும் பேரிற் சிறந்த பேரறி வுடைய பெரியர்திருவருட்டுணையால்இப்பெருங் காப்பிய முடித்தனர். இஃது மாயைத்துணையால் தேவர் முனிவர் மனிதர் இயற்றியமற்றைக் காப்பியங்கள் போல் எளிதன்று என்று அன்புகொண்டு அனுபவித்து உய்தற் பொருட்டும் அம் மெய்ம் மொழியைக் கேட்டுச் சேக்கிழாரது புறக்கரணங்கள் சுத்தியாதற் பொருட்டும், புறத்தே உலகெலாம் என்றெழுந்து தத்துவ படலத்தால் மயங்கிய அவரது ஆன்ம திருட்டியைப் படல நீக்கிஅறிவு விளக்கிச் சுத்தி செய்தற் பொருட்டு அகத்தே உணர்ந்தோதற் கரியவன் என்று முடிந்த தென்க.

ஆயின் அகத்தும் புறத்தும் மொழிதற்கு அளவை எங்ஙன மெனின் :- திருவருட் பரவயிந்துவத்துரியமொழி புறத்தே எழுந்து அகத்தே நிறைந்தது சுத்திசெய்தற் கருணையான் வாயுப்போல என்னுஞ் சுதன்மியமாகிய இக்கருதல் வியாத்தியால் அறிகவென்க. என்னையெனின்:- பொருட்புலப் பாட்டின்கண் சிற்சத்தியானது பரவிந்து விற்பதிதலும் அதனால் அதன்கண் நாத முண்டாதலும் உண்மை யாதலின் பக்கமும் பக்கத் தன்மையும் பெறப்பட்டன. வரலாற்றுப் புலப்பாட்டின்கண் அகத்தும் புறத்தும் சுத்திசெய்தற்

கருணையானன்றி அம்மொழி தோன்றாதாகலின் சிதைக்கப்படா அளவைத்திறன் பெறப் பட்டது. உறழ்ச்சிப் புலப்பாட்டின்கண் நேர்ச்சிப்பொருள் வான்புறத்தெழுந்து அகத்து நிரம்புதல் எங்ஙனம் அங்ஙனந் திருவருட் பரவயிந்துவப் புறத்தெழுந்து வாக்ககத்து நிரம்புதல் கூடுமாகலின் அளக்கப்படுகை மாறுபடாமை பெறப்பட்டது. ஆகலில் அசம்பவம் அவ்வியாத்தி அதிவியாத்திகளுமின்று. இதனால் வியாத்தி முறை காண்கவென்க.

இனி இம்மெய்ம்மொழிக்குப் பொருள் விளக்கஞ் செய்யுமிடத்துக் காட்சியும் கருதலும் இன்றியும் உரையளவையும் வேண்டுங்கால் வேதாகம முதலிய குறித்தல் வேண்டுமாக லெனின், குறித்தல் வேண்டா, என்னை யெனின்:-

இங்ஙனம் வருணாசிரமமானத்தாற் பந்தப்பட்டு ஏகதேசத்தான் வழங்குகின்ற வேதம், வருணாசிரம மானத்தாற் பந்தப்படாது யாண்டும் பூரணத்தான் வழங்கும் மெய்ம் மொழிக்குப் பிரமாணமாகா வென்க. அன்றியும், வேதங்கள் ஓர் காலத்தில் உருத்திரனாலும், வேறொர் காலத்தில் விண்டு வாலும், பிறிதோர் காலத்தில் பிரமானலும், மற்றோர் காலத்தில் பராசரன், வியாசன் முதலிய முனிவராலும் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் பலவாறு விகாரப் படுகின்றனவாய்; தாதுக்கள், பிரத்தியயங்கள், பிராதி பத்தியங்கள் முதலிய இயலுறுப்பும், வர்ன்னம், பதம், ஜடை முதலிய இயல் விசேடவுறுப்பும், உதாத்தம், அநுதாத்தம், சுரிதக முதலிய இசையுறுப்பும், சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சோதிடம், சத்தம் முதலிய அங்கவுறுப்பும் ஆயுள் நூல், தநுநூல், காந்தருவ நூல்முதலிய உபவுறுப்பும் உடையனவாய்; பஞ்சப்பிரம்ம மந்திரம், தத்துவத்திரய மந்திரம் முதலிய மந்திரம் சாமானிய விசேடங்களும், ஸ்நானம், சந்தி, ஜெபம், ஓமம், தர்ப்பணம், வைசுவதேவம், இட்டி, அக்கினிட்டோமம், பசுபந்தம் திரையாக்கிநியம் முதலிய நித்திய கன்மங்களும், வருடகன்மவிசேடம், அயனகன்மவிசேடம், மாதகன்ம

விசேடம், பருவகன்மவிசேடம்முதலிய நைமித்திக கன்மங்களும், அசுவமேதம், ராஜசூயம், பௌண்டரீகம் முதலிய காமிய கன்மங்களும், சுராபானம், பரதாரகமனம், அசத்திய வாசகம் முதலிய நிஷேத கன்மங்களும், அனசனம், சாந்திராயணம், கிருச்சிரம் முதலிய பிராயச் சித்த கன்மங்களும், சூரிய உபாசனை, பிரமஉபாசனை, விண்டுஉபாசனை, ருத்திர உபாசனை, பிரணவ உபாசனை முதலிய உபாசான கன்மங்களுமாகிய கன்ம சாமானிய விசேஷங்களும் சமயத்தார் சாதியார் பலர்க்கும் ஒத்த வண்ணம் வரைதற்கும் ஓதற்கும் உணர்தற்கும் இடங்கொடாமையும், பலவாறு விகற்பித்துக் கூறும் மயக்கமும்உடையனவாய்; தாம் திருவருட் பரவயிந்துவ சத்தியான அபரவிந்துவின்கண் உற்பத்தியாய் அதனிடத்தே லயமாதலில் ஆதியும் அந்தமும் உடைத்தாயிருந்தும், அங்ஙனங்கோடலின்றி உற்பத்தி யின்மையும் லயமின்மையுமாகிய அநாதியென்றும் நித்தியமென்றும் தம்மைத் தாமே விபரீதத்தான் மீக்கூறுகின்ற மதமும் அகங்காரமும் பெற்றிருத்தலுமன்றியும்; கருமை, கடினம், எளிதின் உருகாமை, புலால்நாற்ற முடைமை முதலிய வன்மைக் குணங்களால் வெளிப்பட்டு மண்வெட்டி, கோடரி, அரிவாள் முதலிய அற்பக் கருவியை விரும்பினோர் எளிதிற் பெறத்தான் பரிணமித்தலேயன்றி, மகுடம் குண்டலம் முதலிய விசேடக் கருவிகளை விரும்பினோர்க்குத் தன்னுண்மைக் குணமாய சுவர்ணத்தன்மையை நெடுஞ் சேய்மைக்கண் மறைத்து அரிதிற் பெறவிருந்த அயலோக நியாயம்போல், மாயாசத்தார்த்தப் பிரபஞ்ச காரிய சித்த விருத்தியாகிய வன்மைக் குணங்களான் வெளிப்பட்டு, பூலோகபோகம் சுவர்க்க லோகபோகம் முதலிய அநித்திய போகங்களை விரும்பினோர் எளிதிற் பெறத் தாம் மந்திர தந்திரங்களாற் பரிணமித்தலேயன்றி, அருட்போகம் ஆனந்தபோகம் சிவபோகம் முதலிய நித்திய போகங்களை விரும்பினோர்க்குத் தமதுண்மைக் குணமாகிய உபதேச லக்ஷியத் தன்மையை நெடுஞ்சேய்மைக்கண் மறைத்து அரிதிற் பெறவிருத்தலானும்; தன் பலத்தை விரும்பினோர்க்கு நின்று

கர நீட்டித்தலினானும் வேற்றுக்கருவி முதலியவற்றானுங் கைகூடுதலின்றி, மேலிவர்ந்தரிதிற் றலைக்க நின்று தன் காய்களைக் கவர்ந்தும் அந்நிலைக்கண் அனுபவித்தற்கும் வேறொர்கருவி வேண்ட நின்ற இலாங்கலி விருக்ஷ நியாயம் போல், உபதேச லக்ஷியத் தன்மையைப் பெறத் தொடங்கிய சாதகர்க்குத் தத்தம் பருவத்திற் கடுத்த உணர்வானும் பல்வகைச் சாதகத்தானுங் கைகூடுதலின்றித் தெய்வகதியான் முடிபுநோக்கி அத்தலைக் கண் அமைந்த பொருளைக் கவர்ந்தும்அந்நிலைக்கண் அனுபவித்தற்கும் வேதாந்த விசார முதலிய வேறோர்கருவி வேண்ட விருத்தலானும், மனிதர்மொழி, தேவர்மொழி, முனிவர்மொழி, அரிபிரமாதியர்மொழி, உருத்திராதியர் மொழி என்பவைக்குப் பெரும்பாலும் பிரமாணமாகி நிற்பன வன்றித் திருவருட் பரவயிந்துவத் துரியமொழிக்கு ஒருவாற் றானும் பிரமாணமாகா வென்க.

ஆகமங்களுள் சில ருக்குவேதம்போல் மந்திரகலையைக் குறித்தும், சில தயித்திரீய வேதம் போல் தந்திர கலையைக் குறித்தும், சில சாம வேதம் போல் உபயமுங் குறித்தும், சில அதர்வண வேதம்போல் உலகியலைக் குறித்தும் வருதலின் வேத சம்மதமாகியும், சில ஏகான்ம விரோதஞ் சாதித்தலின் வேத விரோதமாகியும், உபய மாயாகாரியங்களைப் பெரும்பாலும் விரித்து விளக்கலான் மயேசுர சதாசிவாதி மொழிக்குப் பெரும்பாலும் பிரமாணமாமன்றி இத்துரிய மொழிக்குப் பிரமாணமாகா வென்க.

இதனால், வேதாகமங்கள் சகளத்திற் சகுணமாகத் தோன்றிய ஈசுர வாக்கியங்கள் என்பதும்" உலகெலாம்" என்பது பூரண நிஷ்களத்தில் நிர்க்குணமாகத் தோன்றிய பரசிவ வாக்கியம் என்பதும் " உணர்ந் தோதற் கரியவன்" என்பதுஏகதேச நிஷ்களத்தில் நிர்க்குணமாகத் தோன்றிய பரசிவ வாக்கியம் என்பதும் அறிகவென்க.

ஆயின் இம்மெய்ம்மொழிக்கு உரைப்பிரமாணம் வேறின்றாலோ எனின் :- தற்சுதந்தரத்தானும் தற்புகழ்ச்சியானும் தன் மேம்பாடு வெளிப்படுத்து நிமித்தத்தானும் ஈசுராதிகளால் உபசரித்து உரைக்கப்பட்ட வேதாகமாதிகள் இங்ஙனம் மெய்ம்மொழிப் பிரமாணமாகா என்றதன்றி, சிவசுதந்தரத்தானும் நிரகங்காரத்தானும் சிற்சத்தி ஆனந்த சத்தித் துவாரமாக நாதாந்தத்திருந்து சிவஞானிகள் மோனந்ததும்ப மொழிந்தருளிய திருவருட்டுரிய மொழிகளைப் பிரமாணமாகா என்கிலம். ஆகலின் உரையளவை வேண்டுங்கால் அச்சிவஞானிகளது மோனந்ததும்ப மொழிந் தருளிய திருவருட்டுரியமொழிகளைப் பிரமாணமாகா என்கிலம். ஆகலின் உரையளவை வேண்டுங்கால் அச்சிவஞானிகளது திருவருட்டுரிய மொழிகளுட் குறிக்க வேண்டுவன குறிக்குதுமென்க.

*இம் மெய்ம்மொழி நிர்க்குணலக்ஷிய முடையதாகலின்,*

அறிவுருவுடையார் குறிகுணங் குறியா
ரென்பது கருதி யன்பத னாலே
வெருவா திதன்பொருள் விளக்க மென்னப்
பெருவாய் மையர்போற் பிதற்றின னன்றி
விளக்கும்வன்மையான் விளக்கவந் தனனல்
றளக்கு நுண்ணிய வறிலி லேனே.

*திருச்சிற்றம்பலம்*

*மெய்ம்மொழிப் பொருள் விளக்கம்ஆமாறு முற்றிற்து.*

---

இலாங்கலி விருஷம் – தென்னை மரம்

## 2. மெய்ம்மொழிப்பொருள் விளக்கம் வருமாறு

*இனி இம்மெய்ம்மொழிக்குப் பொருள்விளக்கங் கூறுதும்.*

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

*இதனுட் கலிவிருத்த வியலின் நாற்சீரோரடியான் முடிந்த உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன் என்னும் திரு வருட் பரவயிந்து வத்துரிய மெய்ம்மொழித் தொடர்க்கண் உலகெலாம் என்னும் முதன் மெய்ம்மொழிப்பொருள் விளக்கம் வருமாறு :- உலகெலாம் என்பது*

(1. தத்துவ உலகங்கள்)

1. சூக்கும ஸ்தூல அந்தரங்க பகிரங்க சாதாரண அசாதாரண பவுதிகப் பிரத்தியக்ஷ வியக்திரூப சமவாய காரண – மூலமாயாந் தராந்தராங்கார ஏகதேசோத்பவ தன்மாத்திரை காரிய பூத தத்துவ உலகு.

*1. சூக்குமாந்தர சினேகாணுத்வ சவிகற்ப சாத்திய விசித்திர பூத ரூபசத்தி உலகு.*

*2. ஸ்தூல வாகிய சினேகாணுத்துவ சவிகற்ப சாத்திய விசித்திர பூத சொரூபசத்தி உலகு.*

*3. சூக்கும ஸ்தூல வாகியாந்தர கிரியா சினேகாணுத்துவ சவிகற்ப கன்ம சாத்திய சாதக விசித்திர பூத சுபாவ சத்தி உலகு.*

*4. காரணாணுக் காரியபரியந்த சாத்தியத்துவ பூத சாதி சாமானிய வியாத்திசத்தி உலகு.*

*5. காரியாணுக் காரணபரியந்த சாத்தியத்துவ பூத உபாதி சாமானிய வியாபகசத்தி உலகு.*

*6. விவித ரூப சாத்திய பூத விசேடசத்தி உலகு.*

*7. விவிதாணு வியாபாரத்துவ பூத குணசத்தி உலகு.*

*8. பாகியேந்திரிய சூக்கும விகற்ப விஷய சாத்தியத்துவ பூத வர்னசத்தி உலகு.*

9. விசேஷாணுத்துவ சாத்திய பூத பரத்துவ சத்தி உலகு.
10. சாமானியாணுத்துவ சாத்திய பூத அபரத்துவ சத்தி உலகு.
11. அநேகாணுத்துவ விசித்திர சாமானிய சமவாய சாத்திய பூத பாவ சத்தி உலகு.
12. அதிட்டான மாத்திர பூத நிமித்த சத்தி உலகு.
13. அதிட்டான விசேடமாத்திர பூத நிமித்தவிசேடசத்தி

அன்றி.

1. சூக்கும ஸ்தூல சினேகாணுத்துவ சம்பந்த ரூப வியத்தியாதி சாதக சாத்திய பூத உற்பவசத்தி உலகு.
2. பூதஉற்பவ அதிகரணசத்தி உலகு.
3. பூதஉற்பவ கரணசத்தி உலகு.
4. பூதஉற்பவ பருவசத்திஉலகு.
5. பூதஉற்பவ கன்மசத்தி உலகு.
6. பூதஉற்பவ உபகார சத்தி உலகு.
7. பூதஉற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.
8. பூதஅதிகார சத்தி உலகு.
9. பூதஅதிகாரஅதிகரண சத்தி உலகு.
10. பூதஅதிகாரகரண சத்தி உலகு.
11. பூதஅதிகாரபருவசத்தி உலகு.
12. பூதஅதிகார கன்மசத்தி உலகு.
13. பூதஅதிகாரஉபகார சத்தி உலகு.
14. பூதஅதிகார உபகாரப்பிரேகசத்தி உலகு.
15. பூதலய சத்தி உலகு.
16. பூதலய அதிகரணசத்தி உலகு.
17. பூதலய கரணசத்தி உலகு.
18. பூதலய பருவசத்தி உலகு.
19. பூதலயகன்ம சத்தி உலகு.
20. பூதலய உபகார சத்தி உலகு.
21. பூதலய உபகாரப்பிரேரக சத்தி உலகு.

இங்ஙனம்

1. கடின குருத்துவாதி பிருதிவி ரூப சத்தி உலகு.
2. சீதத்திரவத்வாதிஅப்பு ரூபசத்தி உலகு.

3. உஷ்ண லகுத்வாதி தேயு ரூபசத்தி உலகு.
4. சலனாத்திஅதிலகுத்துவ வாயு ரூபசத்தி உலகு.
5. நிரந்தர அதிகரண பரமாத்தி அதிலகுத்வ ஆகாய ரூபசத்தி உலகு.
6. சதுட்கோண பிருதிவி சொரூப சத்தி உலகு.
7. துவிகோண அப்பு சொரூபசத்தி உலகு.
8. திரிகோண தேயு சொரூபசத்தி உலகு.
9. ஷட்கோண வாயு சொரூப சத்தி உலகு.
10. குண்டலாகார ஆகாய சொரூபசத்தி உலகு.
11. குருத்வ சினேகாணுத்துவ சாதநாசாதாரண சூக்கும ஸ்தாபன கன்மத்துவ பிருதிவி சுபாவசத்தி உலகு.
12. திரவத்துவ சினேகாணுத்துவ சாதனாத் பிரசாரண கன்மத்துவ அப்பு சுபாவ சத்தி உலகு.
13. உஷ்ண சினேகாணுத்துவ அதிலகுத்துவ சாதநோர்த்தப் பிரசாரண கன்மத்துவ தேயு சுபாவ சத்தி உலகு.
14. ஆலம்ப சினேகாணுத்துவாத்தி அதிலகுத்துவ சாதன வியாப கோபாநுப் பிரசாரண கன்மத்துவ வாயு சுபாவ சத்தி உலகு.
15. நிராகார சிநேகாணுத்துவ பரமாத்தி அதிலகுத்துவ சூக்கும சாதநானுசூத காரண கன்மத்துவ ஆகாய சுபாவ சத்தி உலகு.
16. விவித விசித்திர ரூப சாத்திய பிருதிவி விசேட சத்தி உலகு.
17. அப்பு விசேடசத்தி உலகு.
18. தேயு விசேட சத்தி உலகு.
19. வாயு விசேட சத்தி உலகு.
20. ஆகாய விசேடசத்தி உலகு.
21. பிண்டாண்ட பரியந்த சாதிசாமானிய சாத்தியப் பிருதிவி வியாத்திசத்தி உலகு.
22. அப்பு வியாத்திசத்தி உலகு.
23. தேயு வியாத்திசத்தி உலகு.
24. வாயு வியாத்திசத்தி உலகு.
25. ஆகாய வியாத்திசத்தி உலகு.

26. மாயாபரியந்த உபாதி சாமானிய சாத்தியப் பிருதிவி வியாபகசத்தி உலகு.
27. அப்பு வியாபகசத்தி உலகு.
28. தேயு வியாபகசத்தி உலகு.
29. வாயு வியாபகசத்தி உலகு.
30. ஆகாய வியாபகசத்தி உலகு.
31. விவிதோத்பவ அணுத்துவ விசித்திரப் பிருதிவி குண சத்தி உலகு.
32. அப்பு குணசத்தி உலகு.
33. தேயு குண சத்தி உலகு.
34. வாயு குணசத்தி உலகு.
35. ஆகாய குணசத்தி உலகு.
36. பிருதிவி வர்ணசத்தி உலகு.
37. அப்பு வர்ணசத்தி உலகு.
38. தேயு வர்ணசத்தி உலகு.
39. வாயு வர்ணசத்தி உலகு.
40. ஆகாய வர்ணசத்தி உலகு.
41. பிருதிவி பாவசத்தி உலகு.
42. அப்பு பாவசத்தி உலகு.
43. தேயு பாவசத்தி உலகு.
44. வாயு பாவசத்தி உலகு.
45. ஆகாய பாவசத்தி உலகு.
46. பிருதிவி பரத்துவசத்தி உலகு.
47. அப்பு பரத்துவசத்தி உலகு.
48. தேயுபரத்துவசத்தி உலகு.
49. வாயுபரத்துவசத்தி உலகு.
50. ஆகாயபரத்துவசத்தி உலகு.
51. பிருதிவி அபரத்துவசத்தி உலகு.
52. அப்புஅபரத்துவசத்தி உலகு.
53. தேயுஅபரத்துவசத்தி உலகு.
54. வாயுஅபரத்துவசத்தி உலகு.
55. அகாயஅபரத்துவசத்தி உலகு.

56. பிருதிவி உற்பவ சத்தி உலகு.
57. பிருதிவி உற்பவ அதிகரணசத்தி உலகு.
58. பிருதிவி உற்பவகரண சத்தி உலகு.
59. பிருதிவி உற்பவ பருவசத்தி உலகு.
60. பிருதிவி உற்பவ கன்மசத்தி உலகு.
61. பிருதிவி உற்பவ உபகாரசத்தி உலகு.
62. பிருதிவி உற்பவஉபகாரப் பிரேரகசத்தி உலகு.
63. பிருதிவி அதிகார சத்தி உலகு.
64. பிருதிவி அதிகார அதி கரணசத்தி உலகு.
65. பிருதிவி அதிகாரகரணசத்தி உலகு.
66. பிருதிவி அதிகாரபருவ சத்தி உலகு.
67. பிருதிவி அதிகாரகன்ம சத்தி உலகு.
68. பிருதிவி அதிகாரநிமித்த சத்தி உலகு.
69. பிருதிவி அதிகாரநிமித்தவிசேட சத்தி உலகு.
70. பிருதிவி லய சத்தி உலகு.
71. பிருதிவி லய அதிகரணசத்தி உலகு.
72. பிருதிவி லய கரணசத்தி உலகு.
73. பிருதிவி லய பருவசத்தி உலகு.
74. பிருதிவி லயகன்ம சத்தி உலகு.
75. பிருதிவி லய உபகாரசத்தி உலகு.
76. பிருதிவி லயஉபகாரப் பிரேரக சத்தி உலகு.
77. அப்பு உற்பவசத்தி உலகு.
78. அப்பு உற்பவ அதிகரணசத்தி உலகு.
79. அப்பு உற்பவ கரணசத்தி உலகு.
80. அப்பு உற்பவ பருவசத்தி உலகு.
81. அப்பு உற்பவ கன்மசத்தி உலகு.
82. அப்பு உற்பவ உபகாரசத்தி உலகு.
83. அப்பு உற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.
84. அப்பு அதிகார சத்தி உலகு.
85. அப்பு அதிகார அதிகரணசத்தி உலகு.
86. அப்பு அதிகார கரண சத்தி உலகு.
87. அப்பு அதிகார பருவ சத்தி உலகு.

88. அப்பு அதிகார கன்ம சத்தி உலகு.
89. அப்பு அதிகார உபகாரசத்தி உலகு.
90. அப்பு அதிகார உபகாரப் பிரேரக சத்தி உலகு.
91. அப்பு லயசத்தி உலகு.
92. அப்பு லய அதிகரணசத்தி உலகு.
93. அப்பு லய கரணசத்தி உலகு.
94. அப்பு லய பருவசத்தி உலகு.
95. அப்பு லய கன்மசத்தி உலகு.
96. அப்பு லய உபகாரசத்தி உலகு.
97. அப்பு லய உபகாரப் பிரேரகசத்தி உலகு.
98. தேயு உற்பவசத்தி உலகு.
99. தேயு உற்பவ அதிகரணசத்தி உலகு.
100. தேயு உற்பவ கரணசத்தி உலகு.
101. தேயு உற்பவ பருவசத்தி உலகு.
102. தேயு உற்பவ கன்மசத்தி உலகு.
103. தேயு உற்பவ உபகாரசத்தி உலகு.
104. தேயு உற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.
105. தேயு அதிகாரசத்தி உலகு.
106. தேயு அதிகார அதிகரணசத்தி உலகு.
107. தேயு அதிகாரகரணசத்தி உலகு.
108. தேயு அதிகாரபருவசத்தி உலகு.
109. தேயு அதிகார கன்மசத்தி உலகு.
110. தேயு அதிகார உபகாரசத்தி உலகு.
111. தேயு அதிகார உபகாரப் பிரேரகசத்தி உலகு.
112. தேயு லயசத்தி உலகு.
113. தேயு லய அதிகரணசத்தி உலகு.
114. தேயு லய கரணசத்தி உலகு.
115. தேயு லய பருவசத்தி உலகு.
116. தேயு லய கன்மசத்தி உலகு.
117. தேயு லய உபகாரசத்தி உலகு.
118. தேயு லய உபகாரப் பிரேரகசத்தி உலகு.
119. வாயு உற்பவ சத்தி உலகு.

120. வாயு உற்பவ அதிகரணசத்தி உலகு.
121. வாயுஉற்பூவ கரண சத்தி உலகு.
122. வாயு உற்பவ பருவசத்தி உலகு.
123. வாயு உற்பவ கன்மசத்தி உலகு.
124. வாயு உற்பவ உபகாரசத்தி உலகு.
125. வாயு உற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.
126. வாயு அதிகாரசத்தி உலகு.
127. வாயு அதிகார அதிகரணசத்தி உலகு.
128. வாயு அதிகார கரணசத்தி உலகு.
129. வாயு அதிகார பருவசத்தி உலகு.
130. வாயு அதிகார கன்மசத்தி உலகு.
131. வாயு அதிகார உபகாரசத்தி உலகு.
132. வாயு அதிகார உபகாரப் பிரேரகசத்தி உலகு.
133. வாயு லய சத்தி உலகு.
134. வாயு லய அதிகரண சத்தி உலகு.
135. வாயு லய கரண சத்தி உலகு.
136. வாயு லய பருவ சத்தி உலகு.
137. வாயு லய கன்மசத்தி உலகு.
138. வாயு லய உபகார சத்தி உலகு.
139. வாயு லய உபகாரப்பிரேரக சத்தி உலகு.
140. ஆகாய உற்பவ சத்தி உலகு.
141. ஆகாய உற்பவ அதிகரண சத்தி உலகு.
142. ஆகாய உற்பவ கரணசத்தி உலகு.
143. ஆகாய உற்பவ பருவசத்தி உலகு.
144. ஆகாய உற்பவ கன்மசத்தி உலகு.
145. ஆகாய உற்பவ உபகாரசத்தி உலகு.
146. ஆகாய உற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.
147. ஆகாய அதிகாரசத்தி உலகு.
148. ஆகாய அதிகார அதிகரணசத்தி உலகு.
149. ஆகாய அதிகார கரணசத்தி உலகு.
150. ஆகாய அதிகார பருவசத்தி உலகு.
151. ஆகாய அதிகார கன்மசத்தி உலகு.

152. ஆகாய அதிகார உபகாரசத்தி உலகு.
153. ஆகாய அதிகார உபகாரப் பிரேரகசத்தி உலகு.
154. ஆகாய லயசத்தி உலகு.
155. ஆகாய லய அதிகரணசத்தி உலகு.
156. ஆகாய லய கரணசத்தி உலகு.
157. ஆகாய லய பருவசத்தி உலகு.
158. ஆகாய லய கன்மசத்தி உலகு.
159. ஆகாய லய உபகாரசத்தி உலகு.
160. ஆகாய லய உபகாரப் பிரேரகசத்தி உலகு.
161. பிருதிவிப் பிருதிவி பூத சத்தி உலகு.
162. பிருதிவி அப்பு பூதசத்தி உலகு.
163. பிருதிவித்தேயுபூத சத்தி உலகு.
164. பிருதிவிவாயுபூத சத்தி உலகு.
165. பிருதிவி ஆகாயபூத சத்தி உலகு.
166. அப்புப் பிருதிவி பூத சத்தி உலகு.
167. அப்பு அப்பு பூத சத்தி உலகு.
168. அப்புத் தேயு பூத சத்தி உலகு.
169. அப்பு வாயு பூத சத்தி உலகு.
170. அப்பு ஆகாய பூத சத்தி உலகு.
171. தேயுப் பிருதிவி பூத சத்தி உலகு.
172. தேயு அப்புபூத சத்தி உலகு.
173. தேயுத் தேயுபூத சத்தி உலகு.
174. தேயு வாயு பூத சத்தி உலகு.
175. தேயு ஆகாய பூத சத்தி உலகு.
176. வாயுப் பிருதிவி பூத சத்தி உலகு.
177. வாயுஅ ப்பு பூத சத்தி உலகு.
178. வாயுத் தேயு பூத சத்தி உலகு.
179. வாயு வாயு பூத சத்தி உலகு.
180. வாயு ஆகாய பூத சத்தி உலகு.
181. ஆகாயப் பிருதிவி பூத சத்தி உலகு.
182. ஆகாய அப்பு பூத சத்தி உலகு.
183. ஆகாய த்தேயு பூத சத்தி உலகு.

184. ஆகாய வாயு பூத சத்தி உலகு.

185. ஆகாய ஆகாய பூதசத்தி உலகு.

1. சரபேத பௌதிக சத்தி உலகு.

2. அசரபேத பௌதிகசத்தி உலகு முதலியவுங் கொள்க.

சாதாரண அசாதாரண சூக்கும ஸ்தூல பூத அணுப் பிரத்தி யக்ஷப் பிரகிருதி வியக்தி சமவாய மூல மாயாந் தராங்கார ஏகதேச காரிய தன்மாத்திரைத்தத்துவ உலகு.

1. பூத சமவாயமாத்திர தன்மாத்திரை ரூபசத்தி உலகு.

2. பூத சமவாய சாமானியமாத்திர தன்மாத்திரை சொரூப சத்தி உலகு.

3. உற்ப உத்தியோகத்துவ தன்மாத்திரை சுபாவசத்தி உலகு.

4. பூதபௌதிக பரியந்த தன்மாத்திரை வியாத்திசத்தி உலகு.

5. மாயாபரியந்ததன்மாத்திரை வியாபகசத்தி உலகு.

6. சூக்கும வியாபார மாத்திரதன்மாத்திரை விசேடசத்தி உலகு.

7. பூதான்மிய மாத்திரதன்மாத்திரை குணசத்தி உலகு.

அன்றி

8. தன்மாத்திரை வர்ன சத்திஉலகு.

9. தன்மாத்திரை பாவ சத்தி உலகு.

10. தன்மாத்திரை பரத்துவசத்தி உலகு.

11. தன்மாத்திரை அபரத்துவ சத்தி உலகு.

இங்ஙனம்

1. சூக்குமவிசேஷாணுத்வ சம்பந்த ரூப வியக்தியாதி சாதகசாத்திய தன்மாத்திரை உற்பவசத்தி உலகு.

2. தன்மாத்திரை உற்பவ அதிகரணசத்தி உலகு.

3. தன்மாத்திரை உற்பவ கரணசத்தி உலகு.

4. தன்மாத்திரை உற்பவ பருவசத்தி உலகு.

5. தன்மாத்திரை உற்பவ கன்மசத்தி உலகு.

6. தன்மாத்திரை உற்பவ உபகாரசத்தி உலகு.

7. தன்மாத்திரை உற்பவ உபகாரப் பிரேரகசத்தி உலகு.

8. தன்மாத்திரை அதிகார சத்தி உலகு.

9. தன்மாத்திரை அதிகார அதிகரண சத்தி உலகு.

10. தன்மாத்திரை அதிகார கரணசத்தி உலகு.
11. தன்மாத்திரை அதிகாரபருவசத்தி உலகு.
12. தன்மாத்திரை அதிகார கன்மசத்தி உலகு.
13. தன்மாத்திரை அதிகார உபகாரசத்தி உலகு.
14. தன்மாத்திரை அதிகார உபகாரப் பிரேரகசத்தி உலகு.
15. தன்மாத்திரை லயசத்தி உலகு.
16. தன்மாத்திரை லயஅதிகரணசத்தி உலகு.
17. தன்மாத்திரை லயகரணசத்தி உலகு.
18. தன்மாத்திரை லயபருவசத்தி உலகு.
19. தன்மாத்திரை லயகன்மசத்தி உலகு.
20. தன்மாத்திரை லயஉபகாரசத்தி உலகு.
21. தன்மாத்திரை லயஉபகாரப் பிரேரகசத்தி உலகு. முதலியவுங் கொள்க.

1. தன்மாத்திரை நிமித்த சத்தி உலகு.
2. தன்மாத்திரை நிமித்தவிசேடசத்தி உலகுங் கொள்க.

**3.** மூல மாயாந்தராங்கார பாகிய விகற்ப ஞான லேச ஏகதேச காரியபவுதிக பாகியத்துவார ஞான வியக்தி விகற்ப மாத்திர ஞானேந்திரிய தத்துவ உலகு.

1. பூதசம்பந்தபிரஞ்ஞா விஷயாணுத்துவ சாத்திய ஞானேந திரிய ரூபசத்தி உலகு.
2. பௌதிகத்துவார ஞானணுத்துவ சாத்திய ஞானேந்திரிய சொரூபசத்தி உலகு.
3. பிரஞ்ஞா விகற்ப கன்ம ஏகாணுத்துவ சாத்திய ஞானேந்திரிய சுபாவசத்தி உலகு.
4. தன்மாத்திரை பரியந்த சாதிசாமானிய ஞானேந்திரிய வியாத்திசத்தி உலகு.
5. விஷயப் பிரஞ்ஞா பரியந்த உபாதி சாமானய ஞானேந்திரிய வியாபகசத்தி உலகு.
6. விஷய விசித்திரப் பிரஞ்ஞா வியாபார ஞானேந்திரிய விசேட சத்தி உலகு.
7. இச்சாரம்பத்துவ ஞானேந்திரிய குணசத்தி உலகு.

8. அந்தரேந்திரிய சூக்கும விஷய சாத்திய ஞானேந்திரிய வர்ன சத்தி உலகு.
9. விசேஷப் பிரஞ்ஞாணுத்துவ ஞானேந்திரிய பரத்துவசத்தி உலகு
10. சாமானியப் பிரஞ்ஞாணுத்துவ ஞானேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.
11. பகுவணுத்துவ சமவாய சாத்திய ஞானேந்திரிய பாவசத்தி உலகு

இங்ஙனம்

1. சூக்கும சினேக ஞானாணுத்துவ சம்பந்த விசித்திர ரூப வியத்தியாதி சாதக சாத்திய ஞானேந்திரிய உற்பவசத்தி உலகு.
2. ஞானேந்திரிய உற்பவ அதிகரணசத்தி உலகு.
3. ஞானேந்திரிய உற்பவ கரண சத்தி உலகு.
4. ஞானேந்திரிய உற்பவ பருவ சத்தி உலகு.
5. ஞானேந்திரிய உற்பவ கன்ம சத்தி உலகு.
6. ஞானேந்திரிய உற்பவ உபகார சத்தி உலகு.
7. ஞானேந்திரிய உற்பவ உபகாரப் பிரேரக சத்தி உலகு.
8. ஞானேந்திரிய அதிகார சத்திஉலகு.
9. ஞானேந்திரிய அதிகரண சத்தி உலகு.
10. ஞானேந்திரிய கரண சத்தி உலகு.
11. ஞானேந்திரிய பருவ சத்தி உலகு.
12. ஞானேந்திரிய கன்ம சத்தி உலகு.
13. ஞானேந்திரிய அதிகார சத்தி உலகு.
14. ஞானேந்திரிய அதிகார பிரேரக சத்தி உலகு.
15. ஞானேந்திரிய லய சத்தி உலகு.
16. ஞானேந்திரிய லய அதிகரண சத்திஉலகு.
17. ஞானேந்திரய லய கரணசத்தி உலகு.
18. ஞானேந்திரிய லய பருமசத்தி உலகு.
19. ஞானேந்திரிய லய கன்மசத்தி உலகு.
20. ஞானேந்திரிய லய உபகாரசத்தி உலகு.
21. ஞானேந்திரிய லய உபாகரப் பிரேரகசத்தி உலகு.

1. ஆகாயசம்பந்த சத்தவிஷயாணுத்துவ சாத்திய சுரோத்திரேந்திரிய ரூபசத்தி உலகு.
2. வாயுசம்பந்த ரூபவிஷயாணுத்துவ சாத்திய தொக்கேந்திரிய ரூபசத்தி உலகு.
3. தேயுசம்பந்த ரூபவிஷயாணுத்துவ சாத்திய நேத்திரேந்திரிய ரூபசத்தி உலகு.
4. அப்பு சம்பந்த ரசவிஷயணுத்துவ சாத்திய சிங்நுவேந்திரிய ரூபசத்தி உலகு.
5. பிருதிவி சம்பந்த கந்தவிஷயாணுத்துவ சாத்திய கிராணேந்திரிய ரூபசத்தி உலகு.
6. சத்தத்துவார ஞானாணுத்துவ சாத்திய சுரோத்திரேந்திரிய சொரூப சத்தி உலகு.
7. பரிசத்துவார ஞானாணுத்துவ சாத்திய தொக்கேந்திரிய சொரூபத்தி உலகு.
8. ரூபத்துவார ஞானாணுத்துவ சாத்திய நேத்திரேந்திரிய சொரூபசத்தி உலகு.
9. ரசத்துவார ஞானாணுத்துவ சாத்திய சிகுவேந்திரிய சொரூபசத்தி உலகு.
10. கந்தத்துவார ஞானாணுத்துவ சாத்தியக் கிராணேந்திரிய சொரூபசத்தி உலகு.
11. சத்தகன்ம ஏகாணுத்துவ சாத்திய சுரோத்திரேந்திரிய சுபாவ சத்தி உலகு.
12. பரிசகன்ம ஏகாணுத்துவ சாத்திய தொக்கேந்திரிய சுபாவசத்தி உலகு.
13. திருஷ்டிகன்ம ஏகாணுத்துவ சாத்திய நேத்திரேந்திரிய சுபாவசத்தி உலகு.
14. ரசகன்ம ஏகாணுத்துவ சாத்திய சிகுவேந்திரிய சுபாவசத்தி உலகு.
15. கந்தகன்ம ஏகாணுத்துவ சாத்திய கிராணேந்திரிய சுபாவசத்தி உலகு.
16. சத்ததன்மாத்திரை பரியந்த சுரோத்திரேந்திரிய வியாத்திசத்தி உலகு.
17. பரிசதன்மாத்திரை பரியந்த தொக்கேந்திரிய வியாத்தி சத்தி உலகு.

18. ரூபதன்மாத்திரை பரியந்த நேத்திரேந்திரிய வியாத்தி சத்தி உலகு.
19. ரசதன்மாத்திரை பரியந்த சிகுவேந்திரிய வியாத்தி சத்தி உலகு.
20. கந்ததன்மாத்திரை பரியந்த கிராணேந்திரிய வியாத்தி சத்தி உலகு.
21. சத்தப்பிரஞ்ஞை சாத்திய சுரோத்திரேந்திரிய வியாபக சத்தி உலகு.
22. பரிசப்பிரஞ்ஞை சாத்திய தொக்கேந்திரிய வியாபகசத்தி உலகு.
23. ரூபப்பிரஞ்ஞை சாத்திய நேத்திரேந்திரிய வியாபக சத்தி உலகு.
24. ரசப்பிரஞ்ஞை சாத்திய சிகுவேந்திரிய வியாபக சத்தி உலகு.
25. கந்தப்பிரஞ்ஞை சாத்திய கிரானேந்திரிய வியாபக சத்தி உலகு.
26. சத்தத்துவ சாமானிய பிரஞ்ஞை விசேட சுரோத்திரேந் திரிய விசேடசத்தி உலகு.
27. பரிசத்துவ சாமானிய பிரஞ்ஞை விசேட தொக்கேந்திரிய விசேடசத்தி உலகு.
28. ரூபத்துவ சாமானிய பிரஞ்ஞை விசேட நேத்திரேந்திரிய விசேடசத்தி உலகு.
29. ரசத்துவ சாமானிய பிரஞ்ஞை விசேட சிகுவேந்திரிய விசேட சத்தி உலகு.
30. கந்தத்துவ சாமானிய பிரஞ்ஞை விசேட கிராணேந்திரிய விசேடசத்தி உலகு.
31. சத்தேச்சாரம்ப சுரோத்திரேந்திரிய குணசத்தி உலகு.
32. பரிசேச்சாரம்ப தொக்கேந்திரிய குணசத்தி உலகு.
33. ரூபேச்சாரம்ப நேத்திரேந்திரிய குணசத்தி உலகு.
34. ரசேச்சாரம்ப சிகுவேந்திரிய குணசத்தி உலகு.
35. கந்தேச்சாரம்ப கிராணேந்திரிய குணசத்தி உலகு.
36. அந்தரேந்திரிய சூக்கும விகற்ப விஷய சாத்திய சுரோத்தி ரேந்திரிய வர்ன சத்தி உலகு.

37. தொக்கேந்திரிய வர்னசத்திஉலகு.
38. நேத்திரேந்திரிய வர்னசத்தி உலகு.
39. சிகுவேந்திரியவர்ன சத்தி உலகு.
40. கிராணேந்திரிய வர்னசத்தி உலகு.
41. விசேட சத்தப் பிரஞ்ஞாணுத்துவ சுரோத்திரேந்திரிய பரத்துவ சத்தி உலகு.
42. விசேட பரிசப் பிரஞ்ஞாணுத்துவ தொக்கேந்திரிய பரத்துவ சத்தி உலகு.
43. விசேட ரூபப் பிரஞ்ஞாணுத்துவ நேத்திரேந்திரிய பரத்துவ சத்தி உலகு.
44. விசேட ரசப்பிரஞ்ஞாணுத்துவ சிகுவேந்திரிய பரத்துவ சத்தி உலகு.
45. விசேடகந்தப் பிரஞ்ஞாணுத்துவ கிராணேந்திரிய பரத்துவசத்தி உலகு.
46. சாமானிய சத்தப் பிரஞ்ஞாணுத்துவ சுரோத்திரேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.
47. சாமானிய பரிசப் பிரஞ்ஞாணுத்துவ தொக்கேந்திரிய அபரத்துவசத்தி உலகு.
48. சாமானிய ரூபப் பிரஞ்ஞாணுத்துவ நேத்திரேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.
49. சாமானிய ரசப் பிரஞ்ஞாணுத்துவ சிகுவேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.
50. சாமானிய கந்தப் பிரஞ்ஞாணுத்துவ கிராணேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.

இங்ஙனம் 1 சுரோத்திரேந்திரிய பாவசத்தி உலகு 2 சுரோத்திரேந்திரிய அதிகார சத்தி உலகு முதலியவையுங் கொள்க. அன்றி,

1. சுரோத்திரேந்திரிய உற்பவசத்தி உலகு.
2. சுரோத்திரேந்திரிய அதிகார சத்தி உலகு.
3. சுரோத்திரேந்திரிய லய சத்தி உலகு.
4. தொக்கேந்திரிய உற்பவசத்தி உலகு.
5. தொக்கேந்திரிய அதிகார சத்தி உலகு.
6. தொக்கேந்திரிய லய சத்தி உலகு.

7. நேத்திரேந்திரிய உற்பவசத்தி உலகு.
8. நேத்திரேந்திரிய அதிகாரசத்தி உலகு.
9. நேத்திரேந்திரிய லய சத்தி உலகு.
10. சிகுவேந்திரிய உற்பவ சத்தி உலகு.
11. சிகுவேந்திரிய அதிகார சத்தி உலகு.
12. சிகுவேந்திரிய லயசத்தி உலகு.
13. கிராணேந்திரிய உற்பவசத்தி உலகு.
14. கிராணேந்திரிய அதிகார சத்தி உலகு.
15. கிராணேயந்திரிய லயசத்தி உலகு.

அன்றி

1. உற்பவ அதிகார லய அதிகரணசத்தி உலகு.
2. கரணசத்திஉலகு.
3. பருவ சத்திஉலகு.
4. கன்ம சத்தி உலகு.
5. உபகாரசத்திஉலகு முதலிவுங் கொள்க.
1. ஞானேந்திரிய நிமித்தசத்தி உலகு.
2. நிமித்த விசேடசத்திஉலகுங் கொள்க.

4. மூலமாயா இச்சாலேச ஏகதேசகாரியப்பரஞ்ஞாவிஷய மாத்திர ஞானேந்திரிய விஷய தத்துவ உலகு.

1. பூதபேத சூக்குமாந்தர சவிகற்ப குணத்துவ ஞானேந்திரிய விஷய ரூபசத்தி உலகு.
2. பூதபேத சூக்குமாந்தர சவிகற்ப குண விஷயத்துவ ஞானேந்திரிய விஷய சொரூபசத்திஉலகு.
3. சூக்குமாந்தர பௌதிக சையோகத்துவ ஞானேந்திரிய சுபாவ சத்தி உலகு.
4. பரமாணுப் பிரஞ்ஞாசாத்திய ஞானேந்திரிய விஷய விசேட சத்தி உலகு.
5. இந்திரியபரியந்த சாதிசாமானிய ஞானேந்திரிய விஷய வியாத்தி சத்தி உலகு.
6. பரமாணுப் பிரஞ்ஞா வியாபார உபாதிசாமானிய ஞானேந்திரிய விஷய வியாபகசத்தி உலகு.

7. பூத பீஜத்துவ ஞானேந்திரிய விஷய குணசத்தி உலகு.
8. சொரூப சித்திரத்துவ ஞானேந்திரியவிஷய வர்ன சத்தி உலகு.
9. சாமானிய விசேஷாணுத்வ சமவாய சாத்திய ஞானேந்திரிய விஷய பாவசத்தி உலகு.
10. காரணாணுத்துவ ஞானேந்திரிய விஷய பரத்துவ சத்தி உலகு.
11. காரியாணுத்துவ ஞானேந்திரியவிஷய அபரத்துவ சத்தி உலகு.
12. ஞானேந்திரிய விஷய நிமித்தசத்திஉலகு.
13. நிமித்த விசேடசத்திஉலகு.
1. சூக்கும சினேகாணுத்துவ சம்பந்தரூப வியத்தியாதிசாதக சாத்திய ஞானேந்திரியவிஷய உற்பவசத்தி உலகு.
2. ஞானேந்திரியவிஷய அதிகார சத்தி உலகு.
3. ஞானேந்திரியவிஷய லய சத்தி உலகு.

இங்ஙனம்

1. உற்பவ அதிகார லய அதிகரணசத்திஉலகு.
2. கரண சத்தி உலகு.
3. பருவ சத்திஉலகு.
4. கன்ம சத்திஉலகு.
5. உபகாரசத்தி உலகு.
6. பிரேரகசத்தி உலகு முதலியவுங் கொள்க.

அன்றி

1. ஆகாய சவிகற்பாந்தர குணத்துவ சத்தரூபசத்தி உலகு.
2. வாயு சவிகற்பாந்தர குணத்துவ பரிசரூபசத்தி உலகு.
3. தேயு சவிகற்பாந்தர குணத்துவ ரூபரூபசத்தி உலகு.
4. அப்பு சவிகற்பாந்தர குணத்துவ ரசரூபசத்தி உலகு.
5. பிருதிவி சவிகற்பாந்தர குணத்துவ கந்தரூபசத்தி உலகு.
6. ஆகாய சவிகற்பாந்தர குணவிஷயத்துவ சத்த சொரூப சத்தி உலகு.
7. வாயு சவிகற்பாந்தர குண விஷயத்துவ பரிச சொரூப சத்தி உலகு.
8. தேயு சவிகற்பாந்தர குண விஷயத்துவ ரூபசொரூப

சத்தி உலகு.

9. அப்பு சவிகற்பாந்தர குண விஷயத்துவ ரசசொரூப சத்தி உலகு.

10. பிருதிவி சவிகற்பாந்தர குண விஷயத்துவ கந்த சொரூபசத்தி உலகு.

11. ஆகாய பௌதிக ஏகதேச சையோகசம்பந்த சத்த சுபாவ சத்தி உலகு.

12. வாயு பௌதிக ஏகதேச சையோகசம்பந்தபரிசசுபாவ சத்தி உலகு.

13. தேயு பௌதிக ஏகதேச சையோகசம்பந்த ரூபசுபாவ சத்தி உலகு.

14. அப்பு பௌதிக ஏகதேச சையோகசம்பந்த ரசசுபாவ சத்தி உலகு.

15. பிருதிவி பௌதிக ஏகதேச சையோகசம்பந்த கந்த சுபாவ சத்தி உலகு.

16. பரமாணுப் பிரஞ்ஞாசாத்திய சத்த விசேடசத்தி உலகு.

17. பரிசவிசேடசத்தி உலகு.

18. ரூப விசேடசத்தி உலகு.

19. ரசவிவேடசத்தி உலகு.

20. கந்தவிசேடசத்தி உலகு.

21. சுரோத்திரேந்திரிய பரியந்தசம்பந்த சாதிசாமானிய சத்த வியாத்திசத்தி உலகு.

22. தொக்கேந்திரிய பரியந்த சம்பந்த சாதி சாமானிய பரிச வியாத்திசத்தி உலகு.

23. நேத்திரேந்திரிய பரியந்தசம்பந்த சாதி சாமானிய ரூப வியாத்திசத்தி உலகு.

24. சிகுவேந்திரிய பரியந்த சம்பந்த சாதி சாமானிய ரச வியாத்தி சத்தி உலகு.

25. கிராணேந்திரிய பரியந்த சம்பந்தசாதிசாமானிய கந்த வியாத்திசத்தி உலகு.

26. பரமாணுப் பிரஞ்ஞா வியாபார உபாதி சாமானிய சத்த வியாபக சத்தி உலகு.

* ஞானேந்திரிய விஷய என்று இருக்கவேண்டும்போல் தோன்றுகிறது. ஆனால் எல்லாப் பதிப்புகளிலுமே 'விஷய' என்னும் சொல் இல்லை.

27. பரிச வியாபகசத்தி உலகு.
28. ரூப வியாபகசத்தி உலகு.
29. ரச வியாபகசத்திஉலகு.
30. கந்த வியாபகசத்தி உலகு.
31. ஆகாய பீசத்துவ சத்தகுண சத்திஉலகு.
32. வாயு பீசத்துவ பரிசகுணசத்தி உலகு.
33. தேயு பீசத்துவரூப குணசத்தி உலகு.
34. அப்பு பீசத்துவ ரசகுணசத்தி உலகு.
35. பிருதிவி பீசத்துவ கந்தகுணசத்திஉலகு.
36. பரமாத்திஅதியணுத்துவ சாத்திய சத்தவர்ன சத்தி உலகு.
37. பரிச வர்னசத்தி உலகு.
38. ரூப வர்னசத்தி உலகு.
39. ரச வர்னசத்தி உலகு.
40. கந்த வர்னசத்தி உலகு.
41. சத்த பரத்துவசத்தி உலகு.
42. பரிச பரத்துவசத்தி உலகு.
43. ரூப பரத்துவசத்தி உலகு.
44. ரச பரத்துவசத்தி உலகு.
45. கந்த பரத்துவசத்தி உலகு.
46. சத்த அபரத்துவசத்தி உலகு.
47. பரிச அபரத்துவசத்தி உலகு.
48. ரூப அபரத்துவசத்தி உலகு.
49. ரச அபரத்துவசத்தி உலகு.
50. கந்தஅபரத்துவசத்தி உலகு.

இங்ஙனம்

1. சத்த பாவ சத்தி உலகு.
2. பரிச பாவசத்தி உலகு.
3. ரூப பாவசத்தி உலகு.
4. ரச பாவசத்தி உலகு.
5. கந்த பாவசத்தி உலகு முதலியவும்.
1. நிமித்தசத்தி உலகு.
2. நிமித்த விசேடசத்தி உலகு முதலியுங் கொள்க.

அன்றி

1. சத்தோற்பவசத்தி உலகு.
2. சத்த அதிகாரசத்திஉலகு.
3. சத்தலயசத்தி உலகு.
4. பரிசோற்பவசத்தி உலகு.
5. பரிச அதிகாரசத்தி உலகு.
6. பரிச லய சத்தி உலகு.
7. ரூபோற்பவ சத்தி உலகு.
8. ரூபஅதிகாரசத்தி உலகு.
9. ரூபலயசத்தி உலகு.
10. ரசோற்பவசத்தி உலகு.
11. ரச அதிகாரசத்தி உலகு.
12. ரச லயசத்தி உலகு.
13. கந்தோற்பவசத்தி உலகு.
14. கந்தஅதிகாரசத்தி உலகு.
15. கந்த லயசத்தி உலகு.
1. உற்பவ அதிகார லய அதிகரணசத்தி உலகு.
2. கரணசத்தி உலகு.
3. பருவசத்திஉலகு.
4. கன்மசத்தி உலகு.
5. பிரேரகசத்தி உலகு.
6. உபகாரசத்தி உலகு முதலியுங் கொள்க.

5. மூலமாயாந்தராங்கார பாகிய விகற்ப கிரியா லேச ஏகதேச காரிய பௌதிக பாகியத்துவார கிரியா

வியக்தி மாத்திர கன்மேந்திரிய தத்துவ உலகு.

1. பூதேந்திரிய சம்பந்த கன்மசிஷயாணுத்வ சாத்திய கன்மேந்திரிய ரூபசத்தி உலகு.
2. துவார கன்மாணுத்துவ வியாபார சாத்திய கன்மேந்திரிய சொரூபசத்தி உலகு.
3. கன்ம விகற்ப விசித்திர உத்தியோகத்துவ கன்மேந்திரிய சுபாவ சத்தி உலகு.

4. பூதபரியந்த சாதி சாமானிய கன்மேந்திரிய வியாத்தி சத்தி உலகு.
5. மானயபரியந்த உபாதி சாமானிய கன்மேந்திரிய வியாபக சத்திஉலகு.
6. சூக்கும சையோகத்துவ கன்மேந்திரிய விசேடசத்தி உலகு.
7. மாயா சடத்துவ கன்மேந்திரிய குணசத்தி உலகு.
8. அந்தரேந்திரிய சூக்கும விஷய கன்மேந்திரிய வர்ன சத்தி உலகு.
9. விசேஷ கன்மாணுத்துவ கன்மேந்திரிய பரத்துவ சத்தி உலகு.
10. சாமானிய கன்மாணுத்துவ கன்மேந்திரிய அபரத்துவ சத்தி உலகு.
11. கன்ம பகுவணுத்துவ சாத்திய கன்மேந்திரிய பாவ சத்தி உலகு.
12. அதிட்டான மாத்திர கன்மேந்திரிய நிமித்த சத்தி உலகு.
13. அதிட்டான விசேடமாத்திர கன்மேந்திரிய நிமித்த விசேட சத்தி உலகு.

இங்ஙனம்

1. சூக்கும சினேக கன்மாணுத்துவ சம்பந்த விசித்திர ரூப வியத்தி யாதி சாதக சாத்திய கன்மேந்திரிய உற்பவ சத்தி உலகு.
2. கன்மேந்திரிய அதிகாரசத்தி உலகு.
3. கன்மேந்திரிய லயசத்தி உலகு.
4. கன்மேந்திரிய உற்பவ அதிகார லய அதிகரண சத்தி உலகு.
5. கரணசத்தி உலகு.
6. பருவசத்தி உலகு.
7. கன்மசத்திஉலகு.
8. உபகாரசத்தி உலகு.
9. பிரேரகசத்தி உலகு முதலியுங் கொள்க.

அன்றி

1. ஆகாயப் பிருதிவி சாதி சையோக சுரோத்தி ரோபாதி சம்பந்த வசனகன்ம விஷயாணுத்துவ சாத்திய

வாக்குரூபசத்தி உலகு.

2. வாயுப் பிருதிவி சாதி சையோக தொக்குஉபாதி சம்பந்ததான கன்ம விஷயாணுத்துவ சாத்திய பாணிரூபசத்தி உலகு.

3. தேயுப் பிருதிவி சாதி சையோக நேத்திரோபாதி சம்பந்தகமன கன்மவிஷயாணுத்துவ சாத்திய பாதரூபசத்திஉலகு.

4. அப்புப் பிருதிவி சாதிசையோக சிகுவோ சம்பந்த விசர்கக்க கன்ம விஷயாணுத்துவ சாத்திய குய்யரூப சத்தி உலகு.

5. பிருதிவிப் பிருதிவி சாதி சையோக கிராணோபாதி சம்பந்த விசர்க்ககன்ம விஷயாணுத்துவ சாத்திய குதரூப சத்தி உலகு.

6. வாக்குத்துவார வசனகன்மாணுவியாபாரத்துவ சாத்திய வாக்கு சொரூபசத்தி உலகு.

7. பாதத்துவார கமனகன்மாணுவியாபாரத்துவ சாத்திய பாதசொரூபசத்தி உலகு.

8. பாணித்துவார தானகன்மாணுவியாபாரத்துவ சாத்திய பாணி சொரூபசத்தி உலகு.

9. குய்யத்துவார விசர்க்ககன் மாணுவியாபாரத்துவ சாத்திய குய்யசொரூபசத்தி உலகு.

10. குதத்துவார விசர்க்க கன்மாணுவியாபாரத்துவ சாத்திய குதசொரூபசத்தி உலகு.

11. வசனகன்ம விகற்ப விசித்திர உத்தியோகத்துவ வாக்கு சுபாவசத்தி உலகு.

12. கமனகன்மவிகற்ப விசித்திர உத்தியோகத்துவ பாத சுபாவசத்தி உலகு.

13. தானகன்ம விகற்ப விசித்திர உத்தியோகத்துவ பாணி சுபாவசத்தி உலகு.

14. விசர்க்க கன்ம விகற்ப விசித்திர உத்தியோகத்துவ குய்ய சுபாவசத்தி உலகு.

15. குத சுபாவசத்திஉலகு.

16. ஆகாயப்பிருதிவி சாதிபரியந்த வாக்கு வியாத்தி சத்தி உலகு.

245. இருள்வீடு - காந்த சத்து
246. களாவிழுது - காந்த சத்து
களாவிழுது - வெடியுப்பு கட்டு
247. மராமரம் - சூடங் கட்டு
248. குமுகு - பற்குறுதி
249. தழு தாழை - வாதம் போக்கி
250. தெற்கை - கிரிச்சம் போக்கி,சுளுக்கு போக்கி
251. ஆதண்டை - பீனிசம்போக்கி, சிரநீர் போக்கி
252. குழலாதண்டை - சரக்கெல்லாம் கட்டும்
253. செவ்வாத ண்டை - சூதவங்கி
254. நாணல் - துன் மாங்கிஷம் போக்கி
225. திமிசு - சாரங் கட்டு
256. பூசபத்திரி - வசீகரி
257. விடத்தேற்கு - சூதபற்பி
258. நெட்டி - நீரைக் கட்டும்
259. நளந்துவயம் - நாக செந்தூரி
260. பெருவாழை - ஈய செந்தூரி
261. உத்தாமணி - மாந்தம் போக்கி,பவள பற்பி, அயசிந்தூரி
262. பிராமுட்டி - சாரஞ் சாம்
263. குறிஞ்சி - மயிலிறகு சத்தாம்
264. தந்தசகுரி - இரும்புருக்கி
265. செப்பு நெருஞ்சில் - சிறுநீர் உஷ்ணம் போகும்
266. கணம்பு - சிலைமெழுகாம்
267. கல்புகு வெள்ளி - காயசித்தி
268. முளிகாக்கு - கல்லுப்புக் கட்டு
269. அசோகு - குன்மம் போகும்
270. வாலுகம் - கடிகள் போகும்
271. முத்தக்காசு - சுரதோஷம் போம்
272. அதிங்கு - கை கால்நோய் நீக்கம்
273. வெள்ளை நாககணத்தி - விரோசனி
274. நேர்வாளம் - பேதி,பரநாசி,

275. குறட்டை - கோழை பீனிஸம் போம்
276. கஞ்சாங்கோரை - குளிர்போம்
277. மருவகம் - தாகம் போம்
278. இங்குணம் - லிங்க மிறுகும்
279. இடுகாட்டுத் துளசி - இரைப்பு நீக்கி
280. திப்பிலி - தாது விருத்தி
281. சாசி - பாம்பு பக்ஷி கடி போக்கி
282. அனிச்சை - சொறி போக்கி
283. தாழை - சூத சுத்தி
284. குப்பைமேனி -உப்புக்கட்டு
285. செருப்படி - சிலேட்டுமம் போம்,மேகம் போம்
286. ஆடுதின்னப்பாளை-நாக பந்தனம், புழுக்கொல்லி
287. வெற்றிலை - நாகநீற்றி, ஜீர்ணகாரி, சூத சுத்தி
288. ஆகாசகருடன் - சூத பந்தனம், அண்டவெண்கரு
289. ரத்தமண்டலி - இரும்புருக்கி, பூரங் கட்டி
290. காட்டாமணக்கு - அயலோக வங்கி
291. மருதணி - அயச்செம்பி, கெந்தி கட்டி
292. கஞ்சா - யோகி
293. நிலவாகை - புழுக்கள் போக்கி
294. கட்டுக்கொடி - உப்புக்கட்டு, சூதவெண்ணெய்க் கட்டு
295. புரண்டை - வைரநீற்றி, சூதவெண்ணெய்பந்தனி
296. வல்லாரை - உடலந்தேற்றி,காமநாசி
297. மயூரசிகை - நாக பந்தனம்
298. தாம்பரசிகை - சூத பந்தனம்
299. கானல்மா - பித்தளை நீறும்
300. தில்லை - பாஷாணஞ் சாம்
301. மலைமா - குடவ நீறும்
302. கப்பட்டி - குதிரைப்பல் மெழுகு
303. புளிச்ச சிறுக்கீரை-சூத பந்தனம், தாம்பர சிந்தூரி
304. நீரரளி - அயச் செம்பி
305. செவ்வறளி - தங்கச் செம்பி

306. சத்திச்சாரணை - காரீய பற்பி, வாத நாசி
307. தும்பை - சுரம் போக்கி, விஷம் போக்கி,
308. பேய்த்தும்பை - தோஷம் போக்கி
309. பேய்க்கொள்ளு - சகல சத்துமாம்
310. பேய்க்கடலை - கெந்தி தைலம்
311. பேய்த்துவரை - தாளக தைலம்
312. அழுகண்ணி - சூத பந்தனம்
313. தொழுகண்ணி - துணித்த சதை கூடும்
314. முடவாட்டுக்கால் - சவ்வீ ரங் கட்டும்
315. நாகசிங்கி - நாக பந்தனம்
316. இருப்பவல் - மாகட்டி
317. பொன்மத்தை - சூத பந்தனம்
318. கருமத்தை - கெந்தி பந்தனம்
319. நச்சுப் பூலா - செந்தூர குருவாம்
320. நான்முகப்புல் - ஈய பற்பி
321. காவட்டம்புல் - மந்தம் போக்கி
322. சுனைமரம் - சூத பந்தனம்
323. எருமைக்கனைச்சான் - தேகசித்தி
324. ரோமவிருட்சி - சகலசித்தி
325. செந்தாடுபாவை - தங்கச் செம்பு
326. முண்டிஎளி - சித்து
327. சாயாமரம் - மாவேதை
328. கருநெல்லி - சகலசித்தி
329. கல்லாரை - சூதங் கல்லாம்
330. கல்செம்பு - சூத குரு
331. கல்லறளி - தங்கச் செம்பு
332. மூவிலைக்குருத்து - சூத மணி
333. முத்துருக்கன்செவி - சூத பந்தனி
334. செந்திராய் - சூதச் செம்பு
335. செம்பல்லி - சூதங் கட்டும்
336. செவ்வகத்தி - சாதிலிங்க மைனி

337. நிலச்சோதிக்கு - கண்டர் வெளுப்பு
338. நிலக்கடம்பு - அப்பிரகஞ் சத்து
339. பிறங்கைநாரிக்கு - கெவுரிக் கட்டு
440. பூதணைக்கு - மால்தேவிக் கட்டு
341. செருந்தி - பாஷாணங் கட்டும்
342. கொத்தான் - பித்தம் போக்கி
343. வறச்சுண்டி - நீரைக் கட்டும்
344. ஆமிரம் - வெடியுப்புக் கட்டும்
345. கட்டுமா - தாபம் போக்கும்
346. அம்பளங்காய் - கல்லுப்புக் கட்டு
347. புனம்பிளி - சாரங் கட்டும்
348. இதளை - சூலை போம்
349. தும்பி - சூத பற்பி
350. சிறுதும்பி - சோகம் தீர்க்கும்
351. சோனகப் - பாதரஸமாம்
352. திராய் - சன்னி போக்கும்
353. பேய்த்துமிட்டி - பாஷாணங் கட்டும்
354. பெருங்கம்பி - வெள்ளீய பற்பி
355. மரிதுடாரி - மால்தேவி பற்பி
356. மறிதொடரி - மால்தேவி பற்பி
357. தேவதாளி - சூத பற்பி
358. தாளி - இரைப்பு இருமல் மூர்ச்சை போக்கும்
359. நறுந்தாளி - சிலேட்டுமம்போம்
360. நாகதாளி - நாகங் கட்டும்
361. பேய்ச்சுரை - விஷம்போம்
362. பேய்ப்பீர்க்கு - கெந்தி தயிலம்
363. சற்பாக்ஷி - -பாம்பு விஷம் போம்
364. பைசாசப் பீர்க்கு - விஷம் போம், பேதி
365. சுவசற் பாசஷி - இங்குலிகங்கட்டும்
366. விட்டுணு காந்தி - சுரங்கள் போம்
367. நாகபாலை தாம்பர செந்தூரம்
368. நீர்க்கடம்பு - ஈயச் செந்தூரம்

369. ஈகை - தாளக செந்தூரம்
370. நறுவெளி - நாககுப்புண்ணாறும்
371. புளிவஞ்சி - நாக ரஸம்
372. சிறுகல்லு - கல்லுப்பு கட்டு
373. வெட்புலா - உஷ்ணம் போம்
374. நீர்ப்புலா - போகமிக்காம்
375. தலைச்சூடு வள்ளி - ரசங் கட்டும்
376. பிரமதண்டி - சூதங் கட்டும்
377. பொடுதலை - வயிறுகடுப்புப் போம், வெட்டை போம், நீரோழுக்குப் போம்
378 கோடகசாலை - வயிறு புழுப்போம்
379. இடுகொள்ளு - சத்து ஆம்
380. காட்டுக்கொள்ளு - காரங் கட்டும்
381. நாட்டுக்கொள்ளு - சாரங் கட்டும்
382. கரும்பு - பசாசு போம்
383. தின்பு - சிலை கட்டு
384. துரும்பு - சூத பற்பி
385. முட்பலா - ஆண்மை
386. வன்மறை - அரிதார வெள்ளை
387. வெள்வேல் - விரணம் போக்கி
388. கருவேல் - பல்லிறுக்கி
389. காஞ்சிரம் - காயசித்தி
390. மலையத்தி - பேதி கட்டும்
391. சடைச்சி - விரியன் விஷம் போம்
392. கப்புச்சடைச்சி - கண்டர் வெள்ளை
393. தமனகம் - தம்பனை
394. சத்துகம் - உப்புக் கட்டு
395. மாஞ்சரோணி - கண் புகைச்சல் தீரும்
396. மூங்கி லரிசி - தோஷம் போம்
397. மூங்கில் குருத்து - ரத்தம்போம்,
398. செவ்விறகு - அயச் செம்பு
399. செம்மரம் - தங்கச் செம்பு
400. ஒருகொம்பு-ரஜிதச் செம்பு

401. நீர்விளா - பைத்தியம் போகும்
402. கழுதை மான் புள்ளி - வெள்ளீயங் கட்டும்
403. நெய்மரம் - அரிதாரங் கட்டும்
404. பொன்வண்ணாச்சாலி - தங்கமாம்
405. செழுமலர்க்கொன்றை - புழு நீக்கும்
406. பெருமலர்க்கொன்றை - கிருமி போக்கும்
407. ஓமை - தினவு போக்கும்
408. சிறுநிலைக்கு - நரைகள் போம்
409. குறிதிமாறிக்கு - துரிசுச் செம்பு
410. புளிநறளை - திமிர் போக்கி
411. பேய்க்கும் மட்டி - லிங்கங் கட்டும்
412. சுண்டைக்காய் - சுரங்கள் போம்
413. காரெள்ளு - திலகமாம்
414. பித்தரோகணி - கண்டுறந்தி
415. நெல்லி - கெந்திச் செம்பு
416. சின்னக்கை - தைலத்தாதி
417. ஆவாரை - ஈயச் செந்தூரி
418. காட்டுக்கருணை - கெந்தி வெள்ளை
419. ருதந்தி - சிலை தைலம்
420. ஆதளைக் காய் - சூதஞ் சாம்
421. நரிமுருக்கு - க்ஷயம் போம்
422. கிளிமுருக்கு - அயச் செந்தூரம்
423. நெபத்திகை - காய சித்தி
424. மஞ்சிபத்திரம் - காந்தச் செம்பு
425. நாய்வேளை - மலங் கட்டும்
426. பச்சைநாவி - சூதங் கட்டும்
427. மாகாளி - மயக்கம் போம்
428. தாளிப்பனை - சலங்கள் போம்
429. விறுத்தி - சவுக்கார சுண்ணம்
430. ஓரிலைத்தாமரை - அழத்தி போம்
431. நீர்முள்ளி - வீக்கம் போம்
432. வெள்ளை நீர்முள்ளி-செம்பு குருவாகும்

433. நல்லாரை - சூதவெண்ணெ யிறுகும்
434. கசப்புப் பசளை - சூதங் கட்டும்
435. இருவேலி - தாபத்தைப் போக்கும்
436. பருத்தி - பெரும்பாடு போக்கும்
437. செம்பருத்தி - பித்தம்போம்
438. அகத்தி - வேக்காடு போம்
439. அரைக்கீரை - சுரம் போக்கும் கருவங்க பற்பி
440. கொடித்தும்பை - சூதங்கட்டும்
441. வனமிட்டி - சாரங் கட்டும்
442. பூசனி - ஊறல் போக்கும், வசிகரி
433. கக்கரி - நீர் பெருக்கும்
444. கொம்மட்டி - வாதமாற்றும்
445. இரும்பிலி - கெந்தி தைலம்
446. முளகரணை - கிரந்தி போம்
447. அவிரி - -லிங்கங் கட்டும், சகல விஷம் போம்
448. களவு தும்பை - மூலம் போக்கும்
449. பிறங்குநாரி -வெடியுப்புக் கட்டும், பொட்டிலுப்பு கட்டும்
450. செங்கத்தாரி - அயச் செம்பி
451. காட்டுத்தி - கண்டர் வெளுப்பாம்
452. புல்லூாரி - கருங்குட்டம் போம்
453. திலகம் - தொட்டிச் சிந்தூரம்
454. உச்சிச்சில் - குதிரைப்பல் கட்டும்
455. பாவட்டை - வாதம் போக்கும்
456. கொடிக்கொத்தான் - பாஷாணங் கட்டும்
457. ஓடமெட்டி - காயமுறுதி
458. செம்பரத்தை - சாதிலிங்க மைனம்
459. கொடிக்கள்ளி - பாஷாணங் கட்டும் நாகமணல், நாகபஸ்பம்
460. இலைக்கள்ளி - பாஷாணஞ்சாம்
461. திருகுகள்ளி - கெவுரி கட்டும்
462. மான்செவிக்கள்ளி - நாக பற்பி, தாளகந்தனை மெழுகு

463. மலை பொன்னாவாரை - வீர மெழுகு.
464. பொன்னாவாரை - ஈய செந்தூரி
465. ஒதி - விரண மாற்றும்
466. புன்னை - விரண மாற்றும்
467. சுரபுன்னை - அரிதாரங் கட்டும்
468. நறும்பிசின் - நாகங் கட்டும்
469. சன்னை - சிலை கட்டும்
470. உகாய் - அப்பிரகஞ் சத்து
471. சிவப்புநெல்லி - காயமுத்தும்
472. காட்டுவெந்தியம் - தாபரதங்கப் பற்பி
473. தூதுளை - கபநாசி, அறிவு விருத்தி
474. மஞ்சணாத்தி - உப்புக் கட்டி
475. கற்றாளை - வங்க சிந்தூரி
476. செங்கற்றாழை - சிந்தூரத் தாதி
477. கருங்காந்தள் - அறுத்த துண்டம் ஒன்றும்
478. முத்துப்பூடு - மிர்தபட்சி சிவிக்கும்
479. குளுந்தகொள்ளி - குக்குடாண்ட ஜனிதி
480. கருநாயுருவி - கர்ப்பார்த்த பிரசவம்
481. கொடிவேலி - சிதபேதி கட்டும்
482. ஷி மூல தைலம் - லிங்கனங் கட்டும்
483. செங் கொடிவேலி - செந்தூராதி
484. நாகக்கொட்டைத் தைலம் - நாகங் கட்டும்
485. துளசி - ஷி நாகத்தைச் சுன்னிக்கும்

மூலிகை குண அட்டவணை முற்றிற்று.

# சஞ்சீவி மூலிகைகள்

## 1.கருப்பு நாயுருவி

கறுப்பு நாயுருவிக் கஷாயம் 5 மாதத்துக் கர்ப்பிணிக்குக் கொடுக்க, கொடுத்த ஐந்து நாழிகைக்குள் 10 மாதத்துப் பூர்ண கர்ப்பம் உண்டாகிப் பிரசவமாகும்.

### 2. குளிர்ந்தகொள்ளி

குளிர்ந்தகொள்ளி என்னும் பச்சிலையைக் கசக்கிக் குக்குட அண்டத்தின் கீழும் மேலும் வைத்து மூடிய இரண்டரை நாழிகைக்குள் கரு முற்றிக் குஞ்சு பொரிக்கும்.

### 3. தீப்பூடு

தீப்பூடு நசுக்கி இறந்த கிளி முதலிய பறவைகளின் வலது காதில் வைக்க அவை பிழைக்கும்.

தீப்பூடு பிடுங்கி நசுக்கி இறந்தவனுடைய வலது காதில் வைத்தால் பிழைப்பான்.

### 4. முத்துப் பூண்டு

முத்துப்பூண்டுச் சாற்றை இறந்துபோன பக்ஷி எது ஆனாலும்அதன்காதில் சிறுகச் சிறுக இரண்டரைநாழிகை பிழிந்தால் பிழைக்கும்.

### 5. கருங்காந்தள்

கருங்காந்தள் இலையைக் கசக்கி, வெட்டுப்பட்ட துண்டுகளைச் சேர்த்து, கட்டி இரண்டரை நாழிகை வைத்திருந்தால், துண்டுகள் ஒன்றாய்ச் சேர்ந்து போகும்.

## மருத்துவக் குறிப்புகள்

### 1. இருமலுக்கு

முசுமுசுக்கை சமூலங் கொண்டு வந்து பசும்பாலில் ஊறவைத்து உலர்த்தி இடித்துச் சூரணமாக வைத்துக் கொண்டு கியாழங்மாக்கிப் பாலொடு கொள்க.

ஷை சூரணத்தில் மிளகு சர்க்கரைசிறுக சமன் சேர்த்து கொள்க. இவ்வாறு ரிசாலையுங் கொள்க. பின்பு பனை யோலை சுட்ட சாம்பலைப் பாலவிட்டு அரைத்துப் புடஞ்செய்து நெய் சர்க்கரை வெண்ணெய் தேனிலுங் கொள்க. இது போல் ஷை பூ காய்ந்ததை பஸ்பஞ் செய்து

கொள்ளத் தீரும்.

2. தேகமெலிவு, ஈளை, சுக்கிலக்கெடுதிக்கு

பொன்னாங்கண்ணி ஒருபங்கு கரிசலாங்கண்ணி முக்கால் பங்கு இவை ஒருமுறை வேகவைத்து, தண்ணீர் வடித்து, பின்பு வேகவைக்கும் போது மிளகுப் பொடி போட்டு, நெய் விட்டு, சீரகத்தால் தாளித்துப் புரட்டிச் சாப்பிடவும்.

3. நீர்க்கோவை, வாதபித்த ஆபாசக்கெடுதி, மலபந்தம், சூலை இவற்றிற்கு

சுக்கு பலம் 12-க்கு சுண்ணாம்பில் 4 பலம் கவசித்து, மஞ்சளில் 4 பலம் கவசித்து, எருமைச் சாணத்தில் 4 பலம் கவசித்து, கவசங் கருகச் சுட்டு எடுத்துச் சீவி வைத்துக்கொண்டு, மூன்று தினுசிலும் 3 வராகனெடை எடுத்து நசுக்கி அரைப்படி சலத்தில் போட்டுக் காய்ச்சி வீசம்படியாகச் சுண்டின பின்பு, பனங்கற்கண்டு நெய் இவைகளைக் கலந்துஇளஞ்சூடாகச் சாப்பிட்டு வரவேண்டும்.

4. தேகவலிவு, சரீர திடத்திற்கு

கெட்டிமிளகு பலம் 20 - இதைப் பேயன்வாழைக் கிழங்குச் சாற்றில் 3 நாள், இளநீரில் 3 நாள், கரிசாலைச் சாற்றில் 3 நாள், பொன்னாங்கண்ணிச் சாற்றில் 3 நாள், பசுங்கோமயத்தில் 3 நாள், பசும்பாலில் 3 நாள், தனித் தனியாக இரவில் ஊறவைத்து, பகலில் நிழலில் காய வைத்து, தேய்த்துப் புடைத்துமுன் போலவே எல்லாவற்றிலும் நனைத்து உலர்த்தித் தேய்த்துப் புடைத்து எடுத்து வைத்துக் கொண்டு, சுமார் 5 மிளகு அளவு கற்கண்டும்சேர்த்துச் சாப்பிட்டு வரவும், கற்கண்டு இல்லாமலும் கொள்ளலாம். சூடு கொண்டால் அறுகம் வேர் கஷாயத்தில் பசுவெண்ணெய் சேர்த்துச் சாப்பிடலாம். இவ்விதம் சிலதில் ஊறவைத்துக் கடுக்காயும் கொள்ளலாம்.

5. பஞ்ச கற்பம்

கஸ்தூரி மஞ்சள், வேப்பம் பருப்பு, வெள்ளை மிளகு, கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல் இவைகளை அரைத்துப் பாலில் காய்ச்சி நறுமணத்துடன் இறக்கித் தேய்த்துக் கொள்ளவும்.

(வேறுவகை)

கசகசா, பாதாம்பருப்பு,கொப்பரைத்தேங்காய்,மிளகு, சீரகம்,இவற்றைப்பாலில்அரைத்துகாய்ச்சி,நறுமணத்துடன் இறக்கித் தேய்த்துக் கொள்ளவும்.

6. நீலகண்ட மணி மாத்திரை

மாந்தாளிக்கள்ளி, சதுரக்கள்ளி, வெள்ளெருக்கு வேர்ப்பட்டை, இவைகளைச் சமன் எடையால் நிழலில் உலர்த்திக் கொண்டு ஐந்து பலம் குழித்தைலம் வாங்கிக் கொண்டு, சுரைக் குடுக்கையில் வைத்துக் கொண்டு, பெருங்காயம், லிங்கம், அபினி, இந்த மூன்றும் ஒவ்வொரு பலம் கல்வத்திற் போட்டுப் பொடித்துக் கொண்டு, குங்குமப்பூ, கஸ்தூரி, கோரோசனை, பச்சைக்கற்பூரம், கூகைநீறு இந்த ஐந்தும் வகைக்கு ஒன்றேகால் வராகனெடை சேர்த்து, தைலத்தை விட்டு எட்டு ஜாமம் அரைத்து, குன்றிமணிப் பிரமாணம் மாத்திரை செய்து மூங்கில் குழாயில் அடைத்து மண்குடத்தில் வைத்து, பூமிக்குள் நாற்பது நாள் வைத்துப் பின்பு எடுத்து, விஷ்ணுவுக்குப் பூசை செய்து, தங்க டப்பியில் வைத்துக் கொண்டு, வாந்தி பேதி கண்டவர்களுக்கு மணிக்கு மூன்று மாத்திரை வீதம் தேனில் கொடுத்தால் வாந்தி பேதி நிற்கும். ஜன்னி வகைகளுக்கும் பிரயோகிக்கலாம், நல்லபாம்பு முதலிய விஷ திருஷ்டிகளுக்கும், தகுந்த அனுபானங்களில் பிரயோகிக்கலாம். இந்த மாத்திரைக்கு விஷ்ணு வைத்த பெயர் பிரளய கால ருத்திர மணி மாத்திரை. சிவனிட்ட பெயர் நீலகண்ட மணி மாத்திரை. இது நாடியில் சொல்லியது.

மருத்துவக் குறிப்புகள் முற்றிற்று.

---

# உபதேசங்கள்

1. நித்திய கரும விதி
2. உபதேசக் குறிப்புகள்
3. சுப்பிரமணியம்
4. அருள் நெறி
5. திருவருண் மெய்ம்மொழி
6. பேருபதேசம்

# 1. நித்திய ஒழுக்கம் என்னும் உலகியல்

## *1. சாதாரண நித்திய கரும விதி*

*1. சூரியோதயத்திற்கு முன் நித்திரை நீங்கி எழுந்து,[1] விபூதி தரித்து சிறிது நேரம் உட்கார்ந்து, கடவுளைத் தியானஞ் செய்தல் வேண்டும்.*

*2. பின்பு களிப்பாக்கு மிகுதியாகவும் வெற்றிலை சுண்ணாம்பு குறைவாகவும் போட்டுக் கொண்டு, முன் ஊறுகின்ற ஜலத்தை உமிழ்ந்து, பின்வரும் ஜலத்தை யெல்லாம் உட்கொள்ளல் வேண்டும்[2]. பின்பு எழுந்து உள்ளே சற்றே உலாவுதல் வேண்டும். பின் மலஜல உபாதி களைக் கழித்தல் வேண்டும். மலங்கழிக்கின்றபோது, வலது கையால் இடது பக்கம்அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். ஜலம்*

---

1 வைகறைத் துயிலேழு—ஆத்திசூடி

வைகறை யாமம் துயிலேழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண் பொருளும் சிந்தித்து வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை. —ஆசாரக்கோவை 4

புத்தி அதற்குப் பொருந்தும் தெளிவளிக்கும்
சுத்த நரம்பினறற் றூய்மையுறும்—பித்தொழியும்
தாலவழி வாதபித்தம் தத்தநிலை மன்னுமதி
காலை விழிப்பின் குணம். —பதார்த்தகுணசிந்தாமணி

அதிகாலையில்விழிப்பதால்புத்திமனத்துடன் பொருந்தும்; தெளிவு உண்டாகும்; நரம்புகள் எல்லாம் சரியான நிலையை அடைந்து தூய்மையை அடையும்; வாதபித்த சிலேத்துமங்கள் தத்தம் நிலையில் சேரும்.

2. இஃது இல்லறத்தார்க்கு மட்டுமே விதித்தது. துறவறத்தார்க்குத் தாம்பூலம் தரித்தல் விலக்கு.

மேற்றலையும் கீழ்க்காம்பும் வெந்நரம்பும் வெண்பல்லைத்
தீத்தாமல் வெற்றிலையைத் தின்றாக்கால்—மாற்றலரை
வெல்லப்போர் செய்யும் விறல்நெடுமா லாயிடினும்
செல்லப்போய் நிற்கும் திரு.
காலை பிளவதிகம் கட்டுச்சி நீறதிகம்
மாலை இலையதிகம் வாணுதலே—சாலவே
ஆம்போது நீரிறக்க லாகாது சொன்னேன் கேள்
தாம்பூலங் கொள்வார் தமக்கு.
வெற்றிலைக்கு முன்னே வெறும்பிளவை நாவிலிட
நற்றிருவா மங்கை நடப்பளே—வெற்றிலையை
முன்னிட் டுப் பின்பிளவை வேய்வரே யாமாயின்
மன்னரைப் போலாவார் மகிழ்ந்து.

கழிக்கும்போது, இடது கையால் வலது பக்கம் அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். மலமாவது ஜலமாவது பற்றறக் கழியும் வரையில், வேறு விஷயங்களைச் சிறிதும் நினையாமல், மலஜல சங்கற்பத்தோடு இருக்கவேண்டும். மலம்பின்னுந் தடைபடுமானால், இடது பக்கமாகச் சற்றே படுத்துப் பிராண வாயுவை வலத்தே வரும்படி செய்து கொண்டு, மலசங்கற்பத்தோடுமலவுபாதி கழித்தல் வேண்டும். ஜலம் தடை பட்டால், வலது பக்கமாகச் சற்றே படுத்துப் பிராண வாயுவை இடது பக்கம் வரும்படி செய்து கொண்டு, ஜல சங்கற்பத்தோடு ஜல வுபாதி கழித்தல் வேண்டும்.

3. மலஜல வுபாதி கழிந்தபின், செவிகள், கண்கள், நாசி, வாய், தொப்புள்- இவைகளில் அழுக்கு, பீளை, சளி, ஊத்தை என்கின்ற அசுத்தங்களையும், கைகால் முதலிய உறுப்புக்களிலுள்ள அழுக்குகளையும் வெந்நீரினால் பற்றறத் துடைத்தல் வேண்டும். பின் வேலங்குச்சி ஆலம்விழுது- இவைகளைக் கொண்டு பல்லழுக்கெடுத்து,[3] அதன்பின் கரிசலாங்கண்ணித்தூள் கொண்டு உள்ளே சிறிது சாரம்போகும்படி பல்லில் தேய்த்து வாயலம்பின பின்பு,

---

வெற்றிலையின் நுனியையும் காம்பையும்கிள்ளி எறிய வேண்டும். முதுகு நரம்பை நகத்தால் எடுத்துவிட வேண்டும். பல் துலக்கு முன் தாம்பூலந் தரிக்கலாகாது.

காலையில் பாக்கு மிகுதியாகவும், உச்சியில் சுண்ணாம்பு மிகுதியாகவும், மாலையில் வெற்றிலை மிகுதியாகவும் கொள்ள வேண்டும். வெற்றிலைப் பாக்குப் போட்டுக்கொண்டு மென்றவுடனே முதல் இரண்டு முறை ஊறும் நீரை விழுங்கலாகாது; உமிழ்ந்து விடவேண்டும்.

தாம்பூலந் தரிக்கத் தொடங்கும்போது முதலில் பாக்கைப் போட்டுக் கொள்ள லாகாது. வெறும் வெற்றிலையை வாயில் போட்டுக் கொண்டு, பின்னரே பாக்கைப் போட்டுக் கொள்ள வேண்டும்.

3 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி' என்பது பழமொழி. பல்துலக்குவதற்குரிய கொம்புகள் இல்வாழ்வார்க்கு வேறாகவும் துறவிக்கு வேறாகவும் விதிக்கப்பட்டுள்ளன. தாது புஷ்டியைத் தரக்கூடியவை இல்வாழ்வார்க்கும், போகத்தில் இச்சையைக் குறைக்கக் கூடியவை துறவிக்கும் விதிக்கப்பட்டுள்ளன.

பொற்றலைக்கையாந்தகரை இலை அல்லது கரிசலாங்கண்ணி இலை ஒரு பங்கு, தூதுளையிலை[4] முசுமுசுக்கையிலை கால் பங்கு, சிரகம் கால் பங்கு-இவைகளை ஒன்றாகச் சேர்த்துச் சூரணமாகச் செய்துகொண்டு, அதில் ஒரு வாரகனெடை ஒரு சேர் நல்ல ஜலத்திற் போட்டு, அதனுடன் ஒரு சேர் பசுவின்பால் விட்டுக் கலந்து, அதிலுள்ள ஒரு சேர் ஜலமுஞ் சுண்டக் காய்ச்சி அந்தப் பாலில் நாட்டுச் சர்க்கரை கலந்து சாப்பிடல் வேண்டும்.

4. காலையில் இளம்வெய்யில் தேகத்திற் படாதபடி, பொழுது விடிந்து 5 நாழிகை பரியந்தம் உடம்பைப் போர்வையோடு காத்தல் வேண்டும். பின்பு வெய்யிலில் நெடுநேரம் தேகமெலிவு வரத்தக்க உழைப்பை யெடுத்துக் கொள்ளாமல், இலேசான முயற்சியில் சிறிது வருத்தந் தோன்ற முயலுதல் வேண்டும். பின் இளம் வெந்நீரில் குளித்தல் வேண்டும். விபூதி தரித்துச் சிவசிந்தனையோடு சிறிது நேரம்

---

இல்வாழ்வார்க்கு வேம்பு, வேல், பூல், ஆல், மா, அத்தி, தேக்கு, நாவல், ஆத்தி, கடம்பு, விளா, அசோகு, குருக்கத்தி, சண்பகம் முதலியன.

வேலுக்குப் பல்லிறுவு வேம்புக்குப் பல்லொளிவு
பூலுக்குப் போகம் பொழியுமே–ஆலுக்குப்
பல்வலியும் நீங்கும் பகருமகிழ் நாயுருவி
இல்வாழ் வோர்க்கில்லை இசை.

துறவிக்குப் பெருவாகை, நொச்சி, மருது, மகிழ், பெருங்குமிழ், புங்கு, நாயுருவி, கருங்காலி, கையாந்தகரை, காட்டா மணக்கு முதலியன.

பெருவாகை நொச்சி பெருங்குமிழே புங்கு
கருங்காலி நாயுருவி காயா–மருதுமகிழ்
கையாந்த கரையுடன் காட்டாமணக்காகும்
மெய்யார் துறவி தனக்கு.

பட்ட மரம், பாளை, கைவிரல்கள், செங்கல், மண், மணல், சாம்பல், கரி ஆகிய எட்டும் பல் துலக்குதற்கு ஆகாதனவாம்.

பட்டமரம் பாளை பகருமணல் மண்சாம்பல்
சுட்டமரம் செங்கல் தொடுவிரல்கள்–எட்டுவிதம்
பற்றுலக்க வீழும்பல் பல்லெல்லாம் நோய்கொள்ளும்
கற்றறிந்தார் கண்டதிது காண்.

4. கையாந்தகரையும் தூதுளையும் ஞானப் பச்சிலைகள். இவற்றை பெருமானார் அடிக்கடி வற்புறுத்தி யருளுவர்.

இருத்தல் வேண்டும்.

5. பசி கண்டவுடன் தடை செய்யாமல் ஆகாரம் கொடுத்தல் வேண்டும். ஆகாரங் கொடுக்கும்போது, மிகுந்த ஆலசியமுமாகாது மிகுந்த திவிரமுமாகாது.[5] முதற்பக்ஷம் சிரகச்சம்பா அரிசி அன்றிப் புன்செய் விளைவும் காரரிசியுந் தவிர நேரிட்ட அரிசியின் வகைகள்- ஆகும். அது சோறாகும்போது, அதிக நெகிழ்ச்சியு மாகாது, அதிக கடினமும் ஆகாது. நடுத்தரமாகிய சோற்றை அக்கினி அளவுக்கு அதிகப்படாமலும் குறைவு படாமலும்அறிந்துண்ணுதல் வேண்டும். ஆயினும் ஒரு பிடி குறைந்த பக்ஷமே நன்மை, போஜனஞ்செய்தபின்னர் நல்ல நீர் குடித்தல் வேண்டும். அந்த நல்ல நீரும் வெந்நீராதல் வேண்டும். அதுவும் அதிகமாகக் குடியாதிருத்தல் வேண்டும்.

6 கிழங்கு வகைகள் உண்ணாமல் இருக்க வேண்டும். அவற்றில் கருணைக்கிழங்கு மாத்திரம் கொள்ளுதல் கூடும்.[6] பழ வகைகள் உண்ணாதிருத்தல் வேண்டும் .அவற்றில் பேயன் வாழைப்பழம் ரஸ்தாளி வாழைப்பழம்-இவை நேர்ந்தால் சிறிது கொள்ளுதல் கூடும். பழைய கறிகளைக் கொள்ளாதிருத்தல் வேண்டும். பதார்த்தங்களில் புளி மிளகாய் சிறிதே சேர்க்கவேண்டும். மிளகு சீரகம் அதிகமாகச் சேர்த்தல் வேண்டும். கடுகு சேர்ப்பது அவசியமல்ல. உப்பு குறைவாகவே சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.[7] அன்றி, எந்த வகையிலும் உப்பு மிகுதியாகக் கொள்ளாமல் உபாயமாகக் கொள்ளுவது தேகம் நீடிப்பதற்கு ஏதுவாம். தாளிப்பில் பசு வெண்ணெய் நேரிட்டால் தாளிக்க வேண்டும். நேராத பக்ஷத்தில் நல்லெண்ணெய் சிறிது சேர்க்கவுங் கூடும். வெங்காயம் வெள்ளைப் பூண்டு சிறிதே சேர்க்க வேண்டும். கத்தரிக்காய், 7.

---

5. ஆலசியம்-தாமதம். திவிரம்-விரைவு.

6 ' மண்பரவு கிழங்குகளிற் கருணையன்றிப் புசியோம்' - பதார்த்த குண சிந்தாமணி

7. உப்பு, புளி, மிளகாய் இம்மூன்றும் உடலுக்( கேடு பயப்பவை. இவற்றை எவ்வளவுக் கெவ்வளவு குறைக் )ாமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. புளிக்குப் பதிலாக எலுமிச்சையையும் மிளகாய்க்குப் பதிலாக மிளகையும் சேர்த்துக் கொள்ளலாம்.

வாழைக்காய், அவரைக்காய், முருங்கைக்காய், பீர்க்கங்காய், கலியாணப்பூசுணைக்காய், புடலங்காய், தூதுளங்காய் கொத்தவரைக்காய் இவைகளை பதார்த்தஞ் செய்தல் கூடும். இவற்றினுள் முருங்கை, கத்தரி, தூதுளை, பேயன் வாழைக்காய் இவைகளை அடுத்தடுத்துக் கறி செய்து கொள்ளலாம். மற்றவைகளை ஏகதேசத்தில்* செய்து கொள்ளலாம். வடை, அதிரசம், தோசை, மோதகம் முதலிய அப்பவர்க்கங்களை கொள்ளப்படாது; ஏகதேசத்தில் சிறிது கொள்ளவுங்கூடும். சர்க்கரைப் பொங்கல், ததியோதனம்* புளிச்சாதம் முதலிய சித்திரான்னங்கள் கொள்ளப்படாது; ஏகதேசத்தில் சிறிது கொள்ளலாம். புளியோரைத் துவையல் தினந்தோறும் கிடைக்கினும் மிகவும் நன்று. கரிசலாங்கண்ணிக்கீரை-தூதுளைக்கீரை, முன்னைக்கீரை, பசலைக்கீரை, முருங்கைக்கீரை இவைகளை பருப்போடு சேர்த்தும் மிளகோடு சேர்த்தும் புளியிட்டும் தனித்தும் கறிசெய்துக் கொள்ளவுங்கூடும். மற்றைக் கீரைகள் ஏகதேசத்தில் நேரில் சிறிது சேர்த்துக் கொள்ளவும் கூடும். புளித்த தயிர் சேர்த்தல் கூடும். பருப்பு வகைகளில் முளைகட்டாத துவரம்பருப்பு அல்லது முளைகட்டின துவரம்பருப்பு மிளகு சேர்த்துக் கடைதல், துவட்டல், துவையல், செய்தல், குழம்பிடல், வேறொன்றில் கூட்டல் முதலியவாகச் செய்து, நெய் சேர்த்துக் கொள்ளுதல் கூடும். அந்த நெய்யை மிகவுஞ் சேர்க்கப்படாது. மற்றப் பருப்பு வகைகள் அவசியமல்ல. ஏகதேசத்தில் நேர்ந்தால் கொள்ளவுங் கூடும். சுக்கைச் சுண்ணாம்பு தடவிச் சுட்டு, மேலழுக்கைச் சுரண்டிப் போட்டுச் சூரணமாக்கி வைத்துக்கொண்டு, நல்ல ஜலத்திற் கொஞ்சம் போட்டு, 5 பங்கில் 3 பங்கு நீர் சுண்ட 2 பங்கு நீர் நிற்கக் காய்ச்சி, அதைத் தாகங்கொள்ளுதல் வேண்டும். நேராத பக்ஷத்தில் வெந்நீராவது கொள்ளுதல் வேண்டுமே யன்றிக் குளிர்ந்த ஜலங்கொள்ளப்படாது. எந்தப் போஜனத்திலும் புலால் எந்த வகையினும் புசிக்கப்படாது. எப்படிப்பட்ட போஜனமாயினும் சிறிது குறைவாகவே புசித்தல் வேண்டும். எந்த காலத்திலும் பசித்தாலல்லது எந்த வகையிலும் போஜனஞ் செய்யப்படாது. வாத பித்த சிலேத்துமங்கள் அதிகரிக்கத்தக்க போஜனங்களை அறிந்துவிடல் வேண்டும்.

* ஏகதேசம் – எப்போதாவது  * ததியோதனம் – தயிர்ச்சாதம்

பகலில் போஜனஞ் செய்தவுடன் சற்றே படுத்தெழுந்தல்லது*வேறு காரியங்களிற் பிரவேசிக்கப்படாது. ஆயினும் நித்திரை வரும்படி படுக்கப்படாது. பகலில் எந்த வகையிலும் நித்திரையாகாது.8 சிறிது படுத்து எழுந்து பின் பாக்கும் வெற்றிலையும் குறைவாகவும் சுண்ணாம்பு சிறிது அதிகமாகவும்9 தாம்பூலம் பஞ்சவாசங்களோடு 8 தரித்து முதலில் ஊறிய ஜலத்தைப் புறத்தில் உமிழ்ந்துவிட்டுப் பின்பு ஊறுஞ் ஜலத்தை உட்கொள்ளல் வேண்டும். பகற்போஜனஞ் செய்த சுமார் பதினேழரை நாழிகைக்குப் பின்பு, பேயன் வாழைப்பழம், ரஸ்தாளிவாழைப்பழம், பங்களா வாழைப்பழம், சிறிது சர்க்கரை சேர்த்து நேர்ந்தால் சாப்பிடக்கூடும். காலையில் பால் சாப்பிடும்போது பசி அதிகரித்திருந்தால், இந்தப் பழங்களில் நெய், சர்க்கரை கலந்து சிறிது சாப்பிடக்கூடும். பகலில் பெண்கள் தேகசம்பந்தங் கூடாது. பகற்போஜனஞ் செய்த பின், சற்று நேரங் கடவுளைத் தியானித்திருக்க வேண்டும். அதன் பின் எந்த வேலை செய்யினுந் தேக கரணங்களுக்கு மெலிவு உண்டு பண்ணுகிற வேலைகளாகச் செய்யப்படாது. செய்யினும் சிறிது சிறிதாகச் செய்தல் வேண்டும். சாயங்கால வெய்யில் தேகத்திற் படும்படி சிறிது உலாவுதல் வேண்டும். காற்று மிகுந்தடிக்கில் அப்போது உலாவப்படாது. அன்றி கடின வெய்யில், பனி, மழை இவைகள் தேகத்திற்பட உலாவப்படாது.

---

8. பகல் உணவுக்குப்பின் சற்றுத் துயிலவேண்டும்.
இரவு உணவுக்குப்பின் சற்று உலாவவேண்டும்.

Sleep a while after dinner
Walk a while after supper

என்பது பழமொழி. பகல் உணவுக்குப்பின் கொள்ளும்துயில் ஆழ்ந்த துயிலாக இருத்தலாகாது. அறிதுயிலாக, அரைத்தூக்கமாக இருத்தல் வேண்டும். இதனாற்றான் பெருமானார் படுத்து எழ வேண்டும் என்றனர். 'பகலுறக்கஞ் செய்யோம்' என்பது பதார்த்த குண சிந்தாமணி.

9 'கட்டுச்சி நீறதிகம்' – அடிக்குறிப்பு 2 பார்க்க.

* ஏலம், கிராம்பு, பச்சைக் கற்பூரம், ஜாதிக்காய், வால்மிளகு அல்லது தக்கோலம்

8. இராத்திரி முன் பங்கில் தேகசுத்தி செய்து, விபூதி தரித்து தியானஞ் செய்தல், தோத்திரஞ் செய்தல், சாத்திரம் வாசித்தல், உலகியல் விவகாரஞ் செய்தல்-இவை முதலியவை கூடும். பின் போஜனஞ் செய்தல் வேண்டும். இராப்போஜனம் பகற் போஜனத்தைப் பார்க்கிலும் அற்பமாகப் புசித்தல் வேண்டும்.[10] இரவில் தயிர்[11] கிரை வாயுவான பதார்த்தம் குளிர்ச்சியான பதார்த்தம் சேர்க்கப்படாது. சூடான பதார்த்தங்களையே அறிந்து சேர்க்க வேண்டும். அவை சிறுகத்தரி, முருங்கை, அவரைவற்றல் முதலியவையாம். இரவில் போஜனஞ் செய்தபின், சிறிது உள்ளே உலாவுதல் வேண்டும். பின்பு தியானம் முதலியவை செய்தல் வேண்டும். சுமார் 12 நாழிகைக்கு மேல் காலைக்குச் சொல்லியபடியாவது தனித்தாவது பசுவின் பாலை நன்றாகக் காய்ச்சிப் புசித்தல் வேண்டும். பின் சில நேரஞ் சென்று சுமார் 15 நாழிகையில் பாக்கும் சுண்ணாம்பும்மிகவுங் குறைய வெற்றிலை மிகவும் அதிகப்படக் கலந்து[12] பஞ்சவாசத்தோடும் போட்டுக் கொண்டு முதல் ஜலத்தைஉமிழ்ந்து பின்வருஞ் ஜலத்தையுட்கொண்டு, திப்பியையுமிழ வேண்டும். மற்ற வேளையும் தாம்பூலத்தின் திப்பியை உமிழுதல் அவசியம்.

9. பெண்களுடன் தேகசம்பந்தம் செய்ய வேண்டில், முன் ஒரு நாழிகை பரியந்தம் மனதைத் தேகசம்பந்தத்தில்

---

10. பகலுணவிற் பாதியளவே இரவுணவு கொள்ள வேண்டும். 3 சிறப்புவிதி 17 பார்க்க.

11. காலை மாலை யுறங்குவர் காரிகை
கோல மேனி குலைந்தபின் கூடுவர்
சாலி ராத்தியிர் சாதமொ டுண்பவர்
மாலைநேரினும் மாது பிரிவளே.

காலை மாலை உறங்குவோரும், விதவைகளையும் தம்மின் மூத்தபெண்களையும் சேர்வோரும், இரவு உணவில் தயிர் சேர்த்துக் கொள்வோரும் திருமாலைப் போன்ற செல்வமுடையராயினும் திருமகள் அவர்களை விட்டு நீங்குவாள்.

12. 'மாலை இலையதிகம்' - அடிக்குறிப்பு 2 காண்க.

வையாது வேறிடத்தில் வைத்துப் பின் சம்பந்தஞ் செய்வதற்குத் தொடங்கல் வேண்டும். தொடங்கிய போது அறிவு விகற்பியாமல் - என்றால், வேறுபடாமல்-மன முதலிய கரண சுதந்தரத்தோடு, தேகத்திலும் கரணங்களிலுஞ் சூடு தோன்றாமல், இடது புறச்சாய்வாகத் தேக சம்பந்தம் செய்தல் வேண்டும். புத்திரனைக் குறித்த காலத்தன்றி மற்றக் காலங்களில் சுக்கிலம் வெளிப்படாமலிருக்கத்தக்க உபாயத்தோடு தேகசம்பந்தஞ் செய்தல் வேண்டும். அவ்வுபாயமாவது பிராணவாயுவை உள்ளேயும் அடக்காமல் வெளியேயும் விடாமல் நடுவே உலாவச் செய்து கொள்ளுதலாம், ஒரு முறையன்றி அதன் மேலுஞ் செய்யப்படாது. தேகசம்பந்தஞ் செய்த பின், தேகசுத்தி செய்து திருநீறணிந்து சிவத்தியானஞ் செய்து பின்பு படுக்க வேண்டும். படுக்கும்போது , இடதுகை பக்கமாகவே படுத்தல் வேண்டும். எந்த காலத்தில் எது குறித்துப் படுத்தபோதிலும், இடதுகைப் பக்கமாகவே படுத்தல் வேண்டும்.13 பின்பு ஏழரை அல்லது பத்து நாழிகை அளவு நித்திரை செய்தல் வேண்டும்.14 அதன் பின் விழித்துக் கொண்டு நல்ல சிந்திப்புடனிருத்தல் வேண்டும். இரவில் தேகசம்பந்தம் 4 தினத்திற்கொருவிசை செய்தல் அதம பக்ஷம். 8 தினத்திற் கொருவிசை செய்தல் மத்திம பக்ஷம். 15 தினத்திற் கொரு விசை செய்தல் உத்தம பக்ஷம். அதன் மேற்படில் சுக்கிலம் ஆபாசப்பட்டுத் தானே கழியும். 4 தினத்திற் கொருவிசை செய்யில் சுக்கிலம் நெகிழ்ச்சிப்பட்டுச் சந்ததி விருத்தியைக் கெடுக்கும், ஆதலில், அதம பக்ஷமாயிற்று. இரவில் சொப்பனம் வாராது மிருதுவாகவே நித்திரை செய்து விழித்துக் கொள்ளல் வேண்டும். எப்போதும் பயத்தோடி ருக்கப்படாது. பரிச்சேதம் * பயமில்லாமலும் இருக்கப்படாது. எப்போதும் மனவுற்சாகத்தோடிருக்க வேண்டும். கொலை, கோபம், சோம்பல், பொய்மை, பொறாமை, கடுஞ்சொல் முதலிய தீமைகள் ஆகா. உரத்துப் பேசல், வேகமாக நடத்தல், ஓடி நடத்தல், வழக்கிடல், சண்டையிடல் கூடா. எந்த

13. 'இடதுகையிற் படுப்போம்' – பதார்த்தகுண சிந்தாமணி.

14. 7 1/2 நாளிகை மணி. 10 நாழிகை = 4.00 மணி சில நேரங்களில்

விதத்திலும் பிராணவாயு அதிகமாகச் செலவாகாமற்படி ஜாக்கிரதையோடு பழகுதல் வேண்டும்.

10. பொற்றலைக் கையாந்தகரையை உலர்த்தித் தூள் செய்து வைத்துக் கொண்டு, அதை நல்லெண்ணெயில் போட்டு காய்ச்சித் தலைக்கிட்டு 4 நாளைக்கு ஒருவிசை வெந்நீரில் முழுக வேண்டும். அன்றிவாரத்திற்கு ஒருவிசையாவது முழுகுதல் வேண்டும் தூளில்லாத பக்ஷத்தில் நல்லெண்ணெய்யைக் காய்ச்சியே முழுகுதல் வேண்டும். புகைக்குடி, கஞ்சாக்குடி, கள் குடி, சாராயக்குடி, முதலிய மயக்ககுடிகளாகா. மலஜலத்தைச் சிறிதும் அடக்கப்படாது. 15 சுக்கிலத்தைச் சிறிதும் வீணில் விடப்படாது. துன்மார்க்கப் பழக்கஞ் செய்யக்கூடாது. எந்த வேலை செய்யினும், எந்த விவகாரம் செய்யினும், சிவசிந்தனையோடு செய்தல், பழகுதல் வேண்டும்.

11. இந்த தேகத்தில் புருவமத்தியில், நமது ஆன்ம அறிவென்கிற கற்பூரத்தில், கடவுள் அருளென்கிற தீபம் விளங்குவதாகப்பாவித்துப் பார்த்து, அதில் பழகிப் பழகிக் கடவுளிடத்தே உண்மையாகிய அன்பையும், ஜீவர்களிடத்தே உண்மையாகிய காருணியத்தையும் இடைவிடாமல் வைத்து, ஓங்காரபஞ்சாக்ஷர ஞாபகஞ் செய்தல் வேண்டும்; சிவபஞ்சாக்ஷர ஞாபகஞ் செய்தல் வேண்டும்; அவசியம்.

சாதாரண நித்திய கருமவிதி முற்றிற்று.

## 2. பொது விதி

1. ஆறு மாதம்அல்லது மூன்று மாதத்திற் கொருதரம், வெள்ளைக் காக்கட்டான் முதலானவைகளால் விரேசனம்[16] வாங்கிக் கொள்ளுதல்.

2. நாலு மாதத்திற்கு ஒருதரம், மருக்காரை முதலியவைகளால் வமனத்திற்கு 17 வாங்கிக் கொள்ளல்.

15. 'இரண்டடக்கல் செய்யோம்' – பதார்த்த குண சிந்தாமணி.

16. விரேசனம் – பேதி

17. வமனம் – வாந்தி

18. நசியம்—மூக்கில் இடுதல், உறிஞ்சல்.

ஒரு வருடத்திற்கு ஒருதரம், முள்ளி முதலானவைகளால் நசியஞ் செய்து கொள்ளல்.[18]

4. நாலு நாளைக்கு ஒருதரம், அத்தி முதலிய வஸ்துக்களால் செய்வகைப்படி செய்த மைகளால் கண்ணுக்கு அஞ்சனந் திட்டல்.

5. ஒரு பக்ஷம் அல்லது ஒரு வார வட்டத்திற்கு ஒருதரம், சாவதானமாக நல்லநினைப்போடு தன் வசத்திலிருந்து, மூச்சு அதிர்ந்து மேலிடாது,மெல்லனப் பெண்போகம் செய்தல். இது விருத்தர்களுக்கு விதித்ததல்ல.

6. வாரவட்டம் அல்லது நாலு தினத்திற் கொருதரம், முலைப்பால், பொன்னாங்கண்ணி முதலிய தயில மிட்டுக் கொண்டு, செம்பாகமான வெந்நீரில், மெல்லென முழுகல்.

7. இளவெயில், கடுவெயில், மழை, குளிர்காற்று, பனி- இவைகளால் உடம்பை வருத்தாமற் காத்துக் கொள்ளுதல்.

8. கடுநடை, ஓட்டம், பெருஞ்சொல், பேரோசை, இசைபாடுதல், வழக்காடுதல், பெருநினைப்பு, பெருஞ்சிரிப்பு, பெருந்துயர், மிகுபார்வை, ஊன்றிக்கேட்டல், துர்க்கந்த நற்கந்த முகர்தல், சுவை விரும்பல், பேருண்டி, பெருந்தூக்கம், வீண்செயல், பெருமுயற்சி, விளையாட்டு, மலமடக்கல், சலமடக்கல், தாகமடக்கல், பெருநீர் குடித்தல், சயனஉணர்ச்சி,பயம், அகங்காரம், இடம்பம், பேராசை, உலோபம், கோபம்,மோகம், மதம்-இவை முதலிய தேகேந்திரிய கரண குற்றங்களடையாதிருத்தல்.

9. பழஞ்சோறு, பழங்கறி, எருமைப்பால், எருமைத்தயிர், மோர், நெய், செம்மறிப்பால், தயிர், மோர், நெய், கேழ்வரகு, வரகு, தினை, சாமை, பருப்புவகை, அதிரசம், அப்பம், சுகியம் முதலிய சிற்றுண்டி, தயிர்ச்சோறு, புளிச்சோறு முதலிய சித்திரான்னம் காரரிசிச்சோறு, முளைக்கீரை,அகத்திக்கீரை, முன்னை முதலான இலைக்கறி, சுரை, பூசுணை, பறங்கி, பீர்க்கு, புடல், பாகல், கடுகு,

புலால், மாமிசம் முதலிய விலக்குகளை நீக்கி, விதித்தவைகளை
புலால்,மாமிசம் முதலிய விலக்குகளை நீக்கி, விதித்தவைகளை
அனுசரித்தல்.

## 3. சிறப்பு விதி

1. நித்தியம் சூரியோதயமாக 5 நாழிகைக்கு[19] முன்னே நித்திரை நீங்கி எழுந்திருத்தல்.

2. எழுந்தவுடன் விபூதி தரித்துச் சற்றுநேரம் செவ்வையாக உட்கார்ந்து, கடவுளை ஊன்றி நினைத்து எழுதல்.

3. அங்ஙனம்எழுந்துசிறிதுந் தாமதியாமல், மௌனமாகச் சிறிது தூரம் நடந்து, எவ்விடத்தில் மலசலவுபாதி நேரிடுகிறதோ, அவ்விடத்தில்அப்பொழுதே ஒன்றுஞ் சேஷ்டையில்லாமல் விரைவில்லாமல் இருந்து அறவிடுதல்.

4. பொற்றலைக்கையாந்தகரை, கரிசலாங்கண்ணி-இவைகளில் ஒன்று கொண்டுஉள்ளே சிறிது சாரம் போகவும் கபநீர் பித்தநீர் வெளியாகவும் தந்தசுத்தி செய்தல்.

5. பின்பு திருநீறு தரித்துக்கொண்டு, ஏகாந்தமாக ஓரிடம் பற்றி இருந்து, சூரியனுதயமாகிற வரையில் கடவுளைத் தியானஞ் செய்து கொண்டிருத்தல்.

6. உதயந் தொடங்கிச் சுமார் சாம பரியந்தம் தக்க முயற்சியோடு பழகுதல்.

7. காலையில் உண்ணாமல் சுமார் பதினைந்து

---

19 சீர்பெறும் அநாதி சிவாகமப் படியே
நேர்பெறு நித்திய நியமம் புரிவோர்
கதிரவன் எழுமுன் கடிகை ஐந்தென
மதிபெற எழுந்து மகேசனை நினைந்தே -நியம அகவல்

கடிகை-நாழிகை.

நாழிகைக்கு உண்ணுதல்.

8. காலையில் சூரியோதய மானவுடன் தூதுளை, பொன்னாங்கண்ணி, வில்வம், சீந்தில், பொற்றலைக் கையாந்தகரை, புளியாரை, வல்லாரை, நன்னாரி, கடுக்காய், மிளகு, அறுகம்வேர்- இவைகளில் யாதாயினும் ஒன்றைப் பசும்பாலிற் சுத்திசெய்து சூரணமாக்கிக் கொண்டு சர்க்கரையிற் கலந்தாவது அல்லது சூரண மாகவாவது பசும்பாலில் அனுபானித்தாவது சிறிது சிறிதாக உண்ணுதல்.

9. சுமார் 15 நாழிகைக்கு உண்ணத் தொடங்கும்போது, முன்புசித்த போசன முழுதுஞ் ஜீரணித்ததை நன்றாக யூன்றி யறிந்து, பின்பு ஜீரணித்த அக்கணமே விருப்பால் ஏறாமலும் வெறுப்பால் குறையாமலும் தராசு முனைபோல் அளவறிந்து, அந்த அளவின்படி, அதிக விரைவும் அதிக தாமதமுமில்லாதபடி சமமாகப் புசித்தல்.

10. புசிப்பில் பச்சரிசிச்சாதம், பசும்பால், பசுநெய், முருங்கை, கத்தரி, முள்ளி, தூதுளை முதலிய இளங்காய். பொன்னாங்கண்ணி, தூதுளை முதலிய இளங்கீரை இவைகளில் மிளகு ஒரு பங்கு, சீரகம் காலே அரைக்காற் பங்கு, வெந்தயம் காற்பங்கு, புளி வீசம் பங்கு, உப்பு வீசம் பங்கு, மிளகாய வீசம் பங்கு சேர்க்கப்பட்ட கறியமுது குழம்பு ரசம் முதலானவைகளைக் கொண்டு, பெருங்காயம் வெங்காயம் வெள்ளைப்பூண்டு முதலானவைகளைத்தள்ளிப் புசித்தல்.

11. புசித்தபின்பு, மத்தியானந் தொடங்கி 25 நாழிகை பரியந்தம் சத்துவமான விவகாரங்களை மெல்லென இருந்தபடி நடத்தல், பிறர்க்கு விசேஷங் கேளாவகை படித்தல், மெல்லெனப் பேசல்- இவையன்றி நல்ல நினைப்போடிருந்தல்.

12. காலை, மத்தியானம், சாயங்காலம், -இப்பொழுது களிலும் மத்தியிலும் நித்திரை செய்யாதிருத்தல்.

அடிக்கடி தாகநீர் குடியாமல், போஜனஞ் செய்த பின்பு, ஒரு தரமாக இளஞ்சூடுள்ள வெந்நீரைக் கிரமமாகத் தாகத்துக்குக் கொண்டு, குளிர்ந்த ஜலம் சிறிதுங் கொள்ளாது தள்ளுதல்.

*14.* மத்தியானத்தில் சுமார் 5 நாழிகை (2மணி) பரியந்தஞ் * செவ்வையாக ஓரிடத்திலிருந்து, மனத்தை ஒருவழிப்படுத்தித் தெய்வ சிந்தனையோடிருத்தல்.

*15.*காலைப்புணர்ச்சி, பகற்புணர்ச்சி, அந்திப்புணர்ச்சி, இரவு முன்பங்குப்புணர்ச்சி, காலைப்போஜனம், அந்திப் போஜனம் முதலானவை இல்லாதிருத்தல்.

*16.* சாயங்காலத்திலும் 5 நாழிகை யாதொரு முயற்சியும் இல்லாமல், ஓரிடத்திலசையாதிருந்து தியானித்தல். ( 5 நாழிகை= 2 மணி)

*17.* இரவில் 10 நாழிகைக்குள் மத்தியான போஜனத்துக்கு அரைத்தரமாகப் புசித்தல்.

*18.* அதற்குமேல் இராத்திரி 15 நாழிகை பரியந்தம் மனத்தையடக்கித் தியானித்திருத்தல்.

*19.* 15 நாழிகை தொட்டு இருபத்திரண்டரை நாழிகை பரியந்தம் மெல்லெனத் தூங்கல்.[20]

*20.* படுத்து விழிக்கின்ற பரியந்தம் இடக்கை கீழிருக்கச் செய்தல்.

*21.* ஆகாரம் அரை, நித்திரை அரைக்கால், மைதுனம் வீசம், பயம் பூச்சியம் ஆகப் பெறுதல்**

திருச்சிற்றம்பலம்

சிறப்பு விதி முற்றிற்று.

நித்திய ஒழுக்கம் என்னும் உலகியல் முற்றிற்று.

---

20. 15 நாழிகை முதல் 22 1/2நாழிகை வரை = 12 மணி முதல் 3 மணி வரை * பரியந்தம் – வரையில்

** அரை வயிற்றுக்கு அரைப்பங்கு, அரைக்கால் 1/ 8 = 3மணி வீசம் 1/16 = 16 நாட்களுக்கு 1 முறை

# 2. *உபதேசக் குறிப்புகள்

## திருச்சிற்றம்பலம்

*1. அண்ட பிண்ட பூரண பாவனானுஷ்டான விதி*

**அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்கின்ற நாலிடத்திலும் கடவுட் பிரகாச முள்ளது. அதனில் காரியத்தாலுள்ள விபரம்:- பிண்டத்தில் அகம் ஆன்மா, ஒரு பொருளினது உண்மையை அறிதல் ஆன்ம அறிவு. பிண்டத்தில் அகப்புறம் ஜீவன், ஒரு வஸ்துவின் பிரயோஜனத்தை யறிந்த அறிவே ஜீவஅறிவு. பிண்டத்தில் புறம் கரணம் ஒரு வஸ்துவின் நாமரூபத்தையும் குண குற்றங்களையும் விசாரித்தறிதல் கரணமாகிய மன அறிவு. பிண்டத்தில் புறப்புறம் கண் முதலிய இந்திரியங்கள், ஒரு பொருளினது நாம ரூப குண குற்றங்களை விசாரியாமல் அந்தப் பொருளைக் காணுதல் இந்திரியக்காட்சி, இந்திரிய அறிவு. இதுபோலவே கரணக்காட்சி, ஜீவக்காட்சி, ஆன்மக்காட்சியுமுண்டு. இதுபோல், அண்டத்தில் அகம் அக்கினி, அண்டத்தில் அகப்புறம் சூரியன், அண்டத்தில் புறம் சந்திரன், அண்டத்தில் புறப்புறம் நக்ஷத்திரங்கள். ஆகவே பிண்டத்தில் நாலிடம் அண்டத்தில் நாலிடம்- ஆக எட்டிடத்திலும் கடவுட் பிரகாசம் காரியத்தாலுள்ளது. காரணத்தாலுள்ள இடம்:- பிண்டத்தில் புருவமத்தி, அண்டத்தில் பரமாகாசம். காரியகாரணமாயுள்ள இடம் நான்கு:- பிண்டத்தில் விந்து, நாதம். அண்டத்தில் மின்னல், இடி. சர்வ யோனியிடத்தும், விந்து விளக்கமாகிய மின்னலிடத்தும், நாத விளக்கமாகிய இடியிடத்தும்; இதல்லாது பாரொடு விண்ணாய்ப்பரந்ததோர் ஜோதி என்றும், ஜோதியுள் ஜோதியுள் ஜோதியாயும்... மேற்குறித்த அகமாகிய ஆன்மப் பிரகாசமே ஞானசபை, அந்தப் பிரகாசத்துக் குள்ளிருக்கும் பிரகாசம் கடவுள், அந்த உள்ளொளியின் அசைவு நடம். இதுதான் ஞானாகாச நடன மென்றும் அசைவற்றதே நடராஜரென்றும் ஆனந்தநடன மென்றும் சொல்லுகின்றது.**

ஆதலால் ஏமம், கனகம், ரஜிதம், ரௌப்பியம் முதலாகச் சொல்வதில் சூரியனிடத்தில் கனகமும் சசியிடத்தில் ரஜிதமும்... இதுபோல் பிண்டத்தில் ஆன்மாகாசம் பொற்சபை யென்றும், ஜீவாகாசம் ரஜிதசபை யென்றும் சொல்லுவது. ஆதலால் மேற்குறித்த இடங்கள் யாவற்றிலும் கடவுள் பூரண இயற்கை விளக்கம் காரியமாயும் காரணமாயும் காரியகாரணமாயும் இருக்கின்றது. முக்கிய இடங்களாகிய பிண்டத்தில் நாலும் அண்டத்தில் ஐந்தும் ஆகிய9 இடத்திலும் கடவுள் விளக்கம் விசேஷ முள்ளது. ஆதலால் நாம் தினம் ஆறு காலத்திலும் மேற்குறித்த பிரகாசமே சபையாகவும் அதன் உள்ளொளியே பதியாகவும் வணங்க வேண்டும். எக்காலத்திலும் புருவமத்தியின்கண்ணே நம்முடைய கரணத்தைச் செலுத்த வேண்டும். மேற்குறித்த காலங்கள் சூரியஉதயம், உச்சிப்போது, சாயரக்ஷை, மாலை, யாமம், வைகறை-ஆகிய காலங்களில் எல்லாம் வல்ல தலைவனை வணங்குதல் வேண்டும்.

### கடவுட் பிரகாசம்

அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்கின்ற நான்கிடத்திலும் கடவுள் பிரகாசம் காரியத்தாலுள்ள விவரம்:- பிண்டத்தில் அகம் ஆன்மா, அகப்புறம்-ஜீவன், புறம்-மனம் முதலிய கரணம், புறப்புறம்-கண் முதலிய இந்திரியங்கள். அண்டத்தில் அகம்-அக்கினி, அகப்புறம்-சூரியன், புறம்-சந்திரன், புறப்புறம்-நக்ஷத்திரங்கள். ஆகவே பிண்டத்தில் 4, அண்டத்தில் 4, ஆக 8 இடத்திலும் கடவுள் பிரகாசம்காரியத்தா லுள்ளது.

### ஞானசபையும் நடராஜரும்

ஒரு பொருளினது நாம ரூப குண குற்றங்களை விசாரியாமல் அந்தப் பொருளைக் காணுதல் இந்திரியக்காட்சி, இந்திரியஅறிவு. அதன் நாமரூபத்தையும் குண குற்றங்களையும் விசாரித்தறிதல் மன அறிவு. அதன் பிரயோஜனத்தை யறிதல் ஜீவ அறிவு. அந்தப் பொருளினது உண்மையை அறிதல் ஆன்மஅறிவு. ஞானசபை யென்பது ஆன்மப்பிரகாசம். அந்தப்

பிரகாசத்திற்குள் இருக்கும் பிரகாசம் கடவுள். அந்த உள்ளொளியின் அசைவே நடனம். இவற்றைத்தான் சித்சபை அல்லது ஞானசபை என்றும், நடராஜர் என்றும், நடனம் என்றும் சொல்லுகின்றது.

## சூரியன்

ஏமம் கனகம் என்பன சூரியனைக் குறிக்கின்றன, சூரியனிடத்தில் பொன்னிருக்கின்றது.

## 2. பிண்ட ஒளியும் அண்ட ஒளியும்

| | | |
|---|---|---|
| பிண்ட ஒளி | – | அண்ட ஒளி |
| ஆன்ம ஒளி | – | அக்கினி ஒளி |
| ஜீவ ஒளி | – | சூரிய ஒளி |
| மன ஒளி | – | சந்திர ஒளி |
| கண்ணொளி | – | நட்சத்திர ஒளி |

## 3. பிண்டாண்ட கிரகண சித்தாந்தம்

இவ்வுலகமும் இவ்வுலகத்திலுள்ள சராசர பேதங்களில் முக்கியமாயுள்ள சரமாகிய ஜீவராசிகளும் கற்பபேதமும் தோன்றி உய்யும் பொருட்டு, அநேகவித வாயுபேதங்கள் அநாதியில் கடவுளால் உண்டு பண்ணப்பட்டிருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை அமுதக்காற்றும் விஷக்காற்றும். அவை விசேஷ வியாபகமா யிருந்துகொண்டிருக்கின்றன. இவற்றில் அமுதக்காற்று பிரமாண்ட பகிரண்ட கடாகத்தில் விசேஷ வியாபகமாயும், இம்மகா அண்டத்திலும் பிண்ட ஜீவரிடத்திலும் ஏகதேச வியாபகமாயும் இருக்கின்றது, விஷக்காற்று மேற்படி பிரமாண்டாதி கடாகத்தில்-ஏகதேசம் நிமிஷகாலம் அல்லது முகூர்த்தம், அசாதாரணத்தில் ஜாமம் வரையில்-வியாபகமாயும், இம்மகா அண்டாதி ஜீவராசிகளிடத்தில் விசேஷ வியாபகமாயும் இருந்து கொண்டிருக்கின்றது.

பிரமாண்டதிகளில் அமுதக்காற்று விசேஷ வியாபகமாயுள்ளதால், அவ்வண்டங்களி லுள்ளசூரிய சந்திர உடுக்கள் முதலியவைகளும் சொற்பகாலத்தில் அழிவடை

தலின்றி இருக்கின்றன. விஷக்காற்று ஏகதேச வியாபகமாதலால், கற்பகாலத்தில் வியாப்பியமாயும் வியாபகமாயும் இருத்தலால், அந்தக்காலங்களில் அவை நஷ்டப்படுகின்றன.

மேற்படி விஷக்காற்று கருமை வண்ணமாயும் செம்மை வண்ணமாயும் இரண்டு பாகமாய்ப் பிரியும். இவைகளை இராகு கேதுக்களென வழங்குகின்றனர். இது ஒரு முகூர்த்தம் ஒரு ஜாமம்... அதற்குமேல் இவ்வண்ணமாய், இவ்வண்ட கணிதப்படி, அவ்வண்டங்களிற் கணித காலத்தில் வியாபகமா யிருப்பதுதான் சந்திராதித்த கிரஹணதோஷ காலம். தோஷகாலமென்பது பிரகாசமின்றி இருள்வண்ணமாய்ச் சில காலத்தில் முற்றும் மறைந்தும் சிலகாலத்தில் ஏகதேசம் மறைந்தும் இருப்பதால், இவ்வண்ட புருஷனுக்குக் கரணஸ்தானமாகிய சந்திரனும் ஜீவஸ்தானமாகிய சூரியனும் பிரகாசம் மழுங்குகின்றபடியால் தோஷமெனப் பெயர். மேலும் தோஷ என்பது இருள், அறியாமை, அஞ்ஞானம். விஷக்காற்று வியாபகமாயுள்ளது இவ்வண்டத்திலும் ஜீவர்களிடத்திலும் ஆதலால், ஜீவகோடிராசிகள் சொற்பத்தில் அடிக்கடி நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

அமுதக்காற்று இவ்வண்டத்தில்இரவில் அருணோதயந் தொடங்கி உதயபரியந்தம் வியாபகமாய் இருக்கின்றது. அக்காலத்தில் ஜீவர்கள் நன்முயற்சியி லிருப்பது விசேஷநலம். தேகாதி பிண்டத்தில் மேற்படி அமுதக்காற்று வியாப்பிய மாயிருக்கும். ஒருகால் ஒரு க்ஷண நேரம் அந்தக் காற்று வியாபகமாயிருக்குங்கால், ஜீவர்களுக்கு இது வரையில் தாங்களறியாததான கடவுள்விளக்கம் உண்டாகும். மேற்படி காற்று வியாபகம் ஏகதேசமு மில்லாவிடில் ஜீவர்கள் விஷக்காற்றினால் சதா வியாபகமடைதலில், இந்தச் சொற்ப ஜீவிப்பும் விருத்திக்கு வர மாட்டாது. அமுதக்காற்று வியாப்பியமன்றி வியாபகமாயிருக்குங் காலத்தில், ஜீவர்களுக்கு அறிவுவிளக்கம், மனநெகிழ்ச்சி, இந்திரிய அடக்கம், ஈசுரபத்தி முதலியவும் விளங்கும். அக்காலத்தை

அமுதக்காற்றின் வியாபக காலமென்று அறியவேண்டும். இதன்றி இருண்மையமாய் முன்பின் தோன்றாது அறிவின்றி யிருக்குங்காலம் விஷக்காற்று வியாபகமாயிருக்குங் காலமென்று அறியவேண்டும்.

அண்டத்தில் சந்திராதித்த கிரஹண தோஷம்போல் இப்பிண்டத்தில் கிரஹண தோஷம் யாதெனில்:- பிண்ட புருஷனுக்குப் புறமாகிய கரணமென்றும் சந்திரனாகிய தோற்றும் அறிவு, இரும்பில் துரிசு ஏறுவதுபோல், விஷயவாசனையில் அழுந்தி ஏகதேசப் பிரகாச விளக்கமுடையதுதான் சந்திரகிரஹணம் இஃதறியாமை. சூரிய கிரஹணமென்பது:- அகப்புறமாகிய ஜீவனென்னும் சூரியனாகிய தோற்றுவிக்கும் அறிவு, செம்பிற் களிம்பேறுவதுபோல், விஷயவாசனைமயமாய் யாதுந் தோன்றாது அறிவின்றி நிற்குங்காலம் சூரியகிரஹணம். இஃது மாயாசிருட்டிக்கு இயற்கையானாலும், இரும்பையும் தாமிரத்தையும் பரிசனாதி வேதிகளால் ரவுப்பியாதி ஏமங்கள் செய்வது போல், நன்முயற்சியாகிய ஜீவகாருண்ய மயமாய்ப் பரிச்சியஞ் செய்தால் மேற்படி துரிசு நீங்கும். மேலும் ஆசாரியர் அனுக்கிரகத்தாலும் நீங்கும். இது பிண்டாண்ட கிரஹண சித்தாந்தம்.

### 4. அண்ட பிண்ட திசைகள்

1. வடக்குப் பாகம், நக்ஷத்திரப் பிரகாசம்.
2. கிழக்குப் பாகம், சந்திரப் பிரகாசம்.
3. மேற்குப் பாகம், சூரியப் பிரகாசம்.
4. தெற்குப் பாகம், அக்கினிப் பிரகாசம்.

கிழக்கு - திக்கை நோக்கித் தியானம் செய்கின்றது போகசித்தியைப் பெறுகிறதற்கு.

மேற்கு - சொர்ண சித்தியைப் பெறுகிறதற்கு.

தெற்கு - சாகாக்கலையை ( நித்திய தேகத்தையும் ஞானசித்தியையும்) பெறுகிறதற்கு.

வடக்கு - சித்தசுத்தியைப் பெறுகிறதற்கு.

வடக்கு காற்புறம், தெற்கு தலைப்பாகம், இதனால்தான் தெற்கு ஞானத்தில் சிறந்தது; வடக்கு அஞ்ஞானத்தில் அழுந்தியது.

தலை கீழ், கால் மேல் என்பதற்கு நியாயம்:-

அடி கீழ், முடி மேல். அடி தலை, முடி கால். தலை கிழக்கு, கால்மேற்கு. கிழக்கு தாழ்ந்தது, மேல் திக்கு உயர்ந்தது. மேலும் இவற்றை அனுபவத்தால்அறிக.

பிண்ட திசை: கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்பவற்றில் தலை தெற்கு. கால் வடக்கு. நெற்றி கிழக்கு. முதுகு மேற்கு.

## 5. அண்ட பிண்ட அமுதங்கள்

| | |
|---|---|
| *அண்ட அமுதம் 4 -* | *பிண்ட அமுதம்4* |
| *அக அமுதம்* | *அக அமுதம்* |
| *அகப்புற அமுதம்* | *அகப்புற அமுதம்* |
| *புற அமுதம்* | *புற அமுதம்* |
| *புறப்புற அமுதம் - மழை.* | *புறப்பற அமுதம்- - வியர்வை* |

## 6. மழை

புகையின் மூன்றாவது கலையின் சீதளசக்தியினால் மழையுண்டாகின்றது. இதுபோல் சூரியகிரண உஷ்ண ஆவியாகிய புகை ஒஷதிகளிலும் நீரிலும் பாரிலும் பொருப்பிலு முள்ள திரவசக்தியைக் கிரகித்து, வாயுமண்டலத்தில் சேர்த்து, மேலுங்கீழும் உஷ்ணம் நிரம்ப, மத்தியிலுள்ள திரவஅணுக்கள் புழுங்கி நீராய், காலபேத வண்ணம் வாயுவால் பிரேரிக்கப்பட்டு அசைக்கும்போது, கீழு மேலுமுள்ள உஷ்ணவாயு தடிப்பு விலகும்போது, மின்னலாகிய பிரகாசமும், நெருங்கி யொன்றுபடும்போது சத்தமாகிய இடியும், அத்தொனியால் படலம்போல மூடியிருந்த காராகிய மேகம் விலகி வாயுவால் கலங்கிய போது மழையும் உண்டாகும். இதன்றி, மேகம் கடல் ஜலத்தை உண்டு மழைபெய்வ தென்பது பொய்.

# 7. முச்சுடர்
# (சந்திரன் சூரியன் அக்கினி)

சூரியன் ஆணாகவும் சந்திரன் பெண்ணாகவும், வலம் இடம் சத்தி சிவமுமாக உடையது மருட்டேகம்.* வலம் சந்திரனாகிய சத்தியாயும் இடம் சூரியனாகிய சிவமாயுமிருப்பது அனுபவம். திரிசிய அனுபவத்திலுள்ள இடம் வலமாகவும் வலம் இடமாகவும் அனுபவந் தோன்றும்.

**சந்திர, சூரிய, அக்னியின் கூட்டுறவால் 7 நாட்கள் தோன்றும் முறை:**

மேலும், சூரியன் அக்கினியோடு கூடினால் **திங்களும்**, சந்திரன் அக்னியோடு கூடியபோது பானுவும் **(ஞாயிறு)**, சூரியன் மதியோடு கூடிய போது பௌமனும் **(செவ்வாய்)**, சந்திரன் பானுவொடு கூடியபோது சௌமியனும் **(புதன்)**, சூரியன் சௌமியனொடு கூடியபோது குருவும் **(வியாழன்)**, சந்திரன் பௌமனொடு கூடியபோது பிருகுவும் **(வெள்ளி)**, சூரிய சந்திரர்கள் அக்கினியோடு கூடிய போது மந்தனும் **(சனி)** தோற்றும் ஆக 7

மேற்படி சூரியனுக்குக் கலை 16 மேற்படி கலை 16-ல் சந்திரனுக்குக் கலை 4 போக, இருப்பு கலை 12. சூரியன் காரியவுருவன். சந்திரனுக்குக் கலை 16 மேற்படி கலை 16-ல் தாரகைகளுக்குக் கலை 4 போக,, சூரியனால் கொடுத்த 4 கலையுஞ்சேர்த்து சந்திரனுக்குக் கலை 16. சந்திரன் காரியகாரண உருவன். சகலன் சூரியன் கேவலன் சந்திரன். அனுபவத்தில் இடம் வலம் போல் மாறும். பிரமத்துவம் சூரியனிடத்திலும், விஷ்ணுத்துவம் சந்திரனிடத்திலும் உள்ளன. அக்கினிக்குக் கலை 64. இப்போது எட்டுக் கலையோடு காரண உருவனாய் மற்றைக் கலைகளை உள்ளடக்கி நீருறு தீப்போல் எங்குமுடையவன். ஆகக் கலை 96. மேற்படி 96 கலையே 96 தத்துவமாய்ப் பிண்ட வடிவாயிற்று.

அக்கினிகலை 64-ன் குணங்கள் சைவத்தில் 64 திருவிளையாடல்கள் ஆகவும், உண்மை அடியார்கள் 63

* சிவ சதியாய் உடையது மருள்தேகம்?

அதிதம் ஒன்று ஆகவும் வழங்குகின்றன. சந்திரகலை 12-மே வைஷ்ணவ பரத்தில் துவாதச ஆழ்வார்களாக வழங்குகின்றன. மற்ற 20 கலையும் கௌமாரம், பாசுபதம், மஹாவிரதம், சாத்தேயம், காணாபத்தியம், காபாலம், சௌரம், மகம் மதியம், பௌத்தம், கிறிஸ்துவம் முதலிய சமயங்களில் வழங்குகின்றன. இவற்றின் அனுபவங்களைக் குரு முகத்தில் அறிக.

மேற்குறித்த சோம சூரியர்கள் ஒன்றுபடுவது அமாவாசை. ஒன்றுபட்ட சோமன் ஒவ்வொரு கலையாகச் சூரியனிடத்திலிருந்து விடுபட்டு மேலேறிப் பகிரண்டத்தில் செல்லும்போது 16 கலையும் பூர்த்தியாய்ப் பிரகாசிப்பது பௌர்ணமி. பகிரண்டத்திலிருந்து பிரமாண்டத்திற்கு வியாபகமாகும்போது, சூரியஉஷ்ணம் சோம கலையை ஒவ்வொன்றாகக் கிரகிக்க ஒருகலையோடு பானுவுடன் சேர்தல் அமாவாசை. மேற்படி சோமகலையைப் பானு கிரகிக்கா விட்டால் இவ்வுலகம் ஜீவிக்காது. சூரியன் பிரமாண்ட பகரண்ட வியாபகி, சந்திரன் பகிரண்ட பிரமாண்ட வியாபகி. சூரியவியாபகம் தோன்றாது, சந்திரவியாபகந் தோன்றும்.

## அனுபவத்தில் சத்தி சிவம்

சூரியன் அக்கினியோடு கூடியபோது சந்திரனாம். சந்திரன் அக்கினியோடு கூடியபோது சூரியனாகும். சூரியன் ஆணாகவும் சந்திரன் பெண்ணாகவும், வலது பாகம் சிவமாகவும் இடது பாகம் சத்தியாகவும் வழங்கி வருவது மருட்டேக நியாயம். வலது பாகம் சத்தியாகவும் இடது பாகம் சிவமாகவு மிருப்பது அனுபவம்.

| சந்திரன் | சூரியன் | அக்கினி |
|---|---|---|
| ரூபாரூபி | ரூபி | அரூபி |
| காரியகாரணன் | காரியன் | காரணன் |
| சோபாமாத்திரன் | ஒளிமாத்திரன் | பிரகாச மாத்திரன் |

| | | |
|---|---|---|
| சந்திரன் | சூரியன் | அக்கினி |
| சுடாத தன்மை | சுட்டுஞ்சுடாத தன்மை | சுடுந்தன்மை |
| கலை 12, தாரகை கலை4 | கலை 16 | கலை64 |
| அர்த்தவடிவன் | வட்டவடிவன் | பூர்ணவடிவன் |
| பிரமாண்ட பகிரண்ட வியாபகன் | பிரமாண்ட வியாபகி | வியாபகி எங்கும் வியாபகி |
| பச்சை வெண்மை கலந்தமேனி | பஞ்சவர்ணம் | சுவர்ணம் |
| மனஅறிவு சபை | ஜீவஅறிவு சபை | ஆன்மஅறிவு சபை |
| மனஒளியே பதி | ஜீவஒளியே பதி | ஆன்மஒளியே பதி |

பஞ்சவர்ணங்களாவன :-

| | | |
|---|---|---|
| வெண்மை | ஆதிசத்தி | அனுக்கிரகம் |
| பச்சை | பராசத்தி | திரோபவம் |
| செம்மை | இச்சாசத்தி | சம்மாரம் |
| கருமை | கிரியாசத்தி | ஸ்திதி |
| பொன்மை | ஞானசத்தி | சிருஷ்டி |

### 8. சிருட்டி நியாயம்

ஆகாசம் அனாதி. அதுபோல் அதற்குக் காரணமான பரமாகாச சொரூபராகிய கடவுள் அனாதி. அனாதியாகிய ஆகாசத்தில் காற்றும் அனாதி. அனாதியான வெளியில் காற்று எப்படி அனாதியோ, அப்படிக் கடவுளிடத்தில் அருட்சத்தி அனாதியாய் இருக்கின்றது. ஆகாயத்தில் அணுக்கள் நீக்கமற நிரம்பியிருக்கின்றன. இது போல் கடவுள் சமுகத்தில்-ஆன்மாகாசத்தில் அணுக்கள் சந்தானமயமாய் நிரம்பி இருக்கின்றன. அந்த அணுக்களுக்கு ஆன்மாஎன்றே பெயர்.

பூதாகாயத்திலிருக்கும் சாதாரண அசாதாரண அணுக்கள் எழுவகையாய்ப் பிரியும். அவையாவன: வாலணு, திரவவணு, குருவணு, லகுவணு, அணு, பரமாணு, விபுவணு. மேற்படி அணுக்கள் அனந்தவண்ண பேதமாய் இருக்கும்.

இவற்றில் காரியவணு, காரிய காரணவணு, காரணவணு என மூன்றுவகையாய், பக்குவ,அபக்குவ,பக்குவாபக்குவமென நிற்கும். இவைபோல் ஆன்மாகாயமான' கடவுள் சமுகத்தில் ஆன்மாக்களும் மூவகையாய் நிற்கும். யாவையெனில் பக்குவ ஆன்மா, அபக்குவ ஆன்மா, பக்குவாபக்குவ ஆன்மா என மூவகைப்படும். ஆகாயத்திலிருக்கும் அணுக்கள் மூன்று விதமானதற்குக் காரணம் அங்குள்ள காற்றேயாம். அதுபோல் ஆன்மாக்கள் மூவிதமானதற்குக் காரணம் கடவுள் சமுகத்திலுள்ள அருட்சத்தியேயாம்.

அப்படி மூவகையான ஆன்மாக்களுக்கு-அருட்சத்தியின் சமுகத்தில் தோன்றிய இச்சை, ஞானம், கிரியை யென்னும் பேதத்தால் ஆன்மாக்களுக்குத் தேகம் மூன்றுள. யாவையெனில்: கர்ம தேகம், பிரணவதேகம், ஞானதேகம் என மூன்று விதம். அப்படி மூன்று தேகம் உண்டானதற்குக் காரணம்: பூத ஆகாயத்திலுண்டான வாயு பேதத்தினால் சோமசூரியாக்கினி யென மூன்று வகை நிற்பன போலுணர்க. அந்த ஆகாயத்தை விரிக்கில் அனந்த பேதமாம். வாயுவின் பேதம் அதுபோலனந்தம். ஒருவாறு அறுபத்து நான்குகோடி பேதம். இவற்றில் அமுதபாகம், விஷபாகம், பூதபாகம், உஷ்ணபாகம் எனப் பலபேதப்படும்.

மேற்படி அணுக்கள் அனந்த வண்ண மாதலால், அனந்த அணுக்கள் சேர்ந்து ஒரு வித்தாய், இவ்வித்து திரவஅணு சம்பந்தமாய் குரு அணுவோடு சேரும்போது, பூதகாரிய அணுவாகிய கிரண உஷ்ணத்தால் ஜீவிக்கும். ஜீவித்த ஒஷதி முதலியன இந்த நியாயத்தால் வர்ணம் ருசி முதலிய பேதப்படுகின்றன. இவ்வண்ணமே பௌதிக பிண்ட அணுக்கள் காரண சூரிய உஷ்ணமாகிய ஜீவ உஷ்ணத்தால் வடிவமாய், பரமகாரணதயையால் ஜீவிக்கின்றன. சிலகாலத்தில் வித்துக்களாதியாம். சிலகாலத்தில் விருக்ஷமாதியாம். எல்லாவற்றிற்கும் ஆதியாயுள்ளது பூதகாரிய அணுவாகிய சூரிய கிரணமே யாம்.

இவ்வண்ணமே, ஒரு காலத்தில் கடவுள் பிரேரகத்தால் அருட் சத்தி ஆன்மாகாசத்தில் விசிரிம்பிக்க, ஆன்மாக்கள் வெளிப்பட்டுப் பஞ்சகிருத்தியத் தொழிற்படும். மேற்படி ஆன்மாக்கள் வெளிப்பட்ட அக்கணமே, மேற்படி ஆகாயம் சந்தானமாதலால், ஆன்மாக்கள் நிரம்பி நிற்கும். ஆதலால் பஞ்சகிருத்தியம் எக்காலத்தும் தடையுறாது. ஆன்மாக்கள் தாழ்ந்த கதியடைவது அனாதியியற்கை யல்ல; ஆதி செயற்கையே யாம். ஆணவம் அனாதி யியற்கையே யாம். இதன் இரகசியம் குருமுகமாயறிக.

## 9. பக்ஷபேதமும் சிருஷ்டியும்

சிருஷ்டிகள் பக்ஷபேதத்தால் அனந்தவகை. பக்ஷமாவன அணு பக்ஷம், பரமாணுபக்ஷம், சம்புபக்ஷம், விபுபக்ஷம், பிரகிருதிபக்ஷம்- ஆக 5. இவற்றில் சம்பு, விபு- இவ்விரண்டிற்கும் அபக்குவமில்லை. மற்ற மூன்றிற்கும் பக்குவ அபக்குவ முள. இதற்குப் பிரமாணம். "அடர்மலத்தடையால் தடையுறும்", "தடையுறாப்பிரமன்" என்னும் திருப்பா சுரங்களின் உள்ளக்கிடையா லுணர்க. மேற்படி பக்ஷ சிருஷ்டி விசித்திரங்காளவன: அணுபக்ஷ அபக்குவ சிருஷ்டி ஓஷதிகளாலும் பௌதிகங்களாலும் ஆகார மூலமாய் ஸ்திரீ புருஷ சம்பந்தத்தோடு உண்டாக்குவது. மேற்படி பக்குவ சிருஷ்டியாவது புருஷன் ஸ்திரீயைப் பார்ப்பதுபோல் தன் அஸ்தத்தால் ஸ்திரீயைத் தடவி ஊன்றி நோக்கிப் புருஷனோடு தேகசம்பந்தஞ் செய்வித்து உண்டாக்குவது. பரமாணுபக்ஷ அபக்குவ சிருஷ்டி தேகத்தைக் கரத்தால் பரிசித்து ஊன்றிப் பார்த்த உடன் கருத்தரித்தல். மேற்படி பக்ஷத்தில் பக்குவம் கண்ணால் பார்த்த உடனே புணர்ச்சியன்றிக் கருத்தரித்தல். சம்புபக்ஷம் வாக்கினால் சொன்னவுடன் கருத்தரித்தல். பிரக்ருதி பக்ஷத்தால் சங்கற்பித்த முன்றேமுக்கால் நாழிகைக்குள் பிண்டம் கீழ்த்தோன்றுதல். விபுபக்ஷ சிருஷ்டி பார்த்தவுடன் திரண முதலானவற்றையும் நரனாகச் செய்வித்து அநேக விசித்திரங்கள் உண்டுபண்ணுவது.

மேற்படி சிருஷ்டிகள் பல; வேதாகமங்களிலேயும் பலபட விரிந்தன.

இந்து வேதத்தின் முக்கியாமிசத்தை... கிறிஸ்தவர்கள் 7 நாளில் இந்த உலகத்தைப் படைத்ததாகச் சொல்லுவதின் உண்மை- அது வல்ல- யாதெனில்: சில அனுபவ விஷங்களை அது விரிக்கின்றது. கைந்நொடிப்பொழுதில் 60-ல் 7 பாகம் ஆகிய 7 கலையில் முடிந்தது. மேற்படி கலைகளாவன பெண்பாகத்தில் 4, ஆண்பாகத்தில் 3- ஆக 7. ஒவ்வொரு கலையில் தாது அணுவாய்ச் சேர்ந்து 7-ல் கலையில் கரு சம்பூர்ணாய்ச் சப்த தாதுவுங் கூடிய பிண்டமாகும்.

### கலை

பெண்பாகத்தில் கலை 4, ஆண்பாகத்தில் கலை 3, ஆகக் கலை 7, ஒவ்வொரு கலையில் ஒவ்வொரு தாதுஅணுவாய்ச் சேர்ந்து 7-வது கலையில் கரு சம்பூரணமாய்ச் சப்த தாதுக்களும் கூடியபின் பிண்டமாகும்.

### சிருஷ்டி வகை

சிருஷ்டிவகை 5 : அணுபக்ஷம், பரமாணுபக்ஷம், சம்புபக்ஷம், விபுபக்ஷம், பிரகிருதிபக்ஷம், இவற்றில் சம்பு, விபு, தவிர மற்றவைகளுக்குப் பக்குவம், அபக்குவம் உண்டு. அணுபக்ஷத்தில் அபக்குவ சிருஷ்டியாவது ஔஷதிகளையும் பவுதிகங்களையும் உள்ளுக்குக் கொடுத்து, ஸ்திரீ புருஷ சம்பந்தத்தோடு பிரஜோத்பத்தி செய்வது; பக்குவ சிருஷ்டி புருஷன் ஸ்திரியைப் பார்ப்பதுபோல் அஸ்தத்தால் தடவி ஊன்றிப் பார்த்து, தேக சம்பந்தம் செய்து ஸந்தானத்தை உண்டாக்குவது. பரமாணுபக்ஷ அபக்குவ சிருஷ்டியாவது புருஷன் தேகத்தைத் தடவிப்பார்த்த உடனே கருத்தரித்தல்; பரமாணுபக்ஷ பக்குவ சிருஷ்டியாவது கண்ணால் பார்த்தவுடன் கருத்தரித்தல். சம்புபக்ஷ அபக்குவ சிருஷ்டி வாக்கினால் சொன்னவுடன் கருத்தரித்தல். சம்புபக்ஷ பக்குவ

சிருஷ்டியாவது சங்கற்பித்த மூன்றே முக்கால் நாழிகைக்குள் கருத்தரித்துக் கிழே பிண்டம் வெளிப்படல். விபுபக்ஷமாவது பார்த்தவுடன் திருண முதலானவற்றை மனுஷியனாகச் செய்து, அதில் அனேக விசித்திரங்கள் செய்தல்.

## 10. மும்மலபேதமும் சிருட்டியும்

ஆணவம் மாயை கன்மம் என மலம் மூன்று. இதில் பக்குவம் 3, அபக்குவம் 3 ஆக 6. இவை ஒவ்வொன்றும் மும்மூன்றாக விரிதலின் 18 ஆம். இந்தக் கன்ம பேதத்தால் அருட்சத்தியின் சமுகத்தில் எழுவகைத் தோற்ற முண்டானது. மேற்படி கன்ம மலத்தால் சிருட்டி உண்டாகும் விவரம் ஒருவாறு:- பக்குவ ஆணவம், பக்குவமாயை- இவ் இரண்டினாலும் விஞ்ஞானகலாபேதம். அபக்குவமாயை, அபக்குவகன்மம், அபக்குவஆணவம் கூடியது. தேவ நரக பைசாசங்கள். பக்குவமாயை, அபக்குவ கன்மம் கூடியது ஜீவர்கள். அபக்குவகன்மம், அபக்குவகன்ம ஆணவம், அபக்குவகன்ம மாயை - இவை கூடியது தாவர உயிர்கள். இதை விரிக்கில் பெருகும்.

## ஆணவம் , மாயை, கன்மம்

ஆணவம், மாயை, கன்மம்-இம்மூன்றில் பக்குவம் 3, அபக்குவம் 3 ஆக 6-ல் ஒவ்வொன்றில் மும்மூன்றாக விரிந்தவை 18. பக்குவ ஆணவம் பக்குவமாயை யிவ்விரண்டும் தனித்து நிற்பது விஞ்ஞானகலர். சுர, நரக. பைசாசங்கள். அபக்குவ மாயை, அபக்குவகன்மம், அபக்குவ ஆணவம் கூடித் தடித்தது. ஜீவர்கள் பக்குவமாயை அபக்குவகன்மம். தாவரங்கள் அபக்குவகன்மம் அபக்குவமாயை அபக்குவஆணவம் -இந்த மயமாக நிற்றல்.

## 11. எழுவகைப் பிறப்பு

இந்தத் தேகத்திற்குப் பிறப்பு 7 உண்டு. அதுபோல் ஏழுவகைப் பிறப்பிலும் ஒவ்வொரு பிறப்பிற்கு எவ்வேழு பிறப்புண்டு. அந்த எவ்வேழு பிறப்பும் ஒவ்வொன்றில் அனந்தமாய் விரிந்த யோனி பேதங்களின் விரிவெல்லாம்

தோன்றி மேலேறி மறுபிறவி உண்டாம். ஒவ்வொரு பிறவியும் எந்தக் கற்பத்தில் நஷ்டமடைகின்றதோ அந்தக் கற்பகாலம் வரையில் தோற்ற மில்லாமல் மண்ணில் மறைந்திருந்து, மறுகற்பத்தில் தோன்றி, இவ்விதமாகவே மற்றயோனி களிடத்திலும் பிறந்து, முடிவில் இத்தேகங் கிடைத்தது.

இத்தேகத்திற்கும் ஏழு பிறவி யுண்டு. யாதெனில்:- கர்ப்பத்தில் ஐந்து மாதம் வரையில் குழவி யாயிருப்பது ஒன்று, அவயவாதி உற்பத்திக் காலம் ஒன்று, பிண்டம் வெளிப்பட்ட காலம் ஒன்று, குழந்தைப் பருவம் ஒன்று, பாலப்பருவம் ஒன்று, குமாரப்பருவம் ஒன்று, விருத்தப்பருவம் ஒன்று ஆகப் பிறவி 7. இவ்வாறே தாவர முதலியவற்றிற்கு முள. மேலும், ஸ்தூலப் பிறப்பு 7, சூட்சுமப் பிறப்பு 7, காரணப்பிறப்பு 7. ஆதலால், மேற்குறித்த ஸ்தூலப்பிறப்பு, சூட்சுமப்பிறப்பு யாதெனில்: ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, ஜாக்கிரத்தில் சொப்பனம், ஜாக்கிரத்தில்சுழுத்தி, ஜாக்கிரத்தில் சொப்பனம், ஜாக்கிரத்தில் சுழுத்தி, சொப்பனத்தில் சொப்பனம், சொப்பனத்தில் சுழுத்தி- ஆக பிறப்பு7. காரணப்பிறப்பு-மனோ சங்கற்பங்களெல்லாம் பிறவி. ஆதலால் மேற்குறித்த பிறவிக்குக் காரணம் நினைப்பு மறைப்பு. அது அற்றால் பிறவியில்லை. எப்படி அறுமெனில்: பரோபகாரம் சத்விசாரம்--இவ்விரண்டாலும் மேற்குறித்தது நீக்கிச் சிவானுபவம் பெறலாம்.

ஜென்மம் : –

பூர்வஜென்மம் என்பது கர்ப்பகோளவாசம்.
உத்தரஜென்மம் என்பது ஜனனகாலம்.

12. ஆண்பெண்–பெண்ணாண்

ஆணுக்குள் பெண்ணும் பெண்ணுக்குள் ஆணும் இருக்கும்விதம் எவ்வாறெனில்:- பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாசம், பிரகிருதி, ஆன்மா வென்னும் 7-ம் கூடி, சுக்கில சுரோணித சம்பந்த சப்த தாதுவாய், சிருஷ்டிக்குக் காரணமாயின. ஆதலால் ஆண்பாகம் சேராது பெண்ணு

ருவப்படாது. பெண்பாகஞ் சேராது ஆணுருவப்படாது. மேலும் ரூப பேதத்தைப் பெண் ஆண் என்பது அறியாமை. மேலும் அறிவினுயர்ச்சி தாழ்ச்சியாலும், சிருஷ்டிக்குக் காரணமான வித்து தங்குவதற்கு க்ஷேத்திரமானதாலும் ஒருவாறு உருவத்தால் கொள்ளலாம்; அனுபவத்தால் கொள்ளப்படாது. அறிவினுயர்ச்சி தாழ்ச்சியென்பது ஜீவஅறிவாகிய மனஅறிவு பெண்ணிடத்தும் ஆன்மஅறிவாகிய அறிவு ஆணிடத்தும்உள்ளது. மேலும் மன அறிவு புத்தி அறிவு என்றும் சொல்லக்கூடும். ஆதலால் உருவம் குறிப்பது அவசியமல்ல. மேலும் ஆகாசத்தில் பிருதிவி தோன்றவது போல் ஸ்திரீ பாகமாகிய பிருதிவியில் ஆகாசமுந் தோன்றும். ஆனதால் அனுபத்தில் தெரியும்.

## 13. ஆண் பெண் பருவம்

| | |
|---|---|
| ஆண்பிள்ளைப்பருவம்5 | பெண்பிள்ளைப்பருவம்8 |
| சைசவம்5 வரையில் | பேதை 7 வரையில் |
| வாலிபம்15 வரையில் | பெதும்பை9வரையில் |
| கௌமரவம் 30 வரையில் | மங்கை 12 வரையில் |
| யௌவனம் 40 வரையில் | மடந்தை16 வலையில் |
| வார்த்திகம் 40-க்குமேல் | அரிவை 25 வரையில் |
| | தெரிவை 30 வரையில் |
| | பேரிளம்பெண் 40 வரையில் |
| | விருத்தை 40-க்கு மேல் |

## 14. கரு உற்பத்தி

கருத்தோன்றும் சுக்கில நியாயம் யாதெனில்: சுக்கிலம் இரண்டரை வராகனெடை யளவா யிருக்கும். அதில் விக்ஷபாகமாகிய சத்தி 1; சாதாரண மென்னும் பூதமாகிய அறிவு1; அசாதாரண அமுத மாகிய விந்து அரை-ஆக-இரண்டரை. இதுபோல்பெண்பாலிடத்தும்சுரோணிதமுளது. மேற்கண்ட சுக்கில சுரோணித மிரண்டினும் கடவுள் ஆவியுள்ளது, கோசத்தின் முன் விஷம், அதை அடுத்து பூதம், அதற்கு மேல் அமுதம் உண்டு. இவ்வாறு பெண்பாலிடத்து முண்டு. முன்னுள்ள விஷபாகம் புணர்ச்சிக் காலையில்

வெளிப்பட்டால் தேகநஷ்டம்; பூதம் வெளிப்பட்டால் வியாதி: அமுதம் வெளிப்பட்டால் சந்ததி விருத்தி. கடவுளருளால் காலச்சக்கரம்போல் ஏகதேசத்தில் கோச உபஸ்தங்களின் அமுதபாக நாடியை முன்னே தள்ளி, விஷாதிகளைப் பின்னே சேர்த்துக் கருத்தரிக்கச் செய்விப்பார். இந்த நியாயத்தால் இடைவிடாது புணருகிறவர்களுக்குக் கர்ப்பமில்லை. மேலும், விந்துவளம், இடவளம், வன்னி, கிருமி, மோக விசேடம் - இவற்றாலுங்கர்ப்ப மில்லை.

சுக்கிலம் உண்டாவதற்குக் காரணம்:- தினம் ஆகாரங் கொண்டால் அவ்வாகாரம் மார்பிடத்தில் ஓர் தட்டில் தங்கும். அந்தத் தட்டின் மேல் கடவுள் கடவுளி என்றிரண்டாகி யிருக்கிறது. உண்ட அன்னத்தை இரண்டரை நாழிகையில்- அந்த அன்னத்திலுள்ள அமுதைப் பிரித்து, ஊட்டவேண்டிய தத்துவத்திற்கு ஊட்டுகின்றது. மறுபடியும் ஐந்து நாழிகைக்குள் மேற்படி அன்னத்தினது மத்திய தரமாகிய நெகிழ்ச்சியைக் குறித்துச் சுக்கிலமாக்கி, இரண்டரை வராகனெடையில் கோசநுனியில் ஒன்றும் நாபியில் ஒன்றம் பிரமரந்திரத்தில் அரையுஞ் சேர்த்து , மற்றவைகளைக் கொண்டு அங்கங்கு விளக்கத்தை யுண்டு பண்ணி ஈளை குரும்பை நகத்துாசு தொப்புளழுக்கு கண்பீளை முதலானஅழுக்கை வெளிப்டுத்து கின்றது. மேற்படி அன்னத்தை ஏழரை நாழிகைக்குள்- அதிலுள்ள திரவாம்சத்தைப் பிரித்து, உதிரமாக்கி யூட்டுகின்றது. ஏழரைக்குமேல் மேற்படி சக்கையை மலபாகத்தில் தள்ளி விடுகின்றது. இதுபோல் எந்த வஸ்துக்களையும் பிரிக்கின்றது. ஆதலால், ஆகாரங்கொண்ட ஏழரை நாழிகைக்கு மேல் ஆகாரங் கொள்ள வேண்டும்.

### சுக்கில சுரோணிதம்

சுரோணிதப் பையிடத்தில் மூன்றுமணி சேர்ந்த கொத்து 1 வலது புறத்திலும், நான்கு மணி சேர்ந்த கொத்து 1 இடது புறத்திலும் இருக்கின்றன. சுரோணித சுக்கிலம் கலந்து கர்ப்பந் தரிக்கின்ற காலத்தில், மூன்று சேர்ந்த கொத்தில் சம்பந்தப் பட்டால் ஆண் குழந்தையும்நான்கு சேர்ந்த கொத்தில்

சம்பந்தப்பட்டால் பெண் குழந்தையும் பிறக்கும். புணர்ச்சிக் காலத்தில் வல்து புறம் சாய்வாகப் புணர்ந்தால் ஆணும், இடதுபுறம் சாய்வாகப் புணர்ந்தால் பெண் குழந்தையும் பிறக்கும்.

## 15. சப்த தாதுக்கள்

ஆணில் 3, பெண்ணில் 4. ஆணில் மூன்றாவன:- ஆகாசம், பிரகிருதி, ஆன்மவுணர்ச்சி- இவைகள் ஒருமித்துச் சுக்கிலமாகத்தடித்துக் கோசத்தடியல் செம்பரத்தம்பூவிதழ் மூன்று மொன்றாயடுக்கியது போலிருக்கும். பெண்ணிடத்தில் நான்காவன:-பிருதிவி அப்பு, தேயு, இயமானன் என்னும் வாயு- ஆகநான்கும் ஒருமித்துப் பல்லிமுட்டைபோல் 4 பாகமாகப் பிரிந்து ஒரே வண்ணமாய் யோனிக்குள் இருக்கும். ஆக 7-ம் கூடி ஒருமித்துச் சுக்கில சுரோணித சம்பந்ததப்பட்டுப் பிண்டமாம். இது சப்த தாது. மேற்படி தாதுக்களின் பெயர் தோல், அஸ்தி,தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், இரசம்- ஏழு. மேற்படி சத்துக்கள் ஆணிடத்துள்ள இடங்கள் மூளை, தொப்புள், லிங்கத்தடி; பெண்ணுக்குள்ள இடங்கள் மூளை, தொப்புள், உபஸ்தத்தடி, ஸ்தனத்தின் கிழ். புணர்ச்சிக் காலத்தில் இந்தச் சத்துச் சேர்ந்து வெளிப்பட்டால் கர்ப்பமுன்டாம்.

## தேக சத்து

ஆண் பிள்ளையின் தேகத்தில் 3 இடங்களில் சத்துண்டு. அவை, 1. மண்டையின் மூளை, 2. கொப்பூழ், 3. இலிங்கத்தின் கீழ்புறம் . பெண் பிள்ளைக்குத் தேகத்தில் சத்து 4 இடங்களில் உண்டு. அவை, 1. மண்டையின் மூளை, 2 ஸ்தனங்களின் கிழ், 3. கொப்பூழ், 4. குய்யம். தேகத்தைத் திறந்து வைத்திருத்தல் ஆகாது; சத்துக் காய்ந்துபோம்.

## 16. பிண்ட இலக்கணம்

தலை அண்டம், மார்பு முதலானவை பிண்டம். அண்டத்தில் பிண்டம் புருவமத்தி, அண்டத்தி பண்டம் பிரமரந்திரம். இதில் சோம சூரியாக்கினி பிரம விஷ்ணுக்கள் இருக்குமிடம்: நேத்திரம் புருவமத்தி, அண்ணா, பிரமரந்திரம். இதில் பிரகாசமாயும்அறிவாயும் பிராணவாயு வாயும்.......

இருக்கின்றது. பிண்டத்தில் பிண்டம் இடுப்புக்குங்கீழ் பாதபரியந்தம்.பிண்டத்தி லண்டம் பீசம், பிண்டம் வயிறு..... மேற்படி பிண்ட ஸ்தானத்தில் கர்த்தாக்களிருக்கு மிடம் கோசம், தொப்புள், மார்பு: இவர்கள் வண்ணம், நாடி, உஷ்ணம், காற்று, குறி முதலிய பேதங்களாம். ஆதாலல், பிரம விஷ்ணு ருத்திர பேதங்கள் அனந்த கோடி. அண்டத்தைதப் பார்க்கிலும் பிண்டம் விசாலமுள்ளது. இது போலவே பிரமாண்ட நியாயம்.

## ஜீவஸ்தானம்

இந்தத் தேகத்தில் ஜீவன் இருக்கின்ற ஸ்தானம்5. அதில் முக்கிய ஸ்தானம்2. அவை யாவை? கண்டம், சிரம் சிரத்திலுள்ளது பரமாத்மா என்னும் சாமானியஜீவன்; இதுஇறக்காது. கண்டத்திலுள்ளது ஜீவாத்மா என்னும் விசேஷ ஜீவன். இது இறந்துவிடும். மேற்படி தேகத்தில் பிரமபேதம் கீழும் மேலு மிருப்பதால், நாமடைய வேண்டிய பதஸ் தானங்கள் எவை என்றால்; அவை கண்டமுதல் உச்சி வரையில் அடங்கியிருக்கின்றன. மேற்படி பதங்களாவன சொர்க்க பூர்வமாக சதாசிவபத மீறாக உள்ளன. இதற்கு மேல் நாதாதி சுத்த மீறாக வுள்ளன. கைலாசாதி பதங்கள் உந்திக்கு மேல் கண்ட மீறாகவுள்ளன; இது சாதாரணபாகம். நரக இடமாவன உந்தி முதல் குதபரியந்தம். கர்ம ஸ்தானம் குத முதல் பாத மீறா கவுள்ளது. இவைகளில் பிரமாதிப் பிரகாச முள்ளது. அனுபவிப்பது கண்டத்தில் இந்தத் தேகத்தில் எமனிருக்குமிடம் குதமாகிய நரகஸ்தானத்துக்கு இடது பாகம். மேற்படி தேகத்தில் ஆன்மா தனித்திருக்கும்; ஜீவன் மனமுதலிய அந்தக்கரணக் கூட்டத்தின் மத்தியிலிருக்கும்.

## பூர்வோத்திரம்

பிண்டத்தில் பூர்வமென்பது தலை, உத்தரமென்பது கால். பூர்வ மென்பது பூர்வசம்பந்தத்தால் வந்த பெயர். பூர்வஞான மென்பது நெற்றிக் கண்ணால் பார்த்தல். பிண்டத்திற்குக் கிழக்கு முகம், மேற்கு கால், வடக்கு வலதுகை, தெற்கு இடதுகை; கொடிமரம் தொப்புளடி, மேற்படி

மரத்தின்அளவு உண்ணாக்கு கொடி புருவ மத்திக் குள்ளிருக்கும் வபை, பலிபீடம் தொப்புள், நந்தி என்பது பசு ஆணவமலம், மூலாதாரத்தினது உள்ளங்கமே சிவலிங்கம், வாய் வாசல், புருவமத்தி சபை, அறிவே பதி; ஆதி கால், அநாதி தலை; கீழ் தலை, மேல் கால். ஆதலால், பூர்வம், பூர்வபூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் என நான்கு. இதில் பூர்வமென்பது புறப்புறமாகிய நக்ஷத்திரம் போன்ற இந்திரியக் காட்சி. பூர்வபூர்வம் புறமாகிய சசிபோன்ற கரணக்காட்சி. உத்தரம் அகப்புறமாகிய பரிதி போன்ற ஜீவக்காட்சி. உத்தரோத்தரம் அகமாகிய அக்கினி போன்ற ஆன்மக்காட்சி. ஆதலால் அகம், அகப்புறம் புறம், புறப்புறம் என்னும் நான்குமே மேற்கு மேற்குறித்த பூர்வாதி உத்தரோத்தரமென வழங்குவது.

## பிண்ட நியாயம்

அண்டமென்பது கழுத்துக்கு மேல் சிரம். பிண்டமென்பது கழுத்துக்குக் கீழ் பாதம் வரையில். அண்டத்தில் சோமன் சூரியன் அக்கினி பிரமா விஷ்ணு ருத்திரன் இருக்குமிடம் நெற்றி. பிண்டத்தில் பிரமா, விஷ்ணு ருத்திரன் இருக்குமிடம் பிரஜாபதி, தொப்புள், மார்பு. இவர்கள் வாயு வடிவம். இதிற் பிரம பேத மனந்தம். விஷ்ணு ருத்திர பேதம் அனந்தம். அண்டத்தைப் பார்க்கிலும் பிண்டம் விசாலமுள்ளது. இதுபோலவே பிரமாண்ட நியாயம்.

## 17. பிண்டானுபவ இலட்சகணம்

மனித தேகத்தில் கோசத்திற்கு இரண்டரை அங்குலத்திற்குமேல் நாற்சதுரமான ஒரு பையுண்டு. அதில் 16 வயதாளவும் உண்டாகும் இந்திரியம் ஜலமாகச் சேருகின்றது. அதைத்தான் மானசதடாக மென்று சொல்லுகின்றது, 16-க்கு மேல்சேரும் இந்திரியம் உறைந்த அந்த ஜலத்திற்கு மத்தியில் சேருகிறது, அப்படியாகச் சேர்ந்து கொண்டு வரும் இந்திரியம் பொன்வர்ணமாக இருக்கும். அது தாமரைப்பூ வென்று சொல்லப்படும். அதன் மத்தியில் ஒரு ஆவி சாதாரண காற்றுக்கு நூற்றிலொரு பங்காக வெகு நேர்மையாக இருக்கும், அதன் வண்ணம் பொன்மயமாயிருக்கும். அதற்கு அதிஷ்டான

தெய்வம் பிரமனென்று சொல்லப்படும். அந்த ஆவி உண்டாகுங் காலம் அவருக்குச் சகலகாலம் என்றும்அடங்குங், காலம் கேவலகாலம் என்றும் சொல்லப்படும். அந்த ஆவி உண்டாகுங் காலத்தில் செயற்கையானால் கருத்தரிக்கும். அது சிருட்டியென்று சொல்லப்படும்.

அதில் ஆவி யுண்டாகத்தொப்புளிலிருந்து ஒரு நாடி தோன்றி அதன் மத்தியில் முகந்துகொண்டிருக்கிறது.அதன் மூலமாய் அக்கினி யிருக்கின்றது. அது மூலாக்னி என்று சொல்லப்படும். அது தொப்புளிலிருந்து உண்டாவதால் விஷ்ணு தொப்புளிலிருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அதன் மேல் இரண்டரை அங்குலத்தில் உந்திக்கு நேராக உட்பாகத்தில் சதுரமாய் ஒருபையுண்டு. புசித்த அன்னத்தை ஐந்து நாழிகையில் பால்போன்ற ஜலமயமாய் ருத்திர பாகத்திலுள்ள ஆவி பிரித்துஅந்தப் பையில் சேர்க்கின்றது. அதை க்ஷீராப்தி என்று சொல்லுகிறது. அந்தப் பையிலிருக்கும் பால் போன்ற ஜலத்தின் மேல் ஆலிலை வடிவையுடைய வயிற்றி னுட்பாகம் படிவதனால் அதே வண்ணமாக ஒராடை கட்டியிருக்கும். அதை ஆலிலையென்று சொல்கின்றது. அந்த ஆடையின் மேல் ஒரு நரம்பு வட்டமாய்த் தலைதூக்கியிருக்கின்றது, அதைச் சேஷனென்று சொல்லுகின்றது. அந்தக் குண்டலி வட்ட சேஷனென்னும் நாடி மத்தியில் செம்பினது களிம்பு போன்ற பச்சை மேனியாயொரு சத்தியுண்டு. அதை விஷ்ணுவென்றும், அச்சத்தியில் முன் பின் நடுவென்னும் இடத்தில் அதன் காரணச் சத்து பொன் வண்ணமாயும் ருத்திராவண்ணமாயும் குங்கும வண்ணமாயும் மூன்று உள்ளன. அவற்றைச் சீதேவி, பூதேவி, நீளாதேவியெனச் சொல்லுகின்றது. மத்தியில் ஒரு சத்தியிருப்பதால் விஷ்ணுமார்பில் லஷ்மியை வைத்தாரென்பது.

குண்டலிவட்டமான நாடி மத்தியிலுள்ள பச்சை வண்ணமான சத்தியிலிருந்து ஒரு நாடி உண்டாகி இரண்டு தலையாய் விரிந்து ஒரு தலை மேலும் ஒரு தலை கீழும் செல்லுகின்றது. இந்த நாடிகளின் மூலமாய் அந்தச் சத்து மேலே

செல்லும்போது பசுமைவண்ணமாகவும் கீழ்ச் செல்லும்போது பீதவண்ணமாகவும் செல்லுகின்றது. மேலே செல்லுவதினால் ஜீவர்களுக்கு ஜீவிப்பும் அதின்சாரம் கெட்டுக் கீழே செல்வதினால் ஜீவிப்பின்மையும் உண்டாகின்றது. மேலே செல்வதில் ஜீவிப்புண்டாகுவதால் காத்தல் தொழிலை உணர்த்துகின்றது. மேலும் மேலே செல்லுகின்றதை விஷ்ணு வைகுந்தம்போகின்றரென்றும் கீழே செல்லுகின்றபோது க்ஷீராப்தியில் இருக்கின்றாரென்றும் சொல்லுகின்றது. கீழே செல்லும் நாடி முன் சொன்ன தொப்புள் நாடியுடன் கலப்புண்டாகி பிரமனுக்கு உஷ்ணத்தைத் தருகின்றது.

அன்றியும் இந்தச் சதுரமான பையின் வலப்பாகத்தில் ஒரு பையுண்டு. அந்தப் பையில் அக்கினி நிரம்பிக் காரணமாயிருக்கின்றது. அது புசித்த வஸ்துக்களின் சத்தைக் கிரகித்துக்கொண்டு அந்தசத்தை மலமாக இடது பாகத்தில் சேர்த்து விடுகின்றது. கிரகித்த சத்தை முன் சொன்ன க்ஷீராப்திப் பையில் சேர்க்கின்றது.இதை வடவாக்கினி என்று சொல்லுகின்றது. மேலும் இந்த வெள்ளை ஜலத்தை அக்கிரமமின்றிச் சமப்படுத்திப் பிரளயம் வாராது காத்துக் கொண்டிருக்கிறது. இந்த உதராக்கினி குறைவுபட்டு க்ஷீராப்தில் ஜலத்தின் தரங்கெடுமானால் நோயுண்டு.

இந்தப் பையாகிய ஸ்தானத்திற்குமேல் இரண்டரை அங்குலத்தில் இருதயத்தில் மலர்ந்த வாழைப்பூப்போல் ஒரு பையுண்டு. அது வெண்மையாயிருக்கும். இதைக் கைலாய மென்று சொல்லுகின்றது. இந்தப் பையுள் முன் சொன்ன காற்றில் பதினாயிரங் கோடி பங்கிலொரு பங்காக வெகு நேர்மையாய் அக்கினி மயமாய் ஒரு ஆவியிருக்கும். இதற்குக் காரணாக்கினி யென்று பெயர். இவ்வக்கினியைக் காலசந்திரருத்திரமூர்த்தி யென்பர். இப்பையின் அருகில் இடப்புறத்தில் மலர்ந்த தாமரைப்பூப்போல் ஒரு பையுண்டு. அந்தப் பை பசுமை வண்ணமாயிருக்கும். அதற்கும் முன் சொன்ன வெண்மைப்பைக்கும் ஒரு நாடியுண்டு. அதன்

மூலமாய்க் காரணாக்கினி அதிகப்படுத்தாமலும் குறைவு படுத்தாமலும் சமப்படுத்தி வைக்கும். இந்த மலர்ந்த பைக்கும் கீழிருக்கும் க்ஷீராப்திப் பைக்கும் ஒரு நாடியுண்டு. அதன் மூலமாய் அதற்கு உஷ்ணங் கொடுத்து நிலையில் வைக்கும். இதனால் ருத்திரனிடத்தில் விஷ்ணு பிறந்ததாய்ச் சொல்லு கின்றது. இந்த நாடி மூலமாக விஷ்ணு இடமாகிய ஜலத்திலும் பிரமனிடமாகிய இந்திரியத்திலும் உள்ள குற்றங்களைக் கண்டிப்பதால் ருத்திரனைச் சம்ஹார கர்த்தாவென்று சொல்வது.

இந்த அக்கினிப் பையில் குண்டலிவட்ட நரம்பு ஒன்று உண்டு. அதில் மூன்றாகப் பிரியும் கிளையுண்டு. அது மூலம் முதல் பிரமரந்திரம் வரையில் இடம் வலம் நடு வென்று கத்தரிமாறலாய்ப் பிராணஅபானனுக்கு இடங்கொடுத்து ஊடுருவி நிற்கும். இந்நரம்புகளுக்குச் சோம சூரியாக்கினி யென்று பெயர்.

இஃதன்றி இக்குண்டலிவட்ட நரம்பினடியில் இரண்டு நரம்பு வ்லத்தில் அஞ்சு கவருடையதலையாயும் இடத்தில் ஆறு. கவருடைய தலையாய் நிற்கின்றன. வலத்திலுள்ளது கணபதியென்றும், இடத்திலுள்ளது சுப்பிரமணிய ரென்றும் பெயர் சொல்வது. மேற்படி 5 கவருடைய நரம்பிற்கு கீழ் நோக்கி கிருஷ்ணவர்ண மாயிருக்கும். இந்த நரம்பு இடைவிடாது அசைந்து கொண்டிருக்கும். இந்த அசைவால் அக்கினிப் பைக்கு ஆதாரம் உண்டாவதால் இதற்குக் கணபதியென்று பெயர். மேற்படி ஐந்து கவருடைய நாடிக்கு இடம் வலம் இரண்டிலும் சித்திதத்துவம் புத்திதத்துவம் உண்டு. இடத்திலுள்ள ஆறு கவருடைய நாடிக்குக்கீழ் அனந்த வண்ணமான நாடி ஒன்றுண்டு. இதற்கு மயூரமென்று பெயர். இந்த நாடியின் அசைவால் எழுபத்தீராயிரம் (72,000) நாடியும் அக்கிரமமின்றி நிலைபெறுகின்ற படியால், இதற்குச் சேனாதிபதி யென்றும் பெயர். மேலும் வலதுபுறத்து நாடிக்கு அறுபத்திரண்டு மாத்திரையும் இடதுபுறத்து நாடிக்கு நாற்பது

மாத்திரையும் அளவு வித்தியாசமிருப்பதால், இவர்களைச் சகோதரர்களாகச் சொல்வதுமன்றி, மேற்படி ருத்திராம்சமாகவே சொல்லுகின்றது.

இருதயத்திற்குமேல் இரண்டரை அங்குல இடமான கண்டத்தில் மகேசுவரனும், அதற்குமேல் இரண்டரை அங்குல அண்ணாக்கில் சதாசிவமும், அதற்குமேல் இரண்டரை அங்குல உயரத்தில் புருவமத்தியில் விந்துவும், அதற்குமேல் இரண்டரை அங்குலத்தில் நாதமும், அதற்கு மேல் இரண்டரை அங்குலத்தில் பரவிந்துவும், அதற்குமேல் இரண்டரை அங்குலத்தில் பரநாதமும், அதற்குமேல் இரண்டரை அங்குலத்தில் திக்கிராந்தம் அதிக்கிராந்தம் துவாதசாந்தம் முதலானவைகளும், அதீதத்தில் சுத்தசிவமும் உள. மகேசுவர ஸ்தானம் முதல் விந்து ஸ்தானம் வரையிலும் முன்போல் இடம் நாடி தொழில் வண்ணம் முதலியவு முள்ளன. நாதஸ்தானந் தொட்டுத்துவாதசாந்தம் வரையில் அனுபவவெளியாகிய ஆகாச பேதமயமாயிருக்கும். அதற்குமேல் அதிகாரண மாத்திரமாய் ஆன்மானுபவத்தில் விளங்கும்.

மேலும் பிரமஸ்தானந் தொடங்கிச் சுத்தசிவஸ்தானம் வரையில் ஒரு ஸ்தம்பம், இருதயம்வரையில் வாயுநாடி வண்ணமாயும் அதற்கு மேல் அக்கினி வண்ணமாயும் இருக்கும். இது அடியிற் பருத்து வர வர நேர்மையாய், இந்திரிய கரணங்களுக்குப் புலப்படாமல் அணுவுக்கணுவாய், ஜீவனுக்கும் புலப்படாமல் அகண்டமாய், ஆன்மக்காட்சியில் அருகித் தோன்றுவதாய், இரண்டற நிற்கும். இதற்குச் சிவா காரண பூரண ஸ்தம்பம் என்ற பெயர்.

முன் சொன்ன இருதயாக்கினிப் பை அக்கிரமமாய் விரிந்து, விசேஷ அக்கினி ஜ்வாலை விசிரிம்பித்துக் கீழிருக்கும் க்ஷீராப்திப் பையிலிருக்கும் ஜலத்தைச் சுருட்டிக்கொள்ள, ஜீவனுக்கு மரண காலம் நேரிடும். மேற்படி பை விரிவதற்கு ஆதாரம் அருந்தல் பொருந்தல். இவை சமமானால் மிருத்தியு வராது.

## 18. மனித தேகத்தில் கடவுள் காரியப்படுவது

இந்த மனிததேகத்தில் புருவ முதலாகிய இடங்களில் உரோமம் தோன்றி நெற்றி முதலாகிய இடங்களில் உரோமம் தோன்றா திருப்பதற்கு நியாயம் யாதெனில்: இத்தேகம் பாதாதி பிரமரந்திர பரியந்தம் வாயுவாலாகிய தேகம். மேற்படி வாயுவினுடைய பிருதிவி காரியமே தேக வடிவம். ஆதலால், வாயுவின் வர்ணம் செம்மை. கருமை நிற உரோமம் பிருதிவியின் கூறு. தேகத்தில் வாயு பிருதிவி இரண்டும் முக்கிய காரணமானதால், செம்மையும் கருமையுமாகிய உரோமம் உண்டாயிற்று. இது நிற்க. நரை உண்டாவது தத்துவக் கெடுதியால். இத்தேகத்தில் 27 இடங்களில் வாயுவில் பிருதிவி தங்கும். அவசியம் மேற்படி இடங்களில் ஆண்பாலுக்கு உரோமம் தோன்றும். மேற்படி இடங்களில் எவை எனில்: கபாலம் 1, புருவம் 2, கண் கீழ் இமை 2, மேலிமை 2, நாசிக்கு உட்புறம் 2, மீசை 1, மோவாய் கன்னம் 2, காதுக்குட்புறம் 1, இருதயம் 1, கைம்மூலம் 2, உந்தியின்மேல் ரேகை 1, அடிவயிறு 1, லிங்கத்தடி 1, புட்டத்தின் கீழ்ப்புறம்1, தொடை 2, முழந்தாள் 1, பாதத்தின் - மேலிடம் ஒன்று, மேற்படி விரலின் மேலிடம்பலவும் 1, முதுகு2, விலாப்புறம் 2, முழங்கைக்குங்கீழ் 2, கைவிரலின் மேற்புறம் 2 ஆக 27. * இவை அல்லாது மற்ற இடங்களில் தோன்றுவது தத்துவக் கெடுதி. தத்துவங்களின் உட்புறமலங்களே வாயுவின் பிருதிவி. ஆதலால், மேற்குறித்த இடங்களில் அக்கினியின் காரியப்பட்ட இடங்களில் தோன்றியும் தோன்றாமலும் அருகியிருக்கின்றது.

நெற்றியில் தோன்றா திருப்பது மேற்படி இடத்தில் ஆன்ம விளக்கம் விசேஷ முள்ளது. அதைப் பற்றி மேற்படி இடத்திற்கு விந்துஸ்தானம் என்றும், அறிவிடம் என்றும், லலாடம் என்றும், முச்சுடரிடம் என்றும் முச்சந்திமூலம் என்றும், நெற்றிக்கண் என்றும், மஹாமேரு என்றும், புருவமத்தி என்றும், சித்சபா அங்கம் என்றும் பெயர். ஆதலால்,

---

* எண்ணிக்கை 27 என்பது கவனிக்க வேண்டியது.

*ஆன்மா. விந்துவின் பீடம் அக்கினி. இந்த இரண்டினது காரியமேபிரகாசமாகிய அறிவின் விளக்கம். ஆதலால், உரோமம் அருகி யிருக்கிறது. பூர்வத்தில் விந்துவும், உத்தரத்தில் நாதமும் இருக்கின்றன. விந்து ஆன்மா, நாதம் சிவமும் ஆகின்றன. விந்துவுக்கு உத்தரநியாயம் பூர்வ நியாயமாவது எல்லாத் தத்துவங்களுக்கும் புறத்தும் அகத்தும் மற்றும் விளங்கி, தத்துவங்களைத் தன்வசப்படுத்தியும் தொழில்களைச் செய்வித்தும் தனித்து நின்றும் தன்னோடு தத்துவங்களைச் சேர்க்கின்ற படியால், விந்து சத்தனாயும் தத்துவங்கள் சத்தியாயும் இருக்கும். மேலும ஆன்மாவுக்குச் சகல விளக்கமாகிய சாக்கிர ஸ்தானம் லலாடம். ஆதலால். விசேடம் சிறந்தது லலாடத்தில் மூக்குநுனியாகிய புருவமத்தி. இதற்கு அனுபவ சித்திகள் திரயோதசாந்தம் வரையிலு முண்டு.*

*திரயோதசாந்தமாவது யாதெனில்: ஜீவசாக்கிரம், மேற்படி சொப்பனம், மேற்படி சுழுத்தி ஆக 3. நிர்மலசாக்கிரம், மேற்படி சொப்பனம், மேற்படி சுழுத்தி ஆக 3. பரசாக்கிரம், மேற்படி சொப்பனம், மேற்படி சுழுத்தி ஆக 3. குருசாக்கிரம், குருசொப்பனம், குருசுழுத்தி, குருதுரியம், குருதுரியாதீதம் ஆக 5, ஆக மொத்தம் 14. இதற்கு மேலுமுள சுத்தசிவசாக்கிரம், மேற்படி சொப்பனம், மேற்படி சுழுத்தி, மேற்படி துரியம், துரியாதீதம் இவை சேருங்கால் ஜீவ சாக்கிராதி நீக்கப்படும். இவ்வள வனுபவமும் பூர்வத்திலுள்ள அனுபவிகளால் குறிக்கப்பட்ட நிலைகளில் இல்லை. ஒருவாறு குருதுரிய பரியந்தம் வேதாகமங்களாலும் தத்துவராயர் முதலிய மகான்களனுபவத்தாலும் குறிக்கப்படும். அதற்கு மேற்பட்ட அனுபவம் சுத்த சன்மார்க்கத்தில் சாத்தியம்.*

*மேலும் பெண்களுக்கு உரோமம் தோன்றா திருப்பதற்குக் காரணம் ஆணிடத்தில் 3-ம் பெண்ணிடத்தில் 4-ம் ஆக இருப்பதால், பெண்களுக்குத் தலை, புருவம், இமைக்கீழ் மேல், மூக்கினுட்புறம், கைம்மூலம், லிங்கத்தடி* இவைகள் தவிர மற்ற இடங்களில் உரோமம் தோன்றாது அருகியிருக்கும். உரோமம் விசேஷம் மற்ற இடங்களில் உண்டாவது சுக்கிலவக்*

* எடுத்துக் காட்டாண இச்சொல் வேறுப்படுகிறது எனலாம்.

கெடுதி. மேலும் உரோமம் தோன்றா திருக்கிற இடங்களெல்லாம் விந்துவாகிய பிராகசம் அதிகமாக யிருக்கும். மேற்படி விந்துக்கள் மோவாய், மார்பு, ஸ்தனத்தின் கீழ்ப்புறம்- இவைகளில் நிரம்பி யிருக்கின்றன. அதனால் பெண்பாகம் உரோமம் இல்லை.

பரமாத்மா ஜீவாத்மா வென்னும் இரண்டின் நித்தியாநித்தியங்களையும் பிண்டபேதத்தில் உயர்வுதாழ்வையும் காரியகாரண சம்பந்தங்களையும் தெரிவித்தல் யாதெனில்: சாமானியம் விசேடமென்று ஜீவன் இரண்டு. இவற்றில் சிறந்தது சாமானியம், தாழ்ந்தது விசேடம். ஜீவன் இரண்டென்பதெவ்வாறெனில்: ஆன்மகாரணம் சாமானியம், ஆன்மகாரியம் விசேஷம். சாமானிய மென்பது ஆன்மஅறிவு, விசேட மென்பதுமனஅறிவு. இவை பூர்வோத்தரமா யிருக்கின்றன. பூர்வ மென்பது லிங்கஸ்தானம். உத்தர மென்பது பிந்துஸ்தானம். ஆதலால் சிருட்டிக்குக் காரணம் லிங்கம். ஆதலால், சாமானிய ஜீவன் காரணப்பட, விசேஷ ஜீவன் காரியப்படும். விசேஷ ஜீவ சம்பந்தமில்லாத பக்ஷத்தில் சிருஷ்டி காரியப்படாது. இது சாதாரண பாகம். அசாதாரண சம்புபக்ஷ சிருஷ்டியில் சாமானியத்தைக் கொண்டே விசேடத்தை வெளிப்படுத்திக் கொள்ளலாம். சாமானியம் சந்தானம், விசேட மதற்குள் ளடங்கியிருக்கும். பிரமாணம் யாதெனில்: அங்குலிகளில் நகத்திற்கு அடி சந்தானமும், வளர்ச்சி விசேடமும் போல.

மேலும், நெற்றியில் உரோமம் உண்டாகாத வஸ்துக்களெல்லாம் ஆன்மகாரண அறிவு காரியப்பட்டது. மிருகாதிகளுக்கு உரோமம் உண்டான படியால் ஆன்மகாரணஅறிவு காரணகாரணமாய் அருகியிருக்கின்றது. எப்படிஎனில்: சர்வேசுரனென்னும் நாமத்தின் பிரத்தியேக ஆத்ம சைதந்நியமாகிய வஸ்து எங்கும் பூரணமாய் இருப்பது இயற்கையுண்மை ஏகதேசம்... ஆதலால், கடவுளை-அறிவதற்கு- ஆன்ம அறிவைக் கொண்டே அறிய வேண்டும். மேற்படி அறிவு ஆன்மவியாபக ஆலயமாகிய மனிதர் தேகத்தில் கடவுள் காரியப்படுவது உத்தமம்.

இதன்றி, சமய மத ஏற்பாட்டில் மகான்கள் குழுக்குறி-அடையாளங்-களாகப் பெயரிட்ட விக்கிரக பேதமாகிய சிலா, லோக, தாரு, தந்த, இஷ்டி முதலியவகைளில் கடவுள் காரியப்படுவது சரியை கிரியாதி பேதம் எட்டில் சரியையில்சரியை கிரியையில் சரியை-இவ்விரண்டையும் செய்கின்ற மந்தர்களினது நியாயம். மேலும் அதில் தோன்றி அனுக்கிரகிப்பதுஞ் சாலம். அருளுருவமான அறிவே உருவங்கொண்ட சிவத்தை அறிவாலே அறிவது உண்மை. மேலும் அனலுக்குச் சரியான கற்பூரம், பஞ்சு, கரி, கட்டை முதலிய வஸ்துக்களில் அக்கினி சீக்கிரம் காரியப்படும். கதலி முதலிய வஸ்துக்களில் காரியப்படுவது தாமசம். அதுபோல், பக்குவான்மாக்களிடத்தில் கடவுளருள் வெளிப்பட்டால் சுத்தமாதி மூன்று தேகமும் அத்தருணமே வரும். பக்குவமில்லாதவர்களுக்கு அருள் செய்தால் வாழை யினிடத்தில் அக்கினி காரியப்படுவது போலாம். ஆதலால், கடவுளருள் வெளிப்படுவதற்கு அபக்குவிகள் தங்கள் செயற்கைக் குணங்களாகிய ராகத் துவேஷாதிகளை நீக்கல்வேண்டும். சினம்வெகுளி முதலியவற்றையும் நீக்கல் வேண்டும்.

சினமென்பது யாது? உள்வேக்காடு, புடநியாயம்போல். இது தேகத்தைச் சீக்கிரம் நஷ்டம் பண்ணும். வெகுளியென்பது மீசை துடித்தல், கண்சிவத்தல், கைமுதலிய உறுப்புகள் துடித்தல், வாய் குழறி மேல்விழுந்து கூவுதல்-இஃது ஆயுளை நஷ்டம் பண்ணும். ஆகையால், எவ்வகையிலும் கோபத்தின் பூர்வோத்தரமாகிய சினம் வெகுளி என்னும் கூற்றை ஒழித்தல் அவசியம்.

இதுபோல் மற்றக் கெடுதியாகிய காமக் குரோதாதி சம்பந்தங்களையும் நீக்கல்வேண்டும். காரணமென்பது கரண சம்பந்த முடையது. கரணமென்பது ஒற்றுமை வேற்றுமைத் தொழிற் றன்மை உடையது, மட்குடத்தைப்போல். மேலும், இலக்ஷணம் அடையாளம் இலக்ஷியம் அடையளத்தை உடையது, அங்கம் இலக்ஷணம். ஆதலால், இலக்ஷணம் இலக்ஷியம் அங்கம்

காரணம் கரணம் முதலிய சம்பந்தங்களு மொன்று மில்லாது, கெடுதியாகிய தத்துவங்களை அடக்கல்வேண்டும்.

**உரோமதத்துவமும் பிந்துஸ்தானமும்**

மனித தேகத்தில் புருவம் முதலாகிய இடங்களில் உரோமம் தோன்றியும், நெற்றி முதலாகிய இடங்கிளில் தோன்றாமலுமிருப்பதற்கு நியாயம்: இந்தத் தேகம் பாதாதி பிரமரந்திர பரியந்தம் வாயுவாலாகிய தேகம். ஆதலால் அதனுடைய பிருதிவி காரியமே தேகவடிவம். ஆதலால் வாயுவின் கூறு செம்மை. கருமயிர் பிருதிவியின் கூறு. இந்த நியாயத்தால் தேகத்தில் செம்மையும் கருமையும் கூடிய உரோமம் உண்டாயிற்று. நரை தத்துவக் கெடுதியால் நேரிட்ட ஆபாசம்.

இந்தத் தேகத்தில் 27 இடங்களில் வாயுவில் பிருதிவி தங்குகின்ற இடமாதலால் அவசியம் உரோமம் இருக்கும், மேற்படி இடங்களின் விவரம்: கபாலம்1, புருவம்2, கண்கீழ் இமை 3, மேல் இமை 4, நாசிக்குட்புறம் 5, மீசை6, கன்னம் 7, காதுக்குட்புறம் 8, இருதயம் 9, கைம் மூலம் 10, உந்தியின் மேல்ரேகை 11, அடிவயிறு 12, லிங்கத்தடி13, புட்டத்தின் கீழ்ப்புறம் 14, தொடை 15, முழந்தாள் 16, பாதத்தின் மேலிடம் 17, அடி விரலின் மேலிடம் 18, முதுகு 19,20,21, விலாப்புறம் 22,23, முழங்கையின் கீழ் 24, கணுக்கைக்கு மேல் 25, கைவிரலின் மேற்புறம் 26, இந்த இடங்களில்தவிர மற்ற இடங்களில் உரோமம் தோன்றுவது தத்துவ ஆபாசம். தத்துவங்களினது உட்புற மலங்களே வாயுவின் பிருதிவியாதலாலும், மேற்குறித்த இடங்களில் அக்கினியின் காரியமில்லாததினாலும் உரோமம் தோன்றுகிறது.

அக்கினி காரியப்பட்ட இடங்களில் உரோமம் தோன்றியும் தோன்றாமல் அருகியிருக்கும். நெற்றியில் ஆன்ம விளக்கம் உள்ளது. ஆதனாலதற்குப் பிந்துஸ்தான மென்றம், அறிவென்றும், பாலமென்றும், முச்சுடரென்றும், முச்சந்தி யென்றும், முப்பாழென்றும், நெற்றிக்கண் என்றும், கபாடஸ்தான மென்றும், சபாத்துவார மென்றும், மகம்மேரு

வென்றும், புருவமத்திய மூலமென்றும், சிற்சபை யென்றும் பெயராம். ஆதலால் பிந்துவென்பதே ஆன்மா. பிந்துவின் பீடம் அக்கினி. இந்த இரண்டினது காரியமே பிரகாசமாகிய அறிவின் விளக்கம். ஆதலால் உரோமம் அருகியிருக்கிறது.

### பிந்து நாதங்கள்

பூர்வத்தில் பிந்துவும் உத்தரத்தில் நாதமுமிருக்கின்றன. பிந்து ஆன்மா; நாதம் பரமான்மா. நாதத்தோடு பிந்துசேர்ந்தால் பிந்து சத்தியும், நாதம் சிவமும்ஆகின்றன. பிந்துவுக்கு இது உத்தரநியாம். பூர்வ நியாயமாவது எல்லாத் தத்துவங்களுக்கும் புறத்தும் அகத்தும் அகப்புறத்தும் புறப்புறத்தும்விளங்கித் தத்துவங்களைத்தன்வசப்படுத்தியும், தொழில்களைச் செய்வித்தும், தனித்தும், தன்னோடு தத்துவங்களைச் சேர்க்கிறபடியால், பிந்து சத்தனாயும் தத்துவங்கள் சத்தியாயும் இருக்கும்.

### பாலஸ்தானம்

நாம் இருப்பது பாலஸ்தான மாதலால், பாலம் சிறந்தது. இதற்கு அனுபவ சித்திகள் திரயோதசாந்தம் வரையில் உண்டு.

### பெண் பிறவியும் பிந்து விளக்கமும்

ஆணிடத்தில் பிந்து விளக்கம் மூன்று பங்கும், பெண்ணிடத்தில் பிந்து விளக்கம் நான்கு பங்கும் இருப்பதால், பெண்களுக்குத் தலை, புருவம், இமைக் கீழ் மேல், மூக்கு உட்புறம், கைம்மூலம், லிங்கஸ்தானம்-இவை7 ஸ்தானங்கள் தவிர மற்ற இடங்களில் உரோமம் தோன்றாது அருகியிருக்கும். பெண்களுக்கு உரோமம் தோன்றாமல் இருக்கிற இடங்களெல்லாம் பிந்து விளக்கமாகிய பிரகாசம் ஜாஸ்தியாக இருக்கும். பெண்களுக்குப் பிந்து இருக்கிற ஸ்தானம் மூன்று; வாய், மார்பு, ஸ்தனத்தின்கீழ், உரோமம் விசேஷம் தோன்றவது தத்துவ அபாசம்.

### சாமானிய ஜீவன் விசேஷ ஜீவன்

சாமானிய ஜீவன் விசேஷ ஜீவன் ஆக 2. இவற்றில் சிறந்தது சாமானியம்; தாழ்ந்தது விசேஷம். ஜீவன்

இரண்டென்பதற்கு விவரம்: ஆன்மகாரணம் சாமானியம்; ஆன்மகாரியம் விசேஷம். சாமானிய மென்பது ஆன்மஅறிவு, விசேஷ மென்பது மன அறிவு. இது பூர்வோத்தரமாய் இருக்கின்றது. பூர்வமென்பது லிங்க ஸ்தானம், உத்திர மென்பது விந்து ஸ்தானம். சிருட்டி முதலியவைகளுக்குக் காரணம் லிங்க ஸ்தானம். ஆகையால், சாமானிய ஜீவனே காரணப்பட்டு, விசேஷ ஜீவன் காரியப்படும். விசேஷ ஜீவ சம்பந்தமில்லாத பக்ஷத்தில் சிருட்டி நடவாது; இது சாதாரணம். அசாதாரணத்தில், சம்புபக்ஷ சிருட்டியில் சாமானிய ஜீவனைக் கொண்டே விசேடத்தை வெளிப்படுத்திக் கொள்வது. சாமானியம் சந்தான மாதலால் விசேடம் உள்ளடங்கி இருக்கின்றது நகத்துக்கு சந்தானம் அடியும் விசேஷம் வளர்ச்சியும் போலவாம். மிருகாதிகளுக்குச் சாமானியம் காரியப்படாததனால் சாமானியம் இல்லை என்று சொல்லப்பட்டது.

## கடவுள் காரியப்படுவது

கடவுள் ஆன்ம வியாபகமாகிய மனித தேகத்தில் காரியப்படுவது உத்தமமாக இருக்க, சிலாவிக்கிர பூத தாரு முதலியவைகளில் வெளிப்படுத்திக்கொள்வது மந்த நியாயம். அதில் தோன்றி அனுக்கிரகிப்பதாகச் சொல்லுவது ஜாலம். காய்ந்த கட்டையினிடத்தில் அக்கினி அதி சீக்கிரம் பற்றுதல்போல், பக்குவர்களாகிய ஜீவர்களிடத்தில் கடவுள் அருள் வெளிப்பட்டால், சுத்தமாதி மூன்று தேகசித்தியும் அத்தருணமே வரும். பக்குவ மில்லாதவர்க்கு அருள் செய்தாலும், வாழையினிடத்தில் அக்கினி செல்வது போலவாம். ஆதாலல், கடவுள் அருள் வெளிப்படுவதற்குமுன் அபக்குவர்கள் தங்கள் செயற்கையாகிய ராகத்துவேஷாதி அசுத்தங்களைப் போக்கிக் கொள்வது உத்தமம்.

## கோபம்

சினம் வெகுளி யென்பவற்றின் பொருள்; சினம் உள்வேக்காடு, புடநியாயம் போல். இது தேகத்தைச் சீக்கிரம் நஷ்டஞ் செய்யும். வெகுளி மீசை துடித்தல், கண் சிவத்தல், கை

கால் உடம்பு துடித்தல் முதலாகியவற்றை வெளிப்படையாகக் காட்டுதல். இதுவும் ஆயுளை நஷ்டம் செய்யும். ஆகையால் எந்த வகையிலுங் கோபங் கூடாது. அதை அவசியம் ஒழிக்க வேண்டியது. காமக் குரோதாதிகள் முதலிய பெருங் குறைகளை அவசியம் நீக்க வேண்டியது. காரணமென்பது கரண சம்பந்த முடையது. கரணமென்பது ஒற்றுமை வேற்றுமைத் தொழில் தன்மை யுடையது, மட்குடத்தைப் போல். இலக்ஷணம் அடையாளம்; இலக்ஷியம் அடையாளத்தை உடையது; அங்கம் இலக்ஷணம்,

## 19. சமய நூல்களின் உண்மை

பெரியபுராணத்தில் குறித்த 63 நாயன்மார்களை அனுஷ்டித்தால், அது அது ஒவ்வொரு சித்தியைக் கொடுக்கும். இதுபோல சைவத்தில் சொல்லுகின்ற சௌராதி சண்டை பரியந்தமும் தத்துவமே யாம் சைவ புராணம் விஷ்ணு புராணம் முதலியயாவற்றின் உண்மையும் தத்துவ சம்மாரங்கள். சூரபத்மன் யுத்தம் முதலிய யுத்தங்களும் தத்துவ சம்மாரங்களே. ஒவ்வொரு மஹான்கள் சாஸ்திரங்களையும் தேவாரம் திருவாசகங்கள் முதலியவைகளையும் அமைத்து, இவற்றிற்கு இடமாக ஆலயங்கள் அமைத்து, மேற்படி சித்திக்கு உரிய தத்துவதத்துவி களின் பெயரைக் கர்த்தாவாக்கி, அந்தச் சித்தி முடிக்குங் காலம் தினம் கருவி முதலியவைகளை மேற்படி ஆலயங்களுக்கு விசேஷ காலமாக்கி, வழக்கத்தில் வருவித்தார்கள். மேற்குறித்த நாயன்மார் முதலியவர்களின் உண்மையனுபவ தார்பரியமுடைய சித்திகள் முன்னும் பின்னும் இனியுமுள. நாம் மேற்படி தத்துவங்களை அனுஷ்டித்தால் அவ்வி தமாக ஆகக் கூடும். இது போலவே திருவிளையாடல் பாரத பாகவதங்களு மமைத்துக் கொள்க. ஒருவாறு. கணபதி சுப்பிரமணிய சுவாமிகளும் தத்துவங்களே தவிர வேறல்ல. புராணங்களி னிருதயமெல்லாம் தத்துவ சம்மாரமே. இதன் உண்மை சுத்த சன்மார்க்கத்தில் விவரமாய் வெளியாகும்.

## 20. சமய நூல்களில் பிழை

சமயமத சாத்திரங்களில் அனேக இடத்தில் பிழைக ளிருக்கின்றன. அதற்குக் காரணம் அவற்றை இயற்றியவர்கள் மாயையின் சம்பந்தத்தை அடைந்திருந்தவர்கள். ஆகையால் முன்னுக்குப் பின் மறைப்புண்டு தப்புகள் நேரிட்டிருக்கின்றன. மாயையை வென்ற சுத்த ஞானிகளுக்கல்லது மற்றவர்களுக்குப் பிழையற இயற்ற முடியாது. அந்தப் பிழைகள் சுத்தசன்மார்க்கம் விளங்குகின்ற காலத்தில் வெளிப்படும்.

## 21. கற்பமும் பிரளயமும்

மகா கற்பம்-மூலப்பிரகிருதியினின்று உண்டாம்சிருஷ்டி முதல் பிரமாவின் ஆயுள்வரையில் ஏற்பட்டுள்ள காலம். அவாந்தர கற்பம்-சதுர்முகப் பிரமனுடைய ஒரு நாட்குரிய காலம். இந்த இரண்டு கற்பத்தின் நடுவே ஒவ்வொரு ஒடுக்கமுண்டாகிறது. அது 1. நித்தியம், 2. நைமித்திகம், 3. பிராகிருதிகம், 4. ஆதியந்தகம் என நால்வகைத்தாம். நித்தியப் பிரளயம்-மரணமே நித்தியப் பிரளயம். நைமித்திகப் பிரளயம்-பிரமனுடைய கற்பமுடிவி லுண்டாகின்ற ஒடுக்கம். பிராகிருதிகப் பிரளயம்-மகத்துவ முதல் விசேட பரியந்தம் ஒடுக்கத்தை யடைவது. ஆதியந்திகப் பிரளயம்-தத்துவஞானத்தால் யோகிக்கு உண்டாகும் ஒடுக்கம்.

## 22. கற்பபேதம்

கற்பபேத மென்பது கடவுள் இடபவாகனாரூபராய் உலகத்திலெழுந்தருளிக் காட்சி கொடுத்தருளுங் காலம். இடப மென்பதற்குப் பொருள் தர்மசுவரூபம். தர்மமென்பது காருண்யம், தயவு, அருள். ஆதலால், அருள் வடிவமான ஆன்மாலய உலகமான தேகத்தின் அனுபவ ஞானம் தோன்றுதல்.

## 23. கலியுகம்

கலியுகத்தின் தாத்பரியம்:- முதல் யுகத்துக்கு நாள் 8, இரண்டாவது யுகத்துக்கு நாள் 6, மூன்றாவது யுகத்துக்கு நாள்

---

சௌராதி சண்டை பரியந்தம்—சூரிய பூசை முதல் சண்டே சுவர பூசை முடிய.

4, நாலாவது யுகத்துக்கு நாள் 2. ஒரு தினத்திற்கு நாழிகை 60, நிமிஷம் 2,16,000. இரண்டு நாளைக்கு 4,32,000 நிமிஷம். இவ்வண்ணமே 4, 6, 8, முதலியவற்றிற்கும் கொள்க. ஆக நாள் 20-க்கு நிமிஷம் 43,20,000. இதைக் குழுக்குறியில் வருஷமாகச் சொன்னது. முதல் யுகம் களங்கமார்க்கம்; இரண்டாவது யுகம் திராவக மார்க்கம்; மூன்றாவது யுகம் நவநீத மார்க்கம்; நாலாவது யுகம் பஸ்ம மார்க்கம். ஆதலால், மேற்குறித்த பஸ்மத்தை மேற்குறித்த வருஷத்தில் முடித்து உட்கொண்ட புருஷனாகிய சித்தனுக்குப் கலிபுருஷனென்னும் நாமம் வந்தது. மேற்படி பஸ்மத்தை இரண்டு தினத்தில் முடித்து கற்பங்கொண்டு தேகசித்தியைப்பெற்றுத் திரிசியப்படாமல், மேற்படி புருஷன் தனது சங்கல்ப விகல்பங்களால் இவ்வுலகத்தைத் தோன்றலாதி அசைவுகள் செய்வித்து ஆடுகின்றான். இந்தவுலகம் முடிவதற்கு இன்னும் 27 வருடம் இருக்கின்றது; இதற்குமேல் மேற்படி புருஷன் செயல் நடவாது; ஞான சித்தன் செயல் உண்டாம். ஆங்கிரச வருடம் புரட்டாசி மாதம் 3ஆம் நாள்.

## கலியுக முடிவு

முதல் யுகத்திற்கு நாள் 8. 2-வது யுகத்திற்கு நாள் 6. 3-வது யுகத்திற்கு நாள் 4. 4-வது யுகத்திற்கு நாள் 2. ஆகக் கூடிய நாள் 20-ம் கற்பம் முடிக்கக் கூடும் நாட்கள். 60 x 60 x 60 = 2,16,000 நொடி ஒரு நாள். அதாவது, நாள் ஒன்றுக்கு நாழிகை 60, நாழிகை ஒன்றுக்கு வினாடி 60, வினாடி ஒன்றுக்கு நொடி 60, என்றபடி. நாளிரண்டிற்கு 4,32,000 நொடி. இந்த 4,32,000 நொடியும் அத்தனை வருடமாகக் கலியுகத்திற்குச் சொல்லியிருக்கிறது. ஆனால் இந்தக் கலியுகத்திற்கு வருடம் ஐயாயிரந்தான். இந்தக் கலியுகம் முடிவதற்கு இன்னும் இருபத் தேழு வருடமிருக்கிறது. இந்த ஐயாயிர வருஷமும் ஜீவித் திருக்கும் படி, கலியுகத்திற்குக் குறித்த நாளிரண்டில் கல்பஞ் செய்து தேகசித்தியைப் பெற்றுக்கொண்டு, நம்முடைய கண்ணுக்குத் தோற்றாமல் வேறு வடிவத்தோடு இருக்கின்றவன் கலியுக புருஷன். இவனுடைய சங்கல்ப விகற்பங்களால் இந்த உலகம் இப்போ

தசைவு பெற்றிருக் கின்றது. இந்த உலகம் சன்மார்க்க உலகமாக மாறுவதற் கின்னும் பன்னிரண்டு மாதமிருக்கிறது. ஆங்கிரச வருடம் புரட்டாசி மாதம் 3ஆம் நாள்.

## 24. கால சங்காரம்

மார்க்கண்டர்க்காக ருத்திரமூர்த்தி இடது காலால் எமனை உதைத்ததற்கு நியாயம்:- மார்க்கண்ட ரென்பது மயக்கமாகிய மறைப்பென்னும் மரணத்தைத்தவிர்த்தது. ருத்திர னென்பது தனித்த ஆன்ம அறிவு. எமனனென்பது மயக்கத்தைத் தரத்தக்க வெகுளி சினம் முதலியன. இடது காலால் எமனை யுதைத்த தென்பது: இடது என்பது சந்திரகலை, காலென்பது பிராணவாயு; ஜனனமரணத்தை உண்டு பண்ணுவது சந்திரசூரியகதி. ஆதலால், அஞ்ஞான பாசத்தால் சினமாகிற கூற்றுவன் கட்ட, விவேகியென்னும் மார்க்கண்டன் ருத்திரனென்னும் ஆன்மஅறிவோடு கூடவே, ஷை ருத்திரன் விந்துநஷ்டஞ் செய்கின்ற இடகலையை மேலேற்றி, குணங்களாகிய சூலத்தால் கூற்றையொழித்து, அருளாகிய சத்துவமயமாய் நீடிக்கச்செய்வது-எமசம்மாரம்.

## 25. சுரர் அசுரர்

சுரர் என்பது அறிவுடைய ஜீவர்கள் முதல் வாசனாதி வஸ்துக்களெல்லாம் சுரர். அகங்காரி முதல் துர்க்கந்த வஸ்துக்களெல்லாம் பூமிக்குள் தோன்றுங் கந்தமூலம்- அழுக்குடைய வஸ்து-இவைகள் அசுரர். துர்வாசனை, துர்வாசனையுடையவர்கள், துர்க்குண மனுஷியர்கள்.

## மனிதரும் தேவரும்

அறிவினது உயர்ச்சியினாலும் தாழ்ச்சியினாலும் தேவரென்றும் மனிதரென்றும் சொல்லப்பட்டதே தவிர வேறே யெந்தக் காரணத்தினாலும் அல்ல. ஆனால் தயை விசேஷ மிருக்க வேண்டிய தென்பது அறிவு உயர்ச்சியி லடங்கி விட்டது. தேவர்களுக்கு 4 கையென்பது ஈகைபற்றிய தயை விசேஷத்தைக் குறித்துச் சொன்னதே தவிர வேறல்ல. ஆகையால் தயவே வடிவமாக இருக்கிறவர்களே புண்ணிய தேகிகள். அவர்களே தேவர்களு மாவர்.

## 26. அடி முடி தேடல்

பிரமா அன்னமாகவும் விஷ்ணு வராகமாகவும் உருவங்கொண்டார் என்பதன் பொருள்:- பாசஅறிவும் பசுஅறிவும் ஆம். ஒரு பொருளைக் காணுந் தன்மையுடையது பாச அறிவு. பசு அறிவாவது - பொறிபுலன்களாலே அறியப்பட்டது ஜீவஅறிவு. மலத்தில் அழுந்துவது பாசம். பகுத்தறிவது பசு. மேலுங் கீழுஞ் செல்லுதலால், பாதாளத்திலும் ஆகாசத்திலும் தேடினாரெனச் சொன்னது. மேலும், ஒவ்வொரு வஸ்துவிலும் பதி,பசு,பாச லக்ஷணம் உண்டு.

## 27. பிரம தண்டனை

பிரம தேவனுக்கு ஐந்து முகமாவன: ஆணவம், காமியம், மாயை திரோதை, மாமாயை. இவைகளில் ஆணவம் என்னும் ஒரு தலை மாத்திரம் பரமசிவத்தினால் அரியப் பட்டது.பிரமதேவனது ஒரு சிரசை வெட்டும் பொருட்டுத் தோன்றின ருத்திரனுக்கு ஐந்து தலையாவன: இச்சை, ஞானம், கிரியை, ஆதி, பரை என்னும் ஐந்துமாம். இதுபோல் இராவணனது பத்துத்தலையும் அகங்காராதிகள் என அறியவும்.

## 28. சரஸ்வதியை மூக்கறுத்தது

பிரமதேவன் பத்தினியாகிய சரஸ்வதியை மூக்கறுத்தது யாதெனில்: பிரமதேவனது சிரசில் ஒரு முகமாகிய அகங்கார தத்துவத்திற்கு உபகருவியாவது அவரது பத்தினியாகிய சரஸ்வதி. ஷை கல்வியின் முகப்பை அல்லது முகத் தலையாகிய மூக்கை அறுத்தது என்பது அடக்கியது. இல்லாவிட்டால், அபரஞானம் ஒழியப் பரஞானம் வராது.

## 29. சந்திர சாபம்

சந்திரனுக்கு இரண்டு தண்டனை என்பது யாதெனில்: கணபதியாகிய அவாவை உல்லங்கனம் பண்ணினதால் சண்டாளத்துவம் நேரிட்டது. சந்திரனுக்குக் கலைகுறைந்ததும் சிவன் சிரசில் தரித்துக் கொண்டதும் யாதெனில்: தக்கனாகிய ஜீவபோதத்திற்குப் பெண்கள் என்னும் உபகரணங்கள் 27. இவற்றை மனமாகிய சந்திரனுக்குக் கல்யாணம் என்னும் செயற்கையைச் செய்து, சமமாகப் பார்க்கும் படித் தக்கன்

சொன்னதைத் தடுத்து , கிருத்திகை உரோகிணியாகிய ஆசை மோகம் இரண்டையும் பாராட்டி, மற்றப் பெண்களைச் சந்திரன் அலக்ஷியம் செய்தான். செய்யவே, தக்கனது சாபத்தல் பதினாறு கலையின் கண்ணியங்கெட்டு ஒவ்வொன்றாய்க் குறைய பயங் கொண்டு பிரமாவாகிய பாச அறிவினிடத்துச் சொன்னான். பிரமன் தக்கனது பலத்தை எண்ணித் தன்னால் முடியாது என்று பதியாகிய சுத்த அறிவினிடத்தில் சொல்லும்படி செய்தான். அங்ஙனம் சொல்லலும், சிவமானது சந்திரனாகிய மனத்தின் வியாபார கலைகளை ஒடுக்கி, ஒரு கலையான சுத்த மனத்தைத் தானாகிய அறிவின் சிரம் என்னும் பிரஞ்ஞையில் தரித்து, சாபம் வீண் போகாமல் ஏறியும் குறைந்தும் இருக்கும்படி செய்தது. இப்படிச் செய்யாவிட்டால் அனுபவம் வராது.

### 30. தக்ஷ யாகம்

தக்கன் என்பது யான் எனது என்று அகங்கரிக்கும் ஜீவபோதம், தக்கன் யாகத்தை அழித்தது என்பது ஜீவபோதத்தை அழித்தது.

### 31. சூரபத்ம சம்ஹாரம்

பதுமாசுரன் என்பது: பதுமம்- நாபி, அ-அவா, சுரன்- சுழித்து எழுதல். நாபியினிடமாய் அடங்காமல் எழும்பும் குணத்தை அடக்கியும் தடைபடாதது பத்மாசுரனாகிய அவா. கஜமுகம் என்பது மதம்.சிங்கமுகம் என்பதுமோகம் .இவைகளை வெல்வது ஐந்தறிவாலும் உபசத்தியான பஞ்ச சத்தியாலுங் கூடாது. ஆதலால் சிவத்தால் தடைப்பட்டது. சுப்பிரமணியம் என்னும் ஷண்முகரால் சம்மரிக்க வேண்டியது எப்படி எனில்: பஞ்ச சத்தியோடு அனன்னியமாகிய சம்வேதனை என்னும் அருட்சத்தியையுங் கூட்டிச் சுத்த அறிவே வடிவாகிய ஆறறிவென்னும் முகங்களோடு, சுத்தஞானம் சுத்தக்கிரியை என்னும் சத்தியுடன், கூர்மை பொருந்திய வேல் என்னும் விவேகத்தால், தயாவடிவாய் அவா மோக மதங்களை நாசஞ் செய்வது சூரசம் மாரம். மயில் என்பது மேற்படி தத்துவங்கள் நஷ்டமானாலும் அவற்றின் அக்கிரமம் அதிக்கிரமம் கெட்டுக் கிரமம் மாத்திரம் இருப்பது. பூர்வ வாசனாதிகள் பல வண்ணமாய் விரிந்து

ஆடுவது இயல்பாதலால், அவற்றை அசைய வொட்டாது மத்தியில் ஏறி இருப்பதாகிய சுத்த அறிவே ஷண்முகம். விகல்ப ஜாலமே மயில். இவ்வண்ணமே அண்டத்திலும் உண்டு. மேலும், நமது புருவ மத்தியில் ஆறு பட்டையாய் மணிபோல் ஓர் ஜோதியிருக்கின்றது. அந்த ஜோதியே ஷண்முகம்.

## 32. குண்டோதரனுக்கு அன்னமிட்டது

குண்டோதரனுக்கு அன்னமிட்டார் என்பதற்குப் பொருள் குண்டோதரம் என்பது துத்தநாகக் குடாக்கு, ஓதனமென்பது அன்னம், தரன் என்பது பசியில்லாதவன். மேற்படி நாகத்தைச் சுண்ணஞ் செய்து பசியில்லாதவனுக்கு கொடுக்க விசேஷ பசி உண்டாகும். எப்படியெனில்: நாகக்கொட்டையை மைபோலாட்டி, நாகத்திற்குப் பிடிப்பித்துச் சிறுபுடமாய்ப் பத்திட்டு எடுத்து, நாலிலொன்று சூதஞ் சேர்த்து, வட்டாக்கிக் கருந்துளசியால் கவசித்துச் சிலைமண்செய்து, புடமிடச் சுண்ணமாம். இதுபோல் மற்ற திருவிளையாடல் முழுமையும் ஒருவாறு.

## 33. பாற்கடல் கடைந்தது

திருப்பாற்கடல் கடைந்து அமுதபானம் தேவர்கள் செய்யும் பொருட்டுவிஷத்தை ருத்திரர் உட்கொண்டாரென்பதற்கு ப் பொருள்:- திருப்பாற்கட லென்பது தேங்காய். அமுதமென்பது அதன் ஜலம். தேங்காயின் பாலிலுள்ள எண்ணெயே விஷம். ஷெ எண்ணெயாகிய விஷத்தைப் போக்குவது முப்பூவாகிய ருத்திரன். ஆதலால், தேங்காய்ப் பாலிலுள்ள விஷமாகிய எண்ணெயை முப்பூவால் போக்குவது ருத்திரன் விஷம் சாப்பிட்டது. மற்றக் கடல்கள் யாவும் இட்சுமது முதலிய வஸ்துக்களே. இவ்வாறு, அண்டத்தினும் பிண்டத்தினும் பௌதிகத்தினும் தாதுக்களினும் ஓஷதியினும் கடல்கள் உள. கருப்பஞ்சாற்றுக்கடலென்பது கரும்பு, மதுக்கட லென்பது தேன்.

## 34. பாற்கடலில் பள்ளிகொண்டது

ஆகாரம் உண்டவுடனே ஜீரணமாய்ப் பால் வண்ணமாக ஆகாரப்பையில் வெண்மை நிறமாக இருப்பது திருப்பாற்கடல் என்றும், அதனடியில் உண்டாகும் பசி-தீவிர சத்தியாகிய உஷ்ணம் - வடவாமுகாக்கினி என்றும், இரண்டிற்கும் மத்தியில் உண்டாகிய சீதளம் விஷ்ணு பள்ளிகொண்டது என்றும் சொல்லுவது. திருப்பாற்கடலில் விஷ்ணு பள்ளிகொண்டது இது தான்.

## 35. நாராயணன்

நாராயணன் என்பதன் பொருள் : அப்பு தத்துவத்தின் அதிஷ்டான கர்த்தாவென்றும், அப்பு தத்துவத்தில் தோன்றினவன் என்றும், நர விசேஷப் பிறப்பை உடையோன் என்றும், நரனில் தோன்றினோன் என்றும், மாயாகோஷத்தை அல்லது நடப்பை உயிர்க்கு உண்டு பண்ணுவோன் என்றும், இன்ப பகுதியின் சேட்டிப்பை உயிர்க்கு உண்டு பண்ணுவோன் என்றும், இன்ப சத்தியை உயிர்க்கு ஊட்டுவோன் என்றும் கொள்ளலாம். இன்னும் பல்வேறு வகையிலும் கொள்ளலாம். நாரம் ஜலத்தில், அணன் உற்பத்தியானவன், ந-- மாயையினுடைய, ர-- கோஷம்- நடப்பு - வியாபாரத்தை, ய-- உயிர்களுக்கு, ண-- உண்டு பண்ணுகிறவன் ந-- பிரகிருதியினுடைய, ர-- சேட்டிப்பை, ந-- ஆதிசத்தியினுடைய, ர-- இன்பத்தை ...

## 36. கருடன்

கருடன்மீது விஷ்ணு ஏறியது என்பது: க ஜலம், ரு கருமை , ட வெண்மை. ஆதலால் விளங்கா வெண்மையாகிய ஜலத்தின் பின் தோன்றும் செம்மைக்கு இடையில் கருமையாகிய நீராவியே விஷ்ணு. ஆதலால், சித வஸ்துக்களெல்லாம் விஷ்ணு; அணுத்துவமெல்லாம் பிரமா; உஷ்ணத்துவமெல்லாம் ருத்திரன். இது போல் மற்றத் தத்துவங்களையும் அறியவும்.

## 37 . அயக்கிரீவம்

மாலின் 10-வது அவதாரம் அயக்கிரீவ அவதாரம். அயம் என்பதற்குப் பொருள் பிராணவாயு, கிரீவம் என்பது கழுத்து ஆகவே அயக்கிரீவம் என்பது பிராணவாயுவையே கழுத்தாகக் கொண்டது. இப்படியே மற்ற அவதாரங்கள் என்பற்றிற்கு வெவ்வேறு பொருள் உண்டு.

## 38. வாமனாவதாரம்

காசிபர் என்பது மனம். இவரது பிள்ளையாகிய மாபலிச் சக்கரவர்த்தியாவது மனதின் மந்தம். அதில் உண்டாகிய சிதம் சாக்கிரத்திலும் சுழுத்தியிலும் நிறைந்து நின்றது உலகளந்த பெருமாள் ஒருகால் மேலும் ஒருகால் கீழும் அளந்து ஓர் அடிக்கு இடமில்லா திருந்தது.

## 39. வடுகநாதர்

வடுகநாதர் விஷ்ணுவினுடைய தோலை உரித்துப் போர்த்துக் கொண்டது யாதெனில்: மனத்தில் உண்டான மந்தத்தில் தோன்றின சிதமான விஷ்ணு அகம் புறம் எங்கும் இருப்பதை, அப்படி எங்கும் பரவவொட்டாது, உஷ்ண சத்தி விளங்கிச் சிதபாகத்துக்குக் கவசம் போல் உட்பக்கம் இல்லாமல் மேற்புறமாகப் பரவியிருப்பது ருத்திரனான வடுகநாதர் என்பது

## 40. பைரவர் வீரபத்திரர்

வடக்கே பைரவர் இருப்பார் என்பது யாதெனில்: நமது பாதத்தின்கண் உஷ்ணசத்தி விளங்குவதுதான். சிரசிலே வீரபத்திரராவது * இச்சாசத்தி. இதைத் தென்திசையில் வீரபத்திரர் இருப்பதாகச் சொல்லுவது."

## 41. வேதாரண்யம்

வேதாரணியத்தில் கதவு திறக்கப்பட்டதும் மூடப்பட்டதும் யாதெனில்: வேதப்பொருளை மறைத்ததுந் திறந்ததும் எனக் கொள்க. உண்மையை விளக்கியது திறந்தது, மறைத்தது மூடியது.

---

* அண்ட முகட்டில் உள்ளது வீரபத்திரபுவனம்

## 42. வேதம்

அப்பு தத்துவத்தின் குணம் நான்கில் இருந்து உண்டானவையே நான்கு வேதமும்.

## 43. வேதம் ஆகமம் முதலிய நூல்கள்

வேதம் பதி லக்ஷணத்தை விளக்கும். ஆகமம் பசு லக்ஷணத்தை விளக்கும். புராணம் பாச லக்ஷணத்தை விளக்கும். இதிகாசம் பக்தியை விளக்கும். ஸ்மிருதி கர்மத்தைவிளக்கும். மேலும் வேதம் பதி பசு பாசத்தைச் சொல்லும். அதுபோல் ஆகமமும் சொல்லும். வேதம் என்பது நான்கு மகா வாக்கியந்தான். மற்றவை அங்க உபாங்க சாங்கப் பிரத்தியாங்கங்கள். இவைகள் யாவும் மனமடங்கும் துவாரமாம்.

## 44. வேதாகம வழிகள்

ஒருவன் ஆன்ம லாபம் பெறுவதற்கு இரண்டு மார்க்கம் உண்டு. ஒரு மார்க்கம் படியுள்ளது; ஒரு மார்க்கம் படியில்லாதது. எப்படி எனில்: மெத்தை ஏற வழியிருப்பதுபோல். ஏறிவிட்டால் மேலிடமாகிய அரமியம் ஒன்றே. அவ்வழி, ஆகமவழி சோபான முடையது. வேதவழி சோபானம் இல்லாதது. ஒருவன் ஆகமவழி செல்லாது வேத வழி போகக்கூடாது. ஏனெனில் ஜீவன் உபாசனா துவாரமாய் ஜீவத்துவங் கெட்ட இடத்தில், இரண்டற்று ஒன்றாகிய வேதவழி என்னும் அத்துவைதம் நிலைக்கும். வேதவழியான அத்துவைதம் அனுபவம் ஆகமவழியான துவைதம் விவகாரம். ஒன்றென விவகரிப்பவரிடத்தில் அனுபவமில்லை. உபதேசரீதியில் சொல்லாது ஒன்றெனப் படவேண்டும்.

## 45. தேவாரம்

தேவாரம் என்பது: தே -தயவு, ஆரம்-ஒழுங்கு; தயா ஒழுங்கே தேவாரம்.

## 46. திருவாசகம்

திருவாசகம் என்பது: மெய்ப்பொருள் நிரம்பிய வார்த்தை, மெய்ப்பொருளைத் தரும் வார்த்தை.

## 47. திருமந்திரம்

சன்மார்க்க உண்மை தெரிய வேண்டுமாகில் திருமந்திரத்தைக் கவனிக்கில் விளங்கும்.

## 48. திருமந்திரமும் திருவாசகமும்

சாத்திரங்களிற் சிறந்தது திருமூலர் திருமந்திரம் இஃது மொத்தம் எண்ணாயிரம்; தோத்திரங்களிற் சிறந்தது திருவாசகம். இவற்றை ஊன்றிப் பார்க்கவும்.

## 49. சிவம் என்பதன் பொருள்

சிவம் என்பதற்குப் பொருள் சச்சிதானந்தம். சச்சிதானந்த மென்பது சத்து, சித்து, ஆனந்தம். இதில் சிகரம் சத்து. வகரம் சித்து, மகரம் ஆனந்தம்; சிகரம் எல்லா முள்ளதாய் விளங்குவது, வகரம் எல்லாம் விளங்குவதா யுள்ளது, மகரம் இரண்டினாலும் நிரம்பிய இன்பம்.

### சிவ

சிவ என்பதற்குப் பொருள் அனாதியாய் மலமில்லாத சர்வ வல்லமையுடைது. சி என்பதற்குப் பொருள் அனாதியாய் மலமில்லாதது; வ என்பதற்குப் பொருள் சர்வவல்லமை யுடையது.

### சி

சி என்னும் எழுத்துக்குப் பொருள்: இதன் பீஜாக்ஷரம் 5. அவை: விந்து, நாதம், சகரஒற்று, அகரம், இகரம். இவை கூடியது சிகரமாகிய ஓர் உருவம். இதற்குப் பொருள் சுத்த சன்மார்க்க காலத்தில் வெளிப்படும்.

## 50. சிவகுணமும் ஜீவகுணமும்

| சிவ குணம் 8 | ஜீவகுணம் 8 |
|---|---|
| 1. தன்வயத்தனாதல் | பராதினன் |
| 2. தூய உடம்பினனாதல் | துக்கதேகி |
| 3.இயற்கையுணர்வினனாதல் | செயற்கை உணர்வினன் |
| 4.முற்றும்உணர்தல் இயல்பாகவே | சிற்றுணர்வினன் |
| 5.பாசங்களினீங்குதல் | பந்தன் |
| 6.பேரருளுடைமை | காடின்னியன் |
| 7.முடிவிலாற்ற லுடைமை | நிர்பவன் |
| 8.வரம்பிலின்ப முடைமை | மலதேகி நார் |

## 51. சிவமாதல்

பசுவென்பது முற்றும் மலமுள்ளது.
ஜீவனென்பது மூன்று பங்கு மலமுள்ளது.
ஆன்மாவென்பது ஒரு பங்கு மலமுள்ளது.
சிவம் முற்றும் மலம் நீங்கியது.
ஆதலால் மலம் முற்றும் நீங்கித் தயா வடிவமாவதே சிவமாதல்.

## 52. பஞ்சாக்கரம்

சமய சூக்கும பஞ்சாக்கரத்தின் தாத்பரியம் நான்கு, ஷை அக்ஷரம் 5: சிவாயநம- இதற்குத் தாத்பரியம் நான்காவன. பூர்வம், பூர்வபூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் ஆக 4 இதில் பூர்வத்திற்கு அர்த்தம்: சிவனை நமஸ்கரிக்கின்றேன். பூர்வ பூர்வத்திற்குத் தாத்பரியம்: அனாதியில் மலமில்லாது எல்லா முடைய சிவத்திற்கு என்னுடைய கரண உள்ளங்களைச் சமர்ப்பிக்கின்றேன். மற்ற இரண்டிற்கும் அர்த்தம் அனுபவத்தால் தெரியலாம். இதுபோல் மத சன் மார்க்கத் திற்கும் ஷை அக்ஷரமே. அதற்கும் முன்போலவே நான்கு தாத்பரிய முள்ளது. அதில் பூர்வத்திற்குத் தாத்பரியம்: சி என்பது பதி, வா என்பது சத்தி, ய வென்பது ஜீவன், ந வென்பது திரோதை, ம வென்பது மாமாயை; ஆதலால், மாமாயை திரோதை நீங்கி, ஜீவ போத மற்று, அருள் வடிவாய்ச் சிவமாவது. பூர்வபூர்வத்தின் தாத்பரியம்: சி என்பது எல்லாமுடையது, வா என்பது அபிந்நமாகிய அருள், ய வென்பது ஆன்ம சிற்சபை, ந வென்பது சிவன், ம வென்பது பசு; ஆதலால் சுபத்தன்மை கெட்டு, ஜீவபோதம் போய், ஆன்மவியற்கை வடிவாய்ச் சத்துவமயமாய் எல்லா முடையது வாய்ப்பூரணமாய் நிற்றல்: ஒருவாறுஅனுபவத்தில், பரவிந்து பரநாதம் பரத்திலும், அபரவிந்து அபரநாதம் பூர்வத்திலும் வழங்கும். இவ்வளவும் செபமூலமாய்ச் கரணசுத்தி வந்து, அக்ஷர முன்னுதலை விட்டு, அறிவாகிருதியாய், கருணையும் சிவமுமே பொருளெனும்படி நிற்றற்கு முதற்றுவாரமாம். மற்ற உத்தரத்தில் ஏமசித்தியும் உத்தரோதரத்தில் தேகசித்தியும் சொல்லும். இஃது மத சன்மார்க்க அனுஷ்டானம். இதுபோல்

சமயத்திலும் தேகசித்தியும் ஏமசித்தியு முள. மேற்குறித்த சமய மதங்களின் விரிவு அனந்தகோடி. அந்த சித்திகள் யாவும் அவ்வச்சமய மதங்களின் கர்த்தா மூர்த்தி தலைவன் தலைவி முதலியவர்கள் பதப்பிராப்தி வரையிலும் நிற்கும். ஆதலால். மேற்குறித்த இரண்டு சித்தியும் எக்காலத்தும் அழிவுறா திருப்பதாகச் சொல்லுவது சுத்த சன்மார்க்க பூர்வோத்தரம். ஏமசித்தி[1] தேகசித்திஆகிய இவற்றை மேற்குறித்த சூக்கும பஞ்சாக்கரத்தில் சொல்லுவதற்குப் பிரமாணம்:- "சிவாயநம வெனச் செம்பு பொன்னாயிடும்"[2] "சிவாயநமவெனச் சிந்தித்திருப்பார்க்கு அபாய மொருநாளு மில்லை."[3] ஆதலால், மேற்குறித்த அக்கரத்தை மகான்கள் குழூக்குறியாக-வரிவடிவாய்-சுட்டினார்கள். இதை அக அனுபவிகள் தத்துவங்களை அறிந்து, அனுசந்தானஞ்செய்வார்கள். சாத்திகளுக்கு நாவினாலுன்னிக் கரணமோய்ந்தால், தத்துவானு சந்தானஞ் செய்யக்கூடும். உலகிகள் நாவினாலுன்னத் தங்கள் மனோரதம் சித்திக்கும் வகர வித்தை [4]யுடையவர்கள் மேற்படி அக்கரத்தின் உண்மையைப் பவுதிகம். லோகம், ஔஷதி, லவணம், முதலியவற்றிற் சேர்த்து வகரத்தை முடிப்பார்கள். தகர வித்தை [5] யுடையவர்கள் அதுபோலவே அமைத்துக்கொண்டு தேகத்தை நீடிக்கச் செய்வார்கள். ஆதலால் மேற்குறித்த அக்கரங்கள் பரிபாஷை. இதனது உண்மை யாவும் சுத்த சன்மார்க்க சகஜ சாத்திய ஞானானுபவிக்கு விளங்கும்.

## சிவ சிந்தனை

ஓம் சிவாயநம என்று சதா சிந்தித்துக் கொண்டிருத்தல் வேண்டும். இவ்வுலகம் அருட்சத்தி, பொருட்சத்தி, கிரியாசத்தி, யோகசத்தி, ஞானசத்தி மயமாக இருப்பதாகப் பார்த்துக்

1. ஏமசித்தி—பொன் செய்யும் வல்லபம்
2. திருமந்திரம் 903.
3. நல்வழி 15 (ஔவையார்)
4. வகரவித்தை—பொன் செய்தல்
5. தகரவித்தை—தேகசித்தி செய்துகொள்ளல்.

கொண்டிருத்தல் வேண்டும். யோகம் செய்ய வேண்டுவ தில்லை. அதில் அழுந்தி விட்டால் மீளுவது கஷ்டம். சதா சிவக்கலப்பாய்க் கிடந்தாலும் மீளுதல் அருமை, மூடம் உண்டாக்கும். உண்மை.

ஓம் என்னும் எழுத்து பிரணவம் என்று சொல்லப்படும். படைத்தளித் தழிக்க வல்ல தலைவன் என்பதே அந்த ஓங்காரத்தின் பொருள்.

### 53. பிரணவம்

பிரணவத்தின் ஐந்து பாகம் யாவெனில் : அகரம், உகரம், மகரம், விந்து, நாதம். பஞ்சமி என்னும் வாக்கு பிரணவத்தின்கண் இருந்து தோன்றியது. அதற்கு ஸ்தானம் மூலாதாரம். அதிலிருந்து தோன்றிய மற்ற நான்கும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி. இவற்றிற்கு இடம் நாபி, இருதயம், கண்டம் லலாடம்.

### 54. அகரம்

மூலாங்கப் பிரணவமாகிய அகர லக்ஷணம் ஒருவாறு:-

ஊன்றல் வாமை.
சுழித்தல் ஜேஷ்டை.
விசிரிம்பித்தல் ரௌத்திரி
மடித்து மேலேறல் காளி
அங்கிருந்து கீழ்வரல் கலவிகரணி.
மேல் புடைபெயர்த்தல்பலவிகரணி.
கீழ்த்தாழ்ல் பலப்பிரமதனி.
கீழ் ஊன்றி நிற்றல் சர்வபூததமனி.
வரிவடிவாதல் மனோன்மணி.
இதில் விந்து நாதம் முதலிய நவநிலைகளு முள.

அகரமாகிய முதல் எழுத்து உற்பத்தி விவரம்:-




1. விந்து-பெரியவெளிச்சம், சூரியவெளிச்சம்.
2. நாதம்-பெரியநாதம்.
3. பரவிந்து-அதில் பாதி வெளிச்சம், சந்திரவெளிச்சம்.
4. பரநாதம்-நாதம்.
5. அபரவிந்து-வெளிச்சம், நக்ஷத்திர ஒளி.
6. அபரநாதம்-நாதம்.
7. திக்கிராந்தம்-அருகியவெளிச்சம், மின்னல் ஒளி
8. அதிக்கிராந்தம்-சப்தம்.
9. வாமசத்தி
10. ஜேஷ்ட சத்தி.
11. ரௌத்திரி சத்தி
12. காளி சத்தி.

## 55. காயத்ரி

காயத்ரி: கா-ய-த்ரி. க ஜலதத்துவமாகிய ஸ்தூலதேகம், பிரமஸ்வரூபம். ய வாயுதத்துவமாகிய சூக்ஷ்மதேகம், விஷ்ணு ஸ்வரூபம். ஆ-- அக்னிதத்துவமாகிய காரணதேகம். ருத்ரஸ்வரூபம். த்ரி மூன்று. அதாவது, மேற்குறித்த மூன்று

தேகங்களின் ஸ்வரூப ரூப சுபாவ குணங்களை ஐயம் திரிபு மயக்க மின்றிக் கடந்தால், ஜனன மரண சாகரம் நீங்கி நித்தியர் ஆவோம். எப்படியெனில்: காயத்திரி மந்திரத்திற்குப் பாதம் மூன்று. பாதம் ஒன்றிற்கு வர்ணம் எட்டு. ஆக மூன்று பாதத்திற்கும் வர்ணம் இருபத்து நான்கு. பாதம் மூன்றென் பதன் குறிப்பு: ஜீவர்களுக்கு மலம் மூன்று வருணம் இருபத்து நான்கு என்பதன் குறிப்பு இரு-இரண்டு, ஜீவகாருண்யம் தத்துவவிசாரம் ஆகிய இரண்டையும்; பத்து (பற்று)-பிடி, பற்றினால்: நான்கு-நாலாகிய ஜீவகாருண்யம், ஈசுரபக்தி, பாச வைராக்கியம், பிரம ஞானம் ஆகிய இவற்றை அடையலாம். அடைந்து, காயத்ரிமந்திரம் திரிமூர்த்தி ஸ்வரூபமாதலால், இதற்கு அதிதமான பிரமானுபவத்தைப் பெறலாம்.

மேலும், தத்துவ ரேயங்களான மூன்று தேகங்களுக்கும் தத்துவம் யாதெனில்:- வர்ணம் இருபத்து நான்கு. ஆதலால், ஸ்தூல தத்துவம் இருபத்துநான்கு. பாதம் மூன்று, காயத்ரி திரிமூர்த்தி ஸ்வரூபம், இவற்றுள் ஒன்றைக் கொடுக்கவந்தது ஒன்று:- 3, 3, 1 ஆகிய இவற்றைச் சேர்க்க ஏழு ஆகிறது. ஆதலால், சூட்சும தத்துவம் ஏழு. இதற்குச் சத்தி மூன்று . அநுபவசத்தி ஒன்று, சமத்துவம் ஒன்று. ஆக ஐந்து. ஆதலால் காரணதேக தத்துவம் ஐந்து. மேற்குறித்த முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்தால், அனுபவம் விளங்கும். எப்படியனில்:- ஓதயாத் : ஓ ஆன்ம அறிவின்கண், த சத்துவ குணமயமாய், த் அருளனுபவம் பெற்று, யா காயபிரமமதல். ஆதலால், மேற்குறித்த காயத்திரியின் ஸ்வரூபானு பவத்தைப் பெறுதலாம்.

## 56. தத்துவம்

தத்துவமென்பது: தத்+த்வம்=தத்துவம். தத்-அது. அது வென்பது சிவம். த்வம்-அதன்தன்மை. ஆதலால், தத்துவம் என்பது சிவத்தின் தன்மை.

## 57. குடிலை

குடிலை என்பது மூலப் பிரகிருதி.

நேரிடுங்கால் எவ்விதத் தந்திரத்திலாவது தடைசெய்தல், பெரியோரிடத்திற் செல்லுதல்- என்றால்-சாதுக்களிடம் பரிச்சயம் பண்ணுதல் உயிர்க்கு உபகரிக்கும் நிமித்தம் சஞ்சரித்தல், உயிர்க்கு உபகார நிமித்தம் கையால் உபகரித்தல், மலஜல உபாதைகள் அளவு மீறாமலும் கிரமங்குறையாலும் அளவைபோல் தந்திர ஔஷதிகளாலும் ஆகாரப் பக்குவத்தாலும் பவுதிகப் பக்குவத்தாலும் செய்வித்தல் என்னும் கருமேந்திரிய ஒழுக்கமும் ஆகும்.

கரண ஒழுக்கம் என்பது-சிற்சபையின்கண் மனதைச் செலுத்துவது தவிர மற்றெந்தவகை ஆபாசத்திலும் செலுத்தாமல் இழுத்துமேற்குறித்த இடத்தில் நிறத்துதல், பிறர் குற்றம் விசாரியாதிருத்தல், தன்னை மதியாதிருத்தல், செயற்கைக் குணங்களாலுண்டாகிய கெடுதிகளை நீக்கி இயற்கையாகிய சத்துவ மயமாயிருத்தல், பிறர்மேற்கோபியா திருத்தல், தனது சத்ருக்களாகிய தத்துவங்களைக் கோபித்தல், அக்கிரம அதிக்கிரமப் புணர்ச்சி செய்யாதிருத்தல் முதலியவாம்.

ஜீவ ஒழுக்கம் என்பது-எல்லா மனிதரிடத்தும் ஜாதி, சமயம், குலம், கோத்திரம், சூத்திரம், சாத்திரம், தேசம், மார்க்கம், உயர்வு, தாழ்வு, முதலிய பேதமற்றுத் தானக நிற்றல் முதலியவாம்.

ஆன்ம ஒழுக்கம் என்பது- எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களிடத்துமுள்ள ஆன்மாக்களிடத்து இரங்கி, ஆன்மாவே சபையாகவும் அதனுள்ளொளியே பதியாகவும் கண்டு கலந்து பூரணமாக நிற்றல் முதலியவாம்.

இங்ஙனம்கூறிய ஒழுக்கங்களுள்ளே இந்திரிய ஒழுக்கம் கரண ஒழுக்கம் என்னுமிவற்றை நாம் ஒவ்வொருவரும் உண்மை யுணர்ச்சியுடன் மேற்கொண்டு ஒழுகவேண்டும்; ஜீவ ஒழுக்கம் ஆன்ம ஒழுக்கம் என்னும் இரு வகையான அரிய ஒழுக்கங்கள் திருவருட்டுணை பெற்ற பின்னரன்றிக் கைகூடா. ஆதலால், அவ்வொழுக்கங்களைப் பெற்று ஒழுக வேண்டுவதற்கும்ஆன நன்முயற்சிகளில் பழகவேண்டும்.

அன்றியும் :–

இவ்வண்ணமான ஒழுக்கங்களில் இயன்ற மட்டில் ஒழுகப்பெற்று, இடந்தனித்திருத்தல், இச்சையின்றி நுகர்தல், தெய்வம் பராவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப்பணிதல், பத்தி செய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில் பலகால் முயன்று முயன்று பழகிப் பழகி இருத்தல் வேண்டும்.

அன்றியும் :–

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த அளவிறந்த சமயங்களும் அச்சமயங்களிற் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவசித்தி விகற்ப பேதங்களென்றும், அவ்வச்சமயங்களிற் பலபட விரிந்த வேதங்கள், ஆகமங்கள், சாத்திரங்கள், புராணங்கள் முதலிய கலைகள் எல்லாம் தத்துவசித்திக் கற்பனைக் கலைகளென்றும், வேதாந்தம் சித்தாந்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க்க அனுபவ லேசசித்தி பேதங்க ளென்றும் கேள்விப்பட்டிருக்கின்றனம். ஆகலில், அத்திருவார்த்தைகளில் உண்மையான நம்பிக்கை கொண்டு, அவ்வவற்றின் உண்மைகளை உள்ளபடியே உணர்த்தப்பெற்று அவைகளின் அனுபவங்களை அடைதல் வேண்டுவதுபற்றி, அவ்வச்சமய மதாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாது நிற்றலும், அவற்றின் சத்திய உணர்ச்சி கொள்ளாமல் விடுதலும் வேண்டும்.

அன்றியும் :–

உலகியற்கண் பொன் விஷய இச்சை, பெண் விஷய இச்சை, மண் விஷய இச்சை முதலிய எவ்விஷய இச்சைகளிலும் நமது அறிவை ஓர் அணுத்துணையும் பற்றுவிக்காமல், பொதுப்படநல்லறிவு, கடவுள் பக்தி, உயிரக்கம், பொதுநோக்கம், திரிகரண அடக்கம் முதலிய நற்குண ஒழுக்கங்களில் நின்று, உண்மையுரைத்தல், இன்சொல்லாடல், உயிர்க்குபகரித்தல் முதலியவாகக் குறித்த நற்செய்கை களையும் உள்ளபடி பெற்று, சித்திவளாகம் என்னும் இம்மஹா சந்நிதானத்திற்றானே தரிக்கப்பெறவும்; உலகமுகப்பட்ட

பராக்கினால் விலகி ஏமாந்துவிடாமலும்; நமது எல்லாம் வல்ல ஆண்டவனார் அற்புதத் திருவரவுகுறிக்கும் வெளிப்படுகைக்கு எதிர்ப்பார்க்கும் நிலையினராய், எல்லா அண்ட சராசங்களையும் தமது தனித்திருவருட் செங்கோல் கொண்டு நடாத்துவித்தருளும் பேரருட் பெருங் கருணை வாய்ந்த தனிப்பெருந்தலைவரது அரிய திருவருகைச் சம்பந்தமான வழிபடுகை அல்லது மங்கலம்புனைதல் முதலிய திருப் பணியினிடம் நமது கரணேந்திரியங்களை விடுத்துக் குதூகலத்துடன் விந்துவிளக்கம் நாதஒலி என்பவற்றால் புறக்கடையில் விலகப்படாமலும்; ஆண்டவனாரது அருளற்புத ஞான சித்தத்திருமேனியின் மங்கலத் திருக்கோலத்தைக் கண்காட்சியாக உடல் குழைய உள்ளங்குளிர ஆனந்தக் கண்ணீர்கொண்டு பரவசத்துடன் தரிசிக்கப் பெறும், பெரும் புண்ணிய முடையவர்களாய் எதிர்பட வாய்க்கப்பெறவும் நின்றோமே யானால்:

நாம் எல்லவரும் சுத்த சன்மார்க்கத்தினுக்கு உரிமையுடையவர்களாகி, அறிவுவந்தகால முதல் கண்டறியாத அற்புதக் காட்சிகளையும் கேட்டறியாத அற்புதக் கேள்விகளையும், அறிந்தறியாத அற்புத அறிவுகளையும், அடைந்தறியாத அற்புதக் குணங்களையும், செய்தறியாத அற்புதச் செயல்களையும், அனுபவித்தறியாதஅற்புத அனுபவங்களையும் வெளிப்படத் தரிசிக்கும் அதே கணத்தின் உள்ள- பெற்றுப் பெருங் களிப்புடன் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் தடைபடாத சத்திய சுகபூரணப் பெருவாழ்வு என்னும் பேரின்ப சித்திப் பெருவாழ்வில் வாழப் பெறுவோம்.

இது சத்தியம், இது சத்தியம், இது சத்தியம்.

இங்ஙனம் நமது ஆண்டவரால் விரித்து விவகரிக்கப்பட்ட மலையிலக்கான பொய்யாப் பெருமொழி யென்னும் கருணாரசத்தின் வெள்ளப் பெருகத்தில் ததும்பி வழிந்த மந்திரத் திருவருண் மெய்ம்மொழிகளின் சுருக்கம்.

**திருச்சிற்றம்பலம்**

**திருவருண்மெய்ம்மொழி முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்

# 6. பேருபதேசம்

ஸ்ரீ முக வருஷம், ஐப்பசி மாதம், 7ஆம் நாள், புதவாரம், பகல் 8 மணிக்கு,மேட்டுக்குப்பம் என்னும் சித்திவளாகத் திருமாளிகையில் முதன் முதலில் கொடி கட்டினவுடனே நடந்த நிகழ்ச்சியின் குறிப்பு.

இங்குள்ள நீங்கள் எல்லவரும் இதுவரைக்கும் இருந்தது போல் இனியும் வீண்காலம் கழித்துக் கொண்டிராதீர்கள். இது முதல் சாலைக்கு* ஆண்டவர் போகின்ற -பத்துத் தினமாகிய கொஞ்சக் காலம்- வரையில், நீங்கள் எல்லவரும் நல்ல விசாரணையில் இருந்து கொண்டிருங்கள். அந்த விசாரணை எதுவென்றால்; நம் நம்முடைய நிலை எப்படிப்பட்டது? நமக்கு மேல் நம்மை அதிஷ்டிகின்ற தெய்வத்தினுடையநிலை எப்படிப்பட்டது? என்று விசாரிக்க வேண்டியது. அதற்குத்தக்கபடி, நீங்கள் ஒருமித்தாவது, அல்லது தனித்தனியாகவாவது, உங்களறிவிற்கும் ஒழுக்கத்துக்கும் ஒத்தவர்களுடன் கூடியாவது, அல்லது வேலாயுத முதலியாரைக் கேட்டால் மனுஷ்யதரத்தில் போதுமான வரையில் சொல்லுவார் - அவரிடம் அப்படிக் கேட்டாவது நல்ல விசாரணையிலிருங்கள். அல்லது, தனியாகவும் விசாரிக்கலாம். இவ்விசாரணை முகத்திலிருந்தால், நமது ஆன்மஅறிவை விளக்கமின்றி மூடிக் கொண்டிருக்கின்ற அனந்தத் திரைகளில் அழுத்தமாயிருக்கின்ற முதல் திரையாகிய பச்சைத்திரை முதலில் நீங்கி விடும். அது நீங்கினால், மற்றத் திரைகள் அதிக விரைவில் நீங்கிப்போய்விடும். அந்தப் பசுமை வர்ணம் எப்படிப்பட்டதென்றால், கருமைக்கு முதல் வர்ணமான பசுமை இருக்கின்றது. இப்படிப்பட்ட அழுத்தமான திரை நீங்கவேண்டுமென ஸ்தோத்திரித்தும், தெய்வத்தை நினைத்தும், நமது குறையை ஊன்றியும்-இவ்வண்ணமாக, இருக்கின்றபோதும் படுக்கின்றபோதும் இடைவிடாது இவ்விசாரத்தோடு ஆண்டவர் நமக்குண்மை தெரிவிக்க வேண்டுமென்கின்ற முயற்சியுடனிருந்தால் தெரிய வேண்டியதைத்

தெரிந்துகொள்ளலாம்.

அவ்விசாரம் பரம், அபரம் என்று இரண்டு வகையா யிருக்கின்றது. இவற்றில் பரம் பரலோக விசாரம், அபரம் இகலோக விசாரம். இவ்விரண்டில் இகலோக விசாரம் விசார மல்ல. சாதாரணமாக ஒருவன் வி -- சாரம் செய்து கொண்டிருக்கின்றானே யென்றால், அவ்விசாரம் விசாரமாகாது, உண்மை விசாரமுமல்ல. ஏனெனில்:- விசார மென்கின்றதற்குப் பொருள்:- வி - சாரம் என்பதில் வி சாதாரண உலக விசாரத்தை மறுக்க வந்தது; அது மேலும் பரலோக விசாரத்தையே குறிக்கும் பொருட்டு வந்தது. ஜலத்திலிருக்கின்ற பாசியை நீக்குவது போல், நமது ஆன்மாவைத் தெரியவொட்டாமல் மூடியிருக்கின்ற பச்சைத் திரையாகிய ராகாதிகளை விசார அதியுஷ்ணத்தாலல்லது, மற்ற உஷ்ணங்களால் நீக்கமுடியாது. அந்த உஷ்ணம் யோகியினுடைய அனுபவதில் தெரியும். அதை மனுஷ்ய தரத்தில் உண்டு பண்ணுவதற்குத் தெரியாது. அந்த விசாரத்தைவிட ஆண்டவரை ஸ்தோத்திரம் செய்கின்றதிலும் தெய்வத்தை நினைகின்றதிலும் அதிக உஷ்ணம் உண்டாகும். யோகிகள் வனம், மலை, முழை முதலியவற்றிற்குப் போய், நூறு, ஆயிரம் முதலிய வருஷகாலம் தவஞ் செய்து, இவ்உஷ்ணத்தை உண்டு பண்ணிக் கொள்ளுகிறார்கள். இப்படித் தவம் செய்து உஷ்ணத்தை உண்டு பண்ணிக் கொள்ளுகிறதைப் பார்க்கிலும், தெய்வத்தை ஸ்தோத்திரம் செய்கின்றதிலும் நினைக் கின்றதிலும், இதை விடக் கோடிப் பங்கு, பத்துகோடிப் பங்கு அதிகமாக உஷ்ணம் உண்டு பண்ணிக் கொள்ளலாம். எவ்வாறெனில்: ஒரு ஜாம நேரம், மனத்தில் இக விசார மின்றிப் பர விசாரிப்புடன் ஆன்ம நெகிழ்ச்சியோடு தெய்வத்தைச் சிந்தித்துக் கொண்டாவது அல்லது ஸ்தோத்திரம் செய்து கொண்டாவ திருந்தால், நாம் பெற வேண்டியதைப் பெற்றுக் கொள்ளலாம். ஆதலால், இவ்வுலகத்தில் வி -- சார மென்கின்ற உண்மை தெரியாது, விசாரமென்று வழங்கி, அதைத்துக்க மென்றே சொல்லு

வார்கள். நாம் அப்படி அர்த்தம் பண்ணக் கூடாது. அவர்கள் பண்ணுகின்றது-துக்கமே விசார மென்கின்றது- அது தப்பு; அவ்வர்த்தமுமன்று. சார மென்கின்றது துக்கம். வி -- சார மென்கின்றது துக்க நிவர்த்தி. வி -- உபசர்க்கம். சாரமென்கின்ற துக்கத்தை நிவர்த்தித்து ஆதலால், விசார மென்கின்றது முன் சொன்னபடி பரலோக விசாரத்தையே குறிக்கின்றது. ஆதலால் இடைவிடாது நாம் விசார வசத்தரா யிருக்க வேண்டியது. மேலும் வி -- சார மென்பது :- வி -- விபத்து; சாரம் -- நீக்குதல், நடத்தல். ஆதலால் இடைவிடாது நன்முயற்சியின்கண் பயிலுதல் வேண்டும்.

மேலும், சிலர் "இது ஆண்டவர் வருகின்ற தருணமாக இருக்கின்றதே! இத்தருணத்தில் முயற்சி செய்வானேன்? ஆண்டவர் வந்தவுடனே பெற வேண்டியதை நாம் பெற்றுக்கொள்ளபடாதோ?" என்றுவினவலாம். ஆம், இஃது-தாம் வினவியது நலந்தான். ஆண்டவர் வரப்போகின்றதும் சத்தியந்தான். நம்மவர்களின் திரை நீங்கப் போகின்றதும் சத்தியந்தான். நீங்களெல்லவரும் பெற வேண்டியதைப் பெற்றுக்கொள்ளுகின்றதும் சத்தியந்தான். ஆனால், முன் சொன்ன ரகசம்பந்தமான பச்சைத்திரை இரண்டு கூறாக இருக்கின்றது. யாவெனில்:- அசுத்தமாயாதிரை, சுத்தமா யாதிரை யென்னும் இரண்டுமாம். இவை கீழ்ப்பாகத்திலொரு கூறும் மேற்பாகத்திலொரு கூறுமாக இருக்கும். கீழ்ப்பாகத்தி லுள்ளது அசுத்தமாயதிரை. மேற் பாகத்தில் சுத்தமாயாதிரை இருக்கும். இவற்றில் அசுத்தமாயாதிரை இகலோக போக லக்ஷிய முடையது. சுத்தமாயாதிரை பரலோக சாத்தியத்தையுடையது. இவற்றில்-ஆண்டவர் வந்து அனுக்கிரகஞ் செய்கின்ற போது, முயற்சியில்லாத சாதாரண மனுஷ்யர்களுடைய கீழ்ப்பாகத் திலிருக்கின்ற அசுத்தமாயை யென்னும் பச்சைத்திரையை மாத்திரம் நீக்குவார். ஆதலால், அக்காலத்தில் நாம் அத்திரை நீங்கியவுடன் கூடிய வரையில் சுத்தமாய்ப் புனிதர்களாக இருக்கலாமேயல்லது, பெற வேண்டியதைப் பெற்றுக் கொள்ளு கிறதற்குக் கூடாது. மேலும், பஞ்சகிருத்திய விபவங்களும் இதர

சித்தி முதலியவையும் ஆன்மானுபவத்தையும் செய்யவும் பெறவும் கூடாது. பின்னும் நன்முயற்சி செய்தே மேலேற வேண்டும்.

மேலும், இத்தருணம் இங்கு உண்டாகும் கூச்சல் முதலியவையும் அடுத்தவர்களுக்குப் பக்குவம் வருவிக்கவும் பாவிகளை விலக்கவும் உண்டாயின. ஆதலால் நாம் எல்லவரும் இத்தருணம் இப்போதே விசேஷ நன்முயற்சியுடனே இருந்தால், ஆண்டவர் வருகின்றபோது, நம் கீழ்ப் பாகத்திலுள்ள அசுத்தமாயாதிரையோடு கூடி மேற்பாகத்திலிருக்கின்ற சுத்தமாயையினுடைய பச்சைத் திரையும் நீங்கிப்போய்விடும். கருமையிற் பச்சை வண்ண முடையது அசுத்தமாயாதிரை. பொன்மையிற் பச்சை வண்ண முடைய சுத்தமாயாதிரை. நீங்கினபிறகு, மற்ற எட்டுத் திரைகளும் அதிக விரைவில் நீங்கிப் போய்விடும். இத்திரைகளின் விவரத்தைத் திருவருட்பெருஞ்ஜோதி அகவலில் கண்டுணர்க. மேலும், இது நீங்கினவுடனே ஒருவன் பஞ்சகிருத்திய முதலானவையுஞ் செய்வான். ஆதலால், ஒவ்வொருவரும் முயற்சியுடனே இருந்தால், அதற்குத் தக்க லாபத்தைப் பெற்றுக்கொள்ளலாம்.

இதற்கு மேற்பட, நாம் நாமும் முன் பார்த்தும் கேட்டும் லக்ஷியம் வைத்துக்கொண்டிருந்த **வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய கலைகள் எதனிலும் லக்ஷியம் வைக்கவேண்டாம்.** ஏனென்றால், அவைகளில் ஒன்றிலாவது குழூஉக்குறி யன்றித் தெய்வத்தை இன்னபடி என்றும், தெய்வத்தினுடைய உண்மை இன்னதென்றும், கொஞ்சமேனும் புறங்கவியச் சொல்லாமல், மண்ணைப் போட்டு மறைத்து விட்டார்கள். அணுமாத்திரமேனுந் தெரிவிக்காமல், பிண்ட லக்ஷணத்தை அண்டத்தில் காட்டினார்கள். யாதெனில்: கைலாசபதி என்றும் வைகுண்டபதி என்றும் சத்தியலோகாதிபதி யென்றும் பெயரிட்டு, இடம், வாகனம், ஆயுதம், வடிவம், ரூபம் முதலியவையும் ஒரு மனுஷ்யனுக்கு அமைப்பதுபோல் அமைத்து, உண்மையாக இருப்பதாகச்

சொல்லி யிருக்கின்றார்கள். "தெய்வத்துக்குக் கை, கால் முதலியன இருக்குமா?" என்று கேட்பவர்க்குப் பதில் சொல்லத் தெரியாது விழிக்கின்றார்கள். இஃது உண்மையாக இருப்பதாகவே முன்னும் பின்னும் உள்ள பெரியவர்களென்று பெயரிட்டுக் கொண்டிருந்தவர்களும் உண்மையை அறியாது, அப்படியே கண்ணை மூடிக்கொண்டு உளறியிருக்கிறார்கள். ஆனால், ஆதியிலே இதை மறைத்தவன் ஓர் வல்லவன். அவன் மறைத்ததை இதுவரைக்கும் ஒருவரும் கண்டபாடில்லை. அவன் பூட்டிய அந்தப் பூட்டை ஒருவரும் திறக்க வில்லை. இதுவரைக்கும் அப்படிப்பட்டவன் பூட்டிய பூட்டை உடைக்க ஒருவரும் வரவில்லை. அவைகளில் ஏகதேச கர்மசித்திகளைக் கற்பனைகளாகச் சொல்லியிருக்கின்றார்கள். அதற்காக ஒவ்வொரு சித்திக்கும் பத்து வருஷம் எட்டு வருஷம் பிரயாசை எடுத்துக்கொண்டால், அற்ப சித்திகளை அடையலாம். அதற்காக அவற்றில் லக்ஷியம் வைத்தால், ஆண்டவரிடத்தில் வைத்துக் கொண்டிருக்கின்ற லக்ஷியம் போய்விடும். ஆண்டவரிடத்தில் வைத்த லக்ஷியம் போய் விட்டால் நீங்கள் அடையப்போகின்ற பெரிய பிரயோஜனம் போய்விடும். அல்லது, அதில் முயற்சிசெய்து, அவ்வளவு காலம் உழைத்து, அந்த அற்பப்பிரயோஜனத்தைத் தெரிந்து கொண்டு, அதனால் ஒரு லாபத்தை ஏகதேசம் அடைந்தால், முக்கிய லாபம் போய்விடும். ஆகையால், அவைகளில் லக்ஷியம் வைக்காமல், ஆண்டவரிடத்திலேயே லக்ஷியம் வைக்க வேண்டியது. முன் சொன்ன ஏகதேச சித்தி கற்பனை யென்கின்றது வாசகப் பெருவிண்ணப்பத்தாலும் இயல் வேதாகமங்கள் புராணங்கள் என்ற அருள்விளக்கமாலைப் பாசுரத் தாலு முணர்க.* மேலும் அதிற்கண்ட குறிப்பையுந் தெரிந்து கொள்ளுங்கள்.

* இயல்வே தாகமங்கள் புராணங்கள் இதி காசம்
இவைமுதலா இந்திரசா லங்கடையா உரைப்பார்
மயல்ஒருநூல் மாத்திரந்தான் சாலம் என அறிந்தார்
மகனே நீ நூலனைத்தும் சாலம் என அறிக
செயல்அனைத்தும்அருளொளியால் காண்கஎன எனக்கே
திருவுளம்பற் றியஞான தேசிகமா மணியே —திரு அருட்பா 4176

இது போல் வியாகரணம், தொல்காப்பியம், பாணிநீயம் முதலியவைகளில் சொல்லிருக்கின்ற இலக்கணங்கள் குற்றமே. எவ்வாறெனில் தொண்ணூறு தொள்ளாயிரம் என்கின்ற கணிதத்தின் உண்மையை நான் சொன்ன பிறகு தெரிந்து கொண்டீர்களல்லவா? இப்படியே ஒன்று, இரண்டு, முதல் நூறு முதலான இலக்கங்களுக்கும் உகர இறுதி வருவானேன்? ஒருவாறு சித்தர்கள் காரணப் பெயராக இட்டிருக்கிறார்கள். தொல்:- நூறு தொண்ணூ றென்றும், தொல்:- ஆயிரம் தொள்ளாயிரமென்றும் வழங்குகின்றன. தொல் என்பது ஒன்று குறையத் தொக்கது. தொன்மை தொல் லெனப் பிரிந்தது. வழக்கத்தில் தொள்ளாயிரம் தொண்ணூறு என மருவியது. இதற்குப் பத்திடத்திற்கு ஓரிடம் குறைந்த முன் ஆயிரமென்றும், ஒன்று குறைந்த பத்தென்றும் ஒருவாறு கொள்க. இப்படி நான் சொன்னது போல் சொன்னால் சிறு குழந்தைகள் கூட அறிந்து கொள்ளும்.

இதுபோல், சைவம், வைணவம் முதலிய சமயங்களிலும், வேதாந்தம், சித்தாந்தம் முதலிய மதங்களிலும் லக்ஷியம் வைக்க வேண்டாம். அவற்றில் தெய்வத்தைப் பற்றிக் குழூஉக் குறியாகக் குறித்திருக்கின்றதே அன்றிப் புறங்கவியச் சொல்லவில்லை. அவ்வாறு பயிலுவோமேயானால் நமக்கு காலமில்லை. ஆதலால் அவற்றில் லக்ஷியம் வைக்கவேண்டாம். ஏனெனில், அவைகளிலும்-அவ் வச்சமய மதங்களிலும்- அற்பப் பிரயோஜனம் பெற்றுக் கொள்ளக்கூடுமே யல்லது, ஒப்பற்ற பெரிய வாழ்வாகிய இயற்கையுண்மை என்னும் ஆன்மானு பவத்தைப் பெற்றுக் கொள்கின்றதற்கு முடியாது. ஏனெனில் நமக்குக் காலமில்லை. மேலும், இவைகளுக் கெல்லாம் சாக்ஷி நானேயிருக்கின்றேன். நான் முதலில் சைவ சமயத்தில் லக்ஷியம் வைத்துக் கொண்டிருந்தது இவ்வளவு வென்று அளவு சொல்லமுடியாது. அது பட்டணத்துச் சுவாமிகளுக்கும் வேலாயுத முதலியாருக்கும் இன்னும் சிலருக்கும் தெரியும். அந்த லக்ஷியம் இப்போது எப்படிப் போய்விட்டது. பார்த்தீர்களா! அப்படி லக்ஷியம் வைத்ததற்குச் சாக்ஷிவேறே

வேண்டியதில்லை. நான் சொல்லி யிருக்கிற-திருவருட்பாவில் அடங்கி யிருக்கிற-ஸ்தோத்திரங்களே போதும். அந்த ஸ்தோத்திரங்களையும் மற்றவர்களுடைய ஸ்தோத்தி ரங்களையும் சபைக்குக் கொண்டு வந்தால், அவைகளே சாக்ஷி சொல்லிவிடும். ஏன் அவ்வளவு மிகுந்த அழுத்தம் எனக்கு அப்போது திருந்த தென்றால், அப்போது எனக்கு அவ்வளவு கொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது.

இப்போது ஆண்டவர் என்னை ஏறாத நிலைமேல் ஏற்றியிருக்கின்றார். எல்லாவற்றையும் விட்டு விட்டதினால் வந்த லாபம் இது. ஆதலால் நீங்களும் விட்டு விட்டீர்களா ஆனால், என்னைப் போல் பெரிய லாபத்தைப் பெறுவீர்கள். இதுவரைக்கும் விடாமல் வைத்துக் கொண்டிருந்தவர்கள் ஏதாவது லாபத்தைப் பெற்றுக் கொண்டார்களா? பெற்றுக் கொள்ளவில்லை. நான் அப்படி அந்தச் சமயத்தில் வைத்திருந்த லக்ஷியமே என்னை இந்த நிலையில் தூக்கி விட்டதென்றாலோ, அந்த லக்ஷியம் தூக்கி விடவில்லை. என்னை இந்த இடத்துக்குத் தூக்கிவிட்டது யாதெனில்; அக்காலத்திலேயே எனக்குத் தெரிவிக்க வேண்டியதைத் தெரிவித்தாரென்று வாசகப் பெரு விண்ணப்பத்திலும், "எத்தேவரையும் நின் சாயையாய்ப் பார்த்ததேயன்றித் தலைவவே றெண்ணியதுண்டோ*'' என, "தேடியதுண்டு நினதுருவுண்மை" என்னும் தொடக்கமுடைய பதிகத்திலும் விண்ணப்பித்திருக்கின்றேன். மேலும் அவர் தெரிவித்த உண்மைப் பெருநெறி ஒழுக்கம்யாதெனில். " கருணையும்

---

* மாயையாற் கலங்கி வருந்திய போதும்
வள்ளல்உன் தன்னையே மதித்துன்
சாயையாப் பிறரைப் பார்த்ததே அல்லால்
தலைவ வேறெண்ணிய துண்டோ
தூயபொற் பாதம்அறியநான் அறியேன்
துயர் இனிச் சிறிதும்இங் காற்றேன்
நாயகா எனது மயக்கெலாம்தவிர்த்தே
நன்றருள் புரிவதுன் கடனே. - திருஅருட்பா 3635

சிவமே பொருளெனக் காணும் காட்சியும் பெறுக" **என்றது தான். என்னை யேறா நிலைமிசை யேற்றி விட்டது யாதெனில் தயவு. தயவு என்னுங் கருணைதான் என்னைத் தூக்கி விட்டது.

அந்தத் தயவுக்கு ஒருமை வரவேண்டும். அந்த ஒருமை இருந்தால் தான் தயவு வரும். தயவு வந்தால்தான் பெரிய நிலைமேல் ஏறலாம். இப்போது என்னுடையஅறிவு அண்டாண்டங்களுக்கு அப்பாலும் கடந்திருக்கிறது. அது அந்த ஒருமையினாலேதான் வந்தது. நீங்களும் என்னைப்போல் ஒருமையுட னிருங்கள். என்னிடத்தில் ஒருவன் வசப்படாத முரட்டுத்தனமாய் எப்படி யிருந்தாலும், அவனுக்கு நல்ல வார்த்தை சொல்லுவேன்; மிரட்டிச் சொல்லுவேன்; தெண்டன் விழுந்து சொல்லுவேன்; பொருளைக் கொடுத்து வசப்படுத்துவேன்; அல்லது ஆண்டவரை நினைத்துப் பிரார்த்தனை செய்வேன். இப்படி எந்த விதத்திலேயாவது நல்வழிக்கு வரச் செய்து விடுவேன்.

நீங்கள் எல்லவரும் இப்படியே செய்தல் வேண்டும் இராத்திரிகூட "நான் இல்லாமல் இந்த ஜனங்கள் க்ஷணநேரம் இருக்க மாட்டார்களே என்று, என்று..." ஆண்டவரிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டேன். அது இங்கே இருக்கின்ற ஜனங்கள் மட்டில் மாத்திரம் மல்ல. உலகத்திலிருக்கின்ற எல்லா ஜனங்களையும் குறித்தே விண்ணப்பித்துக் கொண்டேன். ஏன் அப்படி ஆண்டவரிடத்தில் விண்ண பித்துக் கொண்டேன். என்றால்: எல்லவரும் சகோதரர்களா தலாலும், இயற்கை யுண்மை யேகதேசங்க ளாதலாலும், நான்

---

** கருணையும் சிவமே பொருள்எனக் காணும்
காட்சியும் பெறுகமற் றெல்லாம்
மருள்நெறி எனநீ எனக்கறி வித்த
வண்ணமே பெற்றிருக் கின்றேன்
இருள்நெறி மாயை வினைகளால் கலக்கம்
எய்திய தென்செய்வேன் எந்தாய்
தெருள்நிலை இன்றிக் கலங்கினேன் எனினும்
சிறுநெறி பிடித்த தொன்றிலையே. – திருஅருட்பா 3503

அங்ஙனம் ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை வைத்துக் கொண்டிருக்கின்றேன்.

இப்போது நீங்கள் -இதுவரைக்கும் ஒழுக்கத்துக்கு வராமல் எவ்வளவு தாழ்ந்த மனுஷ்யர்களா யிருந்தாலும்- சாலைக்குப் போகக் கொஞ்ச தின மிருக்கின்றது-அதற் குள்ளாக நீங்கள் நீங்களும் நல்லொழுக்கத்திற்கு வருவதோடுகூட, மற்றவர்களையும் நமது ஒழுக்கத்திற்கு வரும்படி எவ்வி தத்தந்திரமாவது செய்து நம்மவர்களாக்கிக் கொள்ள வேண்டியது. நீங்கள் கொஞ்ச தினத்துக்கு அப்படிச் செய்து கொண்டிருங்கள். நானும் ஆண்டவரிடத்தில் இவ்வுலகத்தில் உள்ள எல்லா ஜீவர்களும் நன்மையடையப் பிரார்தித்தும், ஆண்டவரிடத்தில் கேட்டுக்கொண்டும் வருகின்றேன். அதலால், நீங்கள் அப்படிச் செய்துகொண் டிருங்கள்.

சமயந் தவிர மதங்களில் உள்ள வேதாந்தி, சித்தாந்தி, யென்று பெயரிட்டுக்கொண்ட பெரியவர்களும் உண்மை அறியாது, சமயவாதிகளைப் போலவே ஒன்று கிடக்க ஒன்றை உளறுகிறார்கள். ஆதலால் நீங்கள் அஃது ஒன்றையும் நம்பவேண்டாம் எவைகளிலும் தெய்வத்தைப் புறமுகமாகப் புலப்படச் சொல்லவில்லை. " தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாது இவ்வுலகத்தார் என்னைத் தெய்வமெனச் சுற்றுகின்றார்கள். ஐயோ! நம் சகோதரர்கள் தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாததினாலே யல்லவா நம்மைச் சுற்றுகிறார்கள்! " என்று நான் உள்ளும் புறமும் பரிதாபப் பட்டுக் கொண்டே இருந்தேன்," இருக்கின்றேன், இருப்பேன். தெய்வத்தை ஏன் தெரிந்துகொள்ள வில்லை யென்றால்: ஒரு பதார்த்தத்தை அனுபவித்தாலல்லது அந்தப் பதார்த்தினுடைய ருசி தெரியாது. ருசி தெரியாத பதார்த்தத்தின் மேல் இச்சை போகாது. அதுபோல், தெய்வத்தை உள்ளபடி அனுபவித்தா லல்லது, தெய்வத்தினிடத்தில் பிரியம் வராது. ஆதலால், தெய்வத்தைத் தெரிந்து கொள்ளவேண்டு மென்கிற முக்கிய லக்ஷியத்திலிருந்து கொண்டு விசாரஞ் செய்துகொண் டிருங்கள்.

அந்த விசாரம் செய்வது எப்படியென்றால்: அண்டத்தில் சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள்- இவைகள் எப்படிப்பட்டன? இவைகளினுடைய சொரூப சுபாவம் என்ன? இவை முதலான அண்ட விசாரமும், பிண்டத்தில் நாம் யார்? இத்தேகத்தின்கண் புருவம் கைம்மூலம்-இவைகளிலும் இவை போன்ற மற்ற இடங்களிலும் உரோமம் உண்டாவானேன்? நெற்றி முதலான இடங்களில் அது தோன்றாதிருப்ப தென்ன? கால் கைகளிலுள்ள விரல்களில் நகம் முளைத்தலும் அந்நகம் வளர்தலும்-இவை போன்ற மற்றத் தத்துவங்களினது சொரூப, ரூப சுபாவங்களும் என்ன வென்றும் பிண்ட விசாரமுஞ் செய்துகொண்டிருங்கள். இப்படி இடைவிடாது விசாரஞ் செய்துகொண் டிருந்தால், இவ்வுலகத்தின்கணுள்ள ஜனங்கள் அதைக் குறித்துக் ஏளனமாகச் சொல்லுவர்கள். அப்படிச் சொல்வது அவர்களுக்குச் சுபாவம். ஏனெனில், அவர்களுக்கு உண்மைதெரியாது. ஆதலால் நீங்கள் அதை லக்ஷியம் செய்யக்கூடாது.

இப்படியே " காதில் இரண்டு பெரிய பொத்தல் செய்து வர விடுத்தவர்- ஆணுக்குக் கடுக்கனிடுதலும் பெண்ணுக்கு மூக்குத்தி முதலியவை போடுதலும் தமக்கு சம்மதமானால்- காதிலும் மூக்கிலும் அதற்கு வேண்டிய பொத்தல்களிட்டு வரவிட்டிருக்க மாட்டாரா" என்று விசாரித்துத் தெரிந்து கொள்ளுகின்ற பக்ஷத்தில், காதில் கடுக்கனிடவும் மூக்கு முதலியவற்றில் நகையிடவும் சம்மதம் வருமா? இப்படி விசாரித்துப் பிரபஞ்ச போகத்தின்கண் அலக்ஷியம் தோன்றினால், நிராசை உண்டாம், ஆதலால், சரியை, முதலிய சாதகம் நான்கில், நான்காவது இனத்தில் சரியை, கிரியை யோகம், ஞானம் என்கின்ற நான்கில் மூன்றாவது படியாகி ஞானத்தில் யோகம் செய்கின்ற பலனாகிய நிராசை யென்னும் படி உண்டாகின்றது. ஆகையினாலே, இந்த விசாரத்திலிருந்து கொண்டிருங்கள்.

இவ்விசாரஞ் செய்துகொண்டிருந்தால், ஆண்டவர் வந்தவுடனே கண்டமாக உங்களுக்குத் தெரிவிக்க

வேண்டியதைத் தெரிவிப்பார். மறுபடியும் உங்களுக்கு உரிமை வந்தவுடனே அகண்டமாகத் தெரிவிப்பார். ஆதலால் நீங்கள் இந்த முயற்சியிலிருங்கள். இரண்டரை வருஷமாக நான் சொல்லிக்கொண்டு வந்தேன். இனிச் சொல்பவர்கள் சில நாள் தடைப்பட்டிருப்பார்கள். நீங்கள் இது வரைக்கும் இருந்தது போல் இராதீர்கள். இது கடைசி வார்த்தை. இது முதல்-கொஞ்ச காலம்-சாலைக்குப்போகின்ற வரைக்கும், ஜாக்கிரதையாக மேற்சொன்ன பிரகாரம் விசாரஞ் செய்துகொண் டிருங்கள்.

மேலும், சமய மதங்களில் தெய்வத்தினது உண்மையைக் குழூஉக்குறியால் குறித்து, அக்குறிப்பையும் வெளிப்படையாகக் காட்டாது சிவாயநம என்றும், நமசிவாய என்றும், இது போன்ற அனந்த வர்ணங்களைச் சேர்த்து ஒன்று, இரண்டு, மூன்று, ஐந்து, ஆறு, எட்டு, பத்து, பதின்மூன்று, பதினைந்து, பதினாறு இருபத்து நான்கு முதலிய சங்கையில் மந்திரங்களாய் அமைத்து வழங்கி வருவிக்கவிட்டு நடந்து வருகின்றது. அவ்வவ் மந்திரங்களின் அர்த்தம் பலவாக விரியும் ஆதலால்... நாம் அடைய வேண்டுவது முடிவான ஆன்மலாப மாகிய சிவானுபவமே யன்றி வேறில்லை. இங்குள்ள எல்லவர்க்கும் சுவர்க்க நரக விசாரமில்லை. சுவர்க்க நரக விசாரமுள்ளவர்கள் தங்கள் கருத்தின்படி பலவகைச் சாதனங்களைச் செய்து அற்ப பிரயோஜனத்தைப் பெற்று, முடிவில் தடைப்பட்டுத் திருவருட்டுணையால் கருணை நன் முயற்சி யெடுத்துக் கொண்டு, பின் முடிவான சித்தி இன்பத்தைப் பெறுவார்கள். அஃது அருமை.

இத்தருணம் ஆண்டவர் எல்லாவற்றையும் நீக்கி, எல்லோரும் மேலான இன்பத்தை அடையும் பொருட்டு , முடிவான இன்பானுபவத்திற்குச் சாதக சகாயமான திருவருள் மகாவாக்கியத் திருமந்திரத்தை- தமது உண்மையை வெளிப்படக் காட்டும் மகாமந்திர வாக்கியத்தை--எனக்கு வெளியிட்ட அவ்வண்ணம், எனது மெய்யறிவின்கண் அனுபவித்தெழுந்த-- உண்மையறிவனுபவானந்த இன்பத்தை நீங்கள் எல்லவரும் என்போல் ஐயம், திரிபு, மயக்கம்இன்றி அடைய என்னுள்ளே எழுந்து பொங்கிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையைப் பற்றிக் குறிப்பித்தேன் குறிப்பிக்கின்றேன்; குறிப்பிப்பேன்.

நமது ஆண்டவர் கட்டளை யிட்டது யாதெனில் நமக்கு முன் சாதனம் கருணை யானதினாலே, ஆண்டவர் முற்சாதனமாக

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

என்னும் திருமந்திரத்தை வெளிப்படையாக எடுத்துக் கொண்டார். தயவு, கருணை, அருள் என்பவை ஒரு பொருளையே குறிக்கும். ஆதலால் பெரிய தயவுடைய அறிவே பூரண இன்பமாம். அது ஒப்பற்ற பெருந் தயவுடைய பேரறிவேயாம். இஃது வாச்சியார்த்தம். இவ்வண்ணம் சாதனம் முதிர்ந்தால், முடிவான இன்பானுபவம் பெறுவதற்குத் தடையில்லை. "சந்தமும் வேதமொழி யாதொன்று பற்றின் அதுதான் வந்து முற்றும்"* என்னும் பிரமாணத்தால் உணர்க.

மேலும், இதுகாறும் தெய்வத்தின் உண்மையைத் தெரியவொட்டாது, அசுத்த மாயாகாரிகளாகிய சித்தர்கள் மறைத்து விட்டார்கள். சுத்தமாயாகாரியாகிய தெரிந்த பெரியோரும் இல்லை. சன்மார்க்கமும் இல்லை. சன்மார்க்கம் இருந்தால், அனுபவித்தறியாத அனுபவமும் கேட்டறியாத கேள்வியும் நாம்கேட்டிருப்போம். மேலும் இறந்தவர்கள் மீளவும் எழுந்து வந்திருப்பார்கள். ஆதலால், கேட்டறியாத கேள்விகளைக் கேட்கும்படி ஆண்டவர் செய்தது இத் தருணமே. ஆதலால் இத்தருணம் இக்காலமே சன்மார்க்கக் காலம்.

இதற்குச் சாட்சியாக இப்போதுதான் சன்மார்க்கக் கொடி கட்டிக்கொண்டது. அக்கொடி இப்போதுதான் கட்டிக்கொண்டது. அக்கொடி உண்மையில் யாதெனில்:- நமது நாபி முதல் புருவமத்தி ஈறாக ஒரு நாடி யிருக்கின்றது; அந்த நாடி நுனியில் புருவமத்தியின் உட்புறத்தில் ஓர் சவ்வு தொங்குகின்றது; அதன் அடிப்புறம் வெள்ளை வர்ணம்; மேற்புறம் மஞ்சள் வர்ணம்; அச் சவ்வின் கீழ் ஓர் நரம்பு ஏறவும் இறங்கவும் இருக்கின்றது; இக்கொடி நம்அனுபவத்தின்கண் விளங்கும். இவ்அடையாளக் குறிப்பாகவே இன்றைய தினம்

* தாயுமான சுவாமிகள்–கருணாகரக்கடவுள்–7.

வெளி முகத்தில் அடையாள வர்ணமான கொடி கட்டியது. இனி எல்லவர்க்கும் நல்லஅனுபவம் அறிவின்கண்தோன்றும்.

உண்மை சொல்ல வந்தனனே என்று உண்மை சொல்லப் புகுந்தாலும் தெரிந்துகொள்வாரில்லை. கொடி கட்டிக் கொண்டபடியால், இனி எல்லோரும் உண்மையை அறிந்துகொள்வார்கள். முன் உள்ளவர்கள் உண்மையைத் தெரியவொட்டாது மண்ணைப் போட்டு மறைத்து விட்டார்கள். இத்தருணம் ஆண்டவரும் தெரிவித்தார். தெரிவிகின்றார், தெரிவிப்பார். நீங்கள் எல்லவரும் உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள். இப்போது நான் சொல்லிவந்த பிரகாரம் ஜாக்கிரதையுடன் உண்மையறிவாய் விசாரம் செய்துகொண்டிருங்கள். அவசியம் இதற்குக் காரணமான தயவிருக்க வேண்டியது. அந்தத் தயவு வருவதற்கு ஏதுவான உரிமையும் கூட இருக்க வேண்டும். இப்படி இருந்து கொண்டிருந்தால் ஆண்டவர் வந்தவுடனே எல்லா நன்மையையும் பெற்றுக் கொள்வீர்கள். இது சத்தியம், சத்தியம், சத்தியம். இஃது ஆண்டவர் கட்டளை.

எல்லோர்க்கும் தாய், தந்தை, அண்ணன், தம்பி, முதலான ஆப்தர்கள் செய்யபட்ட உதவி எவ்வளவோ, அதற்குக் கோடி கோடிப் பங்கு அதிகமாக உதவி கொடுக்கும்படியான இடம் இந்த இடம். (சித்திவளாகம் என்கின்ற மேட்டுக்குப்பம்) இஃது ஆண்டவர் கட்டளை.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

திருச்சிற்றம்பலம்

பேருபதேசம் முற்றிற்று.

# திருமுகங்கள்

1. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த திருமுகங்கள்

2. புதுவை வேலு முதலியார்க்கு வரைந்த திருமுகங்கள்

3. மற்றைய அன்பர்களுக்கு வரைந்த திருமுகங்கள்

4. திருமுகக் குறிப்புகள்.

# 1. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு

## வரைந்த திருமுகங்கள்

## திருமுகம் 1 நட்பின் ஆர்வம்

உ சிவமயம்

*அருளறி வொழுக்கம் முதலிய சுபகுணங்களிற் சிறந்த சிரஞ்சீவி இரத்தின முதலியார்க்கு சிவ கடாக்ஷத்தால் தீர்க்காயுளுஞ் சகல சம்பத்தும் உண்டாவனவாக. தமது சுப சரித்திர விபவங்களை அடிக்கடி கேட்க விரும்புகின்றேன்.*

*மகா-ஸ்ரீ நாயக்கரவர்களுக்கு தற்காலமிருக்கின்ற தேக பக்குவத்தைத் தெரிந்து கொள்ளவேண்டு மென்கிற விசாரம்மிகவும் உடைய வனாகவிருக்கின்றேன். நான் அவசியம் இரண்டு அல்லது நான்கு மாதத்திற்குள் அவ்விடம் வருவேன். அதை நாயக்கரவர்களுக்கு தெரியப்படுத்த வேண்டும். அவசியம் வருவேன். தாங்களும் சாக்கிரதை யோடிருக்க வேண்டும்.*

*சிரஞ்சீவி நமசிவாயப் பிள்ளை அவ்விடம் படிக்க வேண்டு மென்று வருகின்றான். அவனை படிப்பின் விஷயத்தில் மாத்திரம் அடிக்கடி விசாரிக்கவேண்டும். தங்களுடையவும் நாயக்கருடையவும் க்ஷேம சரித்திரங்களை விரைவில் தெரிந்துக் கொள்ள வேண்டும். மனம் அவலங் கொள்ளுகின்றது. ஆகலில் தெரிவிக்க வேண்டும்.*

*சிரஞ்சீவி சிரஞ்சீவி*

இங்ஙனம்
*சிதம்பரம் இராமலிங்கம்*

இஃது சிரஞ்சீவி இரத்தின முதலியா ரவர்களுக்கு கொடுப்பது.

---

## திருமுகம் 2 இல்வாழ்வான் இயல்பு 31-5-1858

உ சிவமயம்

*சிரஞ்சீவி இரத்தின முதலியாருக்கு தீர்க்காயுளும் சகல சம்பத்தும் மேன்மேலுண்டாவதாக. இந்தக் கடிதம் கொண்டுவருகின்ற சி. குமாரசாமி பிள்ளை படிக்க*

வேண்டுமென்று விரும்பியிருக்கின்றபடியால், அவனுக்கு எந்த விதத்தில் படிப்பித்தால் படிப்பு வருமோ அந்த விதத்தில் படிப்பிக்கவேண்டும். சிரஞ்சீவி நமசிவாயத்துக்கும் இதுவே. இது விசயத்தில் விரித்து எழுதுவது உனக்கு மனம் சலிக்கும் என் இந்த மட்டில் நிறுத்தினேன். உன்னுடையவும் திருவேங்கட முதலியார் முதலானவர்களுடையவுமான விபவ க்ஷேமங்களை தெரிவிக்கவேண்டும். மேலும் தெற்கு வீட்டுக்கார அம்மாளுக்கு என் வந்தனத்தைக் குறிப்பிக்கவேண்டும். மற்ற சங்கதிகளைப் பின்பு தெரிவிக்கின்றேன். நானும் இன்னும் இரண்டு மாதத்தில் வருகின்றேன். வேணும் சிரஞ்சீவி.

சிரஞ்சீவி முருகப்பிள்ளை மாப்பிள்ளைக்கு சகலபாக்கியமும் புத்திர சம்பத்தும் தீர்க்காயுளும் மேன்மேலுண்டாவதாக. சிரஞ்சீவி குமாரசாமி அவ்விடம் வருகின்ற படியால் அவனுக்கு படிப்பும் முயற்சியும் ஊதியமும் உண்டாகின்ற வகை எவ்வகை-அவ்வகை ஆராய்ந்து கூட்ட வேண்டும். இதுவன்றி உனக்கு முக்கியம் தெரிவிக்க வேண்டுவது ஒன்று என்னென்றால்-பழமை பாராட்டலும் கண்ணோட்டம் செய்தலும் சுற்றந் தழுவலும் அவசியம் சமுசாரிக்கு வேண்டும் என்பது நீ மாத்திரம் அடிக்கடி கவனிக்க வேண்டும். நீ இப்போது முன் மாப்பிள்ளையல்ல, புது மாப்பிள்ளை, எம்போல்வார் மேல் ஞாபகமிராது, ஆதலால் ஞாபகப் படுத்தினேன். நானும்சில மாதத்தில் வருகிறேன். வேணும் சிரஞ்சீவி.

காளயுத்தி — இங்ஙனம்

வைகாசி 16 — சிதம்பரம் இராமலிங்கம்

இது சென்னை சிரஞ்சிவி. இரத்தின முதலியாருக்கு விடுக்கப்பட்டது.

## திருமுகம் 3 பஞ்சாக்கர உபதேசம்

உ சிவமயம்

### இது ரகசியம்

அன்பு, அறிவு, இரக்கம், ஒழுக்கம் முதலிய நற்குணங்களாற் சிறந்து நமது கண்மணிபோல் விளங்குகின்ற அன்புள்ள தங்களுக்கு சிவ பெருமான் திருவருளால் சிவஞானமும் தீர்க்காயுளும் சிந்தித மனோரத சித்தியும் மேன்மேல் உண்டாவதாக. நாளது வரையில் இவ்விடத்தில் ஸ்ரீ நாயக்கரவர்களும் யானும் க்ஷேமம். தங்களுடைய க்ஷேம விவபங்களை அடிக்கடி தெரிவிக்கவேண்டும். எனக்கு எழுதிய கடிதம் இரண்டும் வரக்கண்டு அறிந்தேன். அந்தக் கடிதங்களில் குறித்தப்படி இதன் அடியில் சில சிவசந்நிதான சாட்சியாகத் தெரிவிக்கிறேன்.

பிர்ம, விஷ்ணு, ருத்திராதிகளுடைய பதங்களும் அந்தக் கர்த்தாக்களும் அவர்களால் சிருட்டி, திதி, சங்காரம் செய்யப்பட்டு வருகின்ற தேகாதி பிரபஞ்சங்களும் அனித்தியம்-ஆகலில்-நித்தியமாகியும் என்றும் ஒரு தன்மை யுள்ளதாகியும் சச்சிதானந்த வடிவமாகியும் அகண்ட பரிபூரண வஸ்துவாகியும் விளங்கிய சிவமே நமக்குப் பொருள். அன்றியும், தாய், தந்தை, குரு, தெய்வம், சிநேகர், உறவினர் முதலியவர்களும் மேற்குறித்த சிவத்தின் திருவருளேயல்லது வேறில்லை. நாம் பல சனனங்களையுந் தப்பி மேலான இந்தமனிதப் பிறவி யெடுத்தது சிவத்தின் திருவருளைப் பெறுவதற்கே. எவ்வகைப் பிரயாசத்தினாலாவது அந்தத அருளை அடையவேண்டும். அந்த அருள் எவ்வகையால் வருமென்றால்-எல்லா உயிர்களிடத்திலும் தயவும் பிரபஞ்சத்தில் வெறுப்பும் சிவத்தினிடத்தில் அன்பும் மாறாது நம்மிடத்திருந்தால் அவ்வருள் நம்மை யடையும். நாமும் அதனை யடைந்து எதிரற்ற சுகத்திலிருப்போம். இது சத்தியம் இனி மேற்குறித்த சாதனத்தை நாம் பெறுவதற்கு சிவபஞ்சாக்ஷரத்தியானமே முக்கிய காரணமாக இருக்கிறது. ஆகலில், இடைவிடாது நல்ல மனத்தோடு அதனை தியானிக்கவேண்டும். அதனை

யிதனடியில் குறிக்கின்றேன். "ஓம் சிவாயநம"

"நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம வெனப் பெற்றேன்".1

"சிவாய நமவென்று சிந்தித்திருப்பார்க்கு அபாய மொருநாளு மில்லை"2

"நான் செய்த புண்ணியம் யாதோ சிவாயநம வெனவே ஊன் செய்த நாவைக் கொண்டோதப் பெற்றேன்".3

இதனைக் கண்டு தியானித்து வந்தால் பின்பு எல்லாம் விளங்கும்

தை 7 சிதம்பரம் இராமலிங்கம்.

இதை மற்றவர்களுக்கு வாசித்துக் காட்டப்படாது

இது சிரஞ்சீவி மகா ஸ்ரீ இரத்தின முதலியார் அவர்களுக்கு கொடுப்பது. சிவானுக்கிரகம் விளங்க.

---

## திருமுகம் 4 அருள் அறம் 27–5–1860

உ சிவமயம்

சிரஞ்சீவி நமது இரத்தின முதலியாருக்கு சிவ கடாக்ஷத்தினால் தீர்க்காயுளும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக. தாம் எழுதிய கடிதம் வரக்கண்டு அதிலுள்ளவைகளை அறிந்து கொண்டேன். பரம சிவத்தினிடத்தே மாறாது மனத்தை வைத்துக்கொண்டு புறத்தே

---

1. நானேயோ தவம்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய் இன்ன முதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்கு அருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. திருவாசகம் 553

2. சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்கு
அபாயம்ஒருநாளும் இல்லை-உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும். -நல்வழி 15 (ஔவையார்)

3. நான்செய்த புண்ணியம் யாதோ சிவாய நமவெனவே
ஊன்செய்த நாவைக் கொண்டோதப்பெற் றேன் எனை ஒப்பவரார்
வான்செய்த நான்முகத் தோனும் திருநெடு மாலுமற்றைத்
தேன்செய்த கற்பகத் தேவனும் தேவருஞ் செய்யரிதே... - திருஅருட்பா 2260

ஆயிரம் பெண்களை விவாகஞ் செய்துக் கொள்ளலாம். அன்றியும், விவாகஞ் செய்துக் கொண்டாலும் அதனால் வருத்தப்பட நம்மை சிவ பெருமான் செய்விக்க மாட்டார். ஆதலால் சந்தோஷமாக விவாகத்துக்குச் சம்மதிக்கலாம். தாம் தடை செய்ய வேண்டாம். எந்தக் காலத்தில்-எந்த இடத்ததில்-எந்த விதமாக- எந்த மட்டில் - எதை அனுபவிக்க வேண்டுமோ அதை அந்தக் காலம்- அந்த இடம்-அந்தவிதம்-அந்த மட்டு-பொருந்தப் பொசிப்பிக்கின்றது திருவருட் சத்தியிருந்தால், நமக்கென சுதந்தர மிருக்கின்றது. எல்லாம்திருவருட்சத்தி காரியமென்று அதைத் தியானித்திருக்கவேண்டும். உண்மை இது. இதைக்கொண்டு தெளிந்திருக்க வேண்டும்.

சிரஞ்சீவி சுந்தரப்பிள்ளை தமக்குக் கொடுக்கவேண்டிய ரூ.10 இன்னும் இரண்டு மூன்று மாதத்தில் கொடுப்பார். அவ்வளவு காலமும் சகித்திருந்து வாங்கிக்கொள்ளவேண்டும். தாம் சிவத்தியானத்தை விடாது, செய்யவேண்டியகாரியங்களைச் செய்து வரவேண்டும். வாழ்க வாழ்க.

ரவுதிரி வைகாசி 16 சிதம்பரம் இராமலிங்கம்

இஃது மகா ஸ்ரீ இரத்தின முதலியார் அவர்களுக்கு.

---

## திருமுகம் 5 இறை எண்ணம் எஞ்சாத உலகியல்

உ. சிவமயம்

சிரஞ்சீவி இரத்தின முதலியாரவர்களுக்கு நடராஜாஅனுக் கிரகத்தால் சிவக்கியானமும் தீர்க்காயுளும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக. தங்கள் மணக்கோலத்தை காணக்கொடுத்து வையாதவனாக விருந்தாலும் கேட்டு மகிழும்படி பெற்றேன். தங்கள் சுபசரித்திர விபவங்களை அடிக்கடி தெரிவிக்க வேண்டும். தாங்கள் சிவசிந்தனையை விடாமல் சர்வ சாக்கிரதையோடு லௌகிகத்தை நடத்தி வரவேண்டும் அயலார் யாராவது இவ்விடம் வருகின்றவர்களிடத்தில் ஒன்று அல்லது இரண்டு லாங் கிளாத்து பீசு வாங்கி அனுப்பினால் அதன் கிரயத்தை

பின்பு செலுத்திவிடலாம். இதற்கு பிரயாசம் வேண்டாம்.

இதற்குள் வைத்த கடிதங்களில் ஒன்று ம-ள-ள-ஸ்ரீ சூரி செட்டியார், சோமு செட்டியார் வசம் கொடுக்கவேண்டும். தாங்களே போய்க் கொடுக்கவேண்டும். கேட்டால் மனிதர் மூலியமாக வந்ததாகச் சொல்லவேண்டும். மற்றொன்று நாயக்கர்வாள் தாயார் இருக்கிற ராணிப்பேட்டைக்கு தபால் மூலமாக அனுப்பவேண்டும். நான் இன்னும் சில நாள் பொறுத்து வருகின்றேன். வேணும். இது ரகசியம்

இங்ஙனம்

ஆடி 16 சிதம்பரம் இராமலிங்கம்.

ஆறுமுகப் பிள்ளை அத்தான் கடிதம்-கிருஷ்ணப்ப நாயக்கன் அக்கிராரம், ராமாஞ்சு கட்டடத் தெரு, கிழண்டைவாடை செல்லப்ப முதலியார்க்கு கடிதம்சேர்க்கவேண்டும்.

இஃது நல்லண்ண முதலியார் தெரு சுப்பராய பிள்ளை

வீட்டுக் கெதிர்வீடு மஹாராஜஸ்ரீ இரத்தின முதலியாரவர்களுக்கு

## திருமுகம் 6

## ஆயிரம் பணக்காரர்களை அரைநிமிடத்தில் அதிட்டிக்கலாம்

உ. சிவமயம்

சிரஞ்சிவி இரத்தின முதலியாருக்கு அம்பலவாணர் அனுக்கிரகத்தினால் தீர்க்காயுளுஞ் சிவக்யானமும் சகல சம்பத்தும் மேன் மேலுண்டாவதாக. தமது சுப விபவங்களும், திருவேங்கடமுதலியார் சுப சரித்திரங்களும் அடிக்கடி கேட்க விரும்புகிறேன். இங்ஙனம் யானும் நாயக்கரவர்களும் க்ஷேமம். தாம் முன்னர் எழுதிய கடிதமும் பின்னர் எழுதிய கடிதமும் அதன் பின்னர் பங்கியில் வரவிடுத்த வத்திரமும் அது அது வரத்தக்க காலங்களில் வரக்கண்டு கொண்டேன். வருத்தம் பாராது வரவிடுத்த ஒரு பீசும் ஒன்பது லக்ஷம் பீசுகளாகக்

கொண்டேன். இதுவே அமையும். இனி வருத்தம் எடுத்துக்கொள்ள வேண்டாம். பின்பு பார்த்துக் கொள்ளலாம். இது வன்றி என் பொருட்டு வேறு வகைகளாலும் பிரயாசமெடுத்துக் கொள்ளவேண்டாம். தாமாத்திரம் க்ஷேமமாக சிவானுக்கிரகத்தால் சலிப்பற நெடுங்காலம் வாழ்வுற நான் கண்டு களிப்பதே எனக்குப் போதுமான திருப்தி. இது உண்மை உண்மை. நான் சிலகாலஞ்' சென்று அவ்விடம் வருவதற்கு எண்ணங் கொண்டிருக்கிறேன். ஆனால் எமது ஆண்டவன் திருவுள்ளம் எவ்வண்ணமோ தெரிந்ததில்லை. ஆயினும், நான் அங்ஙனம் வருவதற்குள் தாம் இங்ஙனம் வருவதற்குக் கூடுமானகால நேரிடின்தாம் வரவும் நான் காணவும் ஆவலுள்ளவனாகவே இருக்கின்றேன். கூடுமான கால நேராவிடில் வரவேண்டுவ தில்லை. நான் வந்து காண்கிறேன். அன்றி தாம் சாக்கிர தையாக தமது தேகத்தை உபசரித்து வரவேண்டும். வரவுக்குத் தக்க செலவு செய்ய வேண்டும். இனி விசேடமான அலுவல் நேரிடுகிற பரியந்தம் இப்பொழுது நேரிட்டிருக்கின்ற அலுவலைப் பார்த்து வரவேண்டும். என் எண்ணத்தின்படி ஆண்டவர் விரைவில் தமக்கு விசேஷ சவுக்கியத்தை யுண்டுபண்ணுவார் என்கிற நம்பிக்கையை யுடையவனாக இருக்கிறேன். தாம் இடைவிடாது பரமசிவமே பொருளெனக் கொண்டுப் பஞ்சாக்கரத்தையே சிந்தித்து வரவேண்டும். நான் ள-ள- சோமு செட்டியார்க்குக் கடிதம் எழுதவே மாட்டேன். அவர் கல்யாணத்துக்கு எனக்கொரு கடிதம் எழுதினார். அதற்குப் பதிலாகவும், அவர் அன்பை சோதிக்கும் பொருட்டாகவுமே எழுதி தம்மாற் கண்டு கொண்டது. இவரைப்போல் ஆயிரம் பணக்காரர்களை அரை நிமிடத்தில் அதிட்டிக்கலாம். நமக்கு இவர்களெல்லாம் ஒருதிரணமாகத் தோற்றுகின்றார்கள். இவர்கள் லக்ஷியம் வேண்டுவதில்லை. நாம் சிவ பெருமான் திருவடிகளுக்கு அடிமையானோம். நமக்கு ஒரு விதத்தாலுங் குறைவில்லை. இது உண்மை. சிரஞ்சீவி சிரஞ்சீவி.

சிதம்பரம் இராமலிங்கம்.

இஃது சென்னப் பட்டணம் பெத்து நாயக்கன்பேட்டைஏழுகிணற்றண்டை வீராசாமிப் பிள்ளை தெருவில் 38-வது கதவு நெம்பர் வீட்டில்ஸ்ரீ இரத்தின முதலியாரவர்களுக்குச் சேர்ப்பிக்கவேண்டும்..

## திருமுகம் 7 சாதுக்கள் சார்பு 3–9–1860

வ. சிவமயம்

நற்குணங்களிற் சிறந்து சிவானுபவ விருப்பத்திற் சித்தத்தை வைத்து நமது கண்மணிபோல் விளங்கிய சிரஞ்சீவி இரத்தின முதலியாருக்கு தீர்க்காயுளும் சிவக்கியானமும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவனவாக.

தமது சுப சரித்திர விபவங்களையும் ள-ள- திருவேங்கட முதலியார் முதலாகியவர்களது விபவங்களையும் கேட்ச விருப்ப முள்ளவனாக இருக்கிறேன்.

**செய்யுள்**

உய்வ தாமிது நங்குரு வாணையொன் றுரைப்பேன்
சைவ மாதிசித் தாந்தத்து மறைமுடித் தலத்தும்
நைவ தின்றியாங் கதுவது வாயது நமது
தெய்வ மாகிய சிவபரம் பொருளெனத் தெளிவீர்.

இங்ஙனம் சிவ பரம்பொருளை அனுபவித்தற்கு முக்கியம் ஜீவ காருண்யம், பாசவைராகம், சிவபத்தி. இவை கிடைத்தற்கு முதற் கருவி சாதுக்கள் சார்வு. ஆகலின் அவசியம் சாதுக்கள் சார்புவேண்டும். நல்லது, சாதுக்கள் சார்பு, தற்காலத்திற் கிடைப்பினுங் கிடையாவிடினும் நம்மை எழுபிறப்பென்னும் பெருங்கடலைக் கடப்பித்துப் பேரின்ப மென்னும் கரையிலேற்றும் சைவப் பதியிற்றெய்வப் புணையாக வாய்த்த திருமந்திரமாகிய பஞ்சாக்கரத்தை இடைவிடாது சிந்தித்துக் கொண்டும் சிவபிரான் திருவடிகளைப் பாவித்துக் கொண்டும் வருவது முக்கியத்தினும் முக்கியம். ஆகலில் நமக்கு இதுஅவசியம் பற்ற வேண்டிய காரியம். மற்றவைகளைக் குறித்து அறிவிக்கத்தமது நன்மனத்திற்கு நான் விரிக்க வேண்டுவதில்லை.

இனி-திரவிய விஷயத்தில் என்னைக் குறித்து விசேஷ முயற்சியெடுத்துக் கொள்ள வேண்டாம்......

அனுப்பும்படி நேரிட்டால் ரிஜிஸ்டர் செய்து அனுப்ப வேண்டும். நான் அவசியம் பங்குனி மாதத்திற்குள் வந்து சேருவேன். தாம்தேக முதலியவற்றை, பக்குவமாகத் திருவருள் சகாயத்தால் காத்தல் வேண்டும். இங்ஙன-ள-ள- நாயக்கர்வாள் க்ஷேமம். அவர்கள் தாயாரிடத்திலிருந்து ஏதாவது கடிதம் வரில்இங்கே அனுப்ப வேண்டும். வேணும் சிரஞ்சீவி

சிதம்பரம் இராமலிங்கம்.

இஃது சென்னப்பட்டணம் பெத்து நாயக்கன் பேட்டை ஏழுகிணற்றண்டை வீராசாமிப் பிள்ளை தெருவில்ள-ள சுப்பராயபிள்ளையவர்கள் வீட்டுக்கு எதிர்வீடு ஸ்ரீ இரத்தின முதலியார்அவர்களுக்குச் சேர்வது. ×

## திருமுகம் 8 அபேதநேயம் 16-9-1860

உ. சிவமயம்

அன்பு, அறிவு முதலிய நற்குணங்களிற் சிறந்து சிவ நேசத்தான் மேம்பட் டெமது கண்மணி போன்று விளங்கிய சிரஞ்சீவி இரத்தின முதலியாருக்கு சிவக்கியானமும் தீர்க்காயுளும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக.

அவ்விடத்திய சுபசரித்திர விபவங்களை அடிக்கடி கேட்க விரும்புகிறேன். தாம் ரிஜிஸ்டர் செய்வித்து அனுப்பிய கடிதமும் அதற்குள் அடங்கிய இருபத்தைந்து ரூபாய் நோட்டும் தாமசப் படாமல் வந்துசேரப் பெற்றுக் கொண்டேன். இது விஷயத்தில் தமக்கு விசேஷம் பிரயாசம் நேரிடச் செய்கிறேன். ஆயினும் அந்தப் பிரயாசம் சிவகடாக்ஷத்தால் நேரிட்டதாகலின் பின்பு தமக்கும் எனக்கும் தடைபடாத நிம்மதியையும் சத்துவ சந்தோடத்தையும் உண்டுபண்ணு மென்கிற நிச்சயத்தினால் நாணாவது தெரிவிக்க நேரிட்டது. ஆனால் இது குறித்து விசேஷ முயற்சியும் பிரயாசமும் தமக்கு நேரிடுமே என்ன செய்வது என்கிற விசாரமும் ஒரு பக்கம் உடையவனாகவே யிருக்கிறேன். இனி வேறு வகையாற் பலவாக விரிப்பதென்ன? நானே தாமாகவும் தாமே நானாகவும் பழமை தொட்டு வந்த அபேத நேயத்தை எண்ணி, மற்ற இடங்களில் கனவிலும்

× இது கூடலூரில் தபாலில் சேர்க்கப்பெற்ற தேதி 3. 9. 1860.

லக்ஷியஞ் செய்து குறிக்கப்படாத குறிப்பை தம்மிடத்தே குறித்தேன். இது எம்பெருமானுக்கும் சம்மதமாக இருக்கும். ஆகலில் தமக்கும் சம்மதமாக இருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கின்றேன். இவை தாம் வாங்குகிற இடமும் வாங்குகிற வகையும் அதற்கு எல்லையிட்டுக்கொண்ட வண்ணமும் மற்றவைகளையும் தெரிவிக்கவேண்டும். இவ்விடத்தில் ம -ள -ள ஸ்ரீ நாயக்கர் அவர்களும் யானும் மற்றவர்களும் க்ஷேமம்.

இங்ஙனம்

புரட்டாசி 2 சிதம்பரம் இராமலிங்கம்.

இஃது சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன் பேட்டை ஏழு கிணற்றுக்கு அடுத்த கிழண்டை வீராசாமிப் பிள்ளைத் தெருவில் சுப்பராயப் பிள்ளையவர் வீட்டுக்கு எதிர்வீட்டில்இருக்கும். ஸ்ரீ இரத்தின முதலியார வர்களுக்குக் கொடுப்பது சரூர் சரூர்

## திருமுகம் 9 அமைதி இன்மை

உ சிவமயம்

அன்பு, அறிவு, தயவு, முதலிய நற்குணங்களிற் சிறந்து எனது கண்மணி போன்று எனது இதயத்திருக்கும் சிரஞ்சிவி இரத்தின முதலியார்க்கு சிவக்கியானமுந் தீர்க்காயுளுஞ் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக.

தாம் அனுப்பிய கடிதமும் பங்கியில் அனுப்பிய புத்தகங்களும் வந்துசேர்ந்தது, சேர்ந்ததென்று தெரிவிப்பதற்கு அமைதியின்மையில் கால நீட்டித்தது. ஆதலின் அது குறித்து வேறு நினைக்க வேண்டா.

இவ்விடம் வருவதற்கு எவ்விதத்தாலும் தடையில்லலா திருந்தால் வரவேண்டும். அன்றி அலுவலால்- காலத்தால் - இடத்தால்-வேறு வகையால் சிறிது சிறிதுதடை நேரினும் தாம் இங்கு வரல் வேண்டா. யான் அவசியம் தை, மாசி அல்லது பங்குனி இவைக்குள் அங்கு ஓர் காரியம் பற்றி வருவதாக நிச்சயித்திருக்கின்றேன். ஆகலில் தடையுண்டாயின் வருதல் தவிர்க. இன்றாயின் வருக. இங்ஙனம் யானும்

நாயக்கரவர்களும் மற்றவர்களும் க்ஷேமம். தமது சுப சரித்திரங்களும் திருவேங்கட முதலியார் சுப சரித்திரங்களும் அடிக்கடி வெளிப்படுத்துக.வேணும் சிரஞ்சீவி.

கார்த்திகை 26 சிதம்பரம் இராமலிங்கம்.

இஃது சிரஞ்சீவி இரத்தின முதலியார் அவர்கட்கு.

## திருமுகம் 10 நிர்ப்பந்த ஏற்பாடு 30-12-1860

உ சிவமயம்

நற்குணங்க ளெல்லாவற்றிற்கும் இடனாகிய நன்மனக் கருவியொடு எனதுஇதயதிடைவிடாது இருக்கின்ற சிரஞ்சீவி இரத்தின முதலியாரவர்கட்கு சிவானுக்கிரகத்தால் தீர்க்காயுளும் சிவஞானமும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக.

நாளது வரையில் இவ்விடத்தில் யானும் நாயக்கரவர்களும் க்ஷேமம். தமது சுபசரித்திரங்களைக் கேட்க ஆசையுள்ளவனாக இருக்கிறேன். எனக்கும் நாயக்கரவர் களுக்கும் தபால் மார்க்கமாகத் தாம் அனுப்பிய கடிதங்கள் வந்துசேர்ந்து சங்கதிகளை தெரிந்து கொண்டேன்.

நான் சென்னபட்டணம் விட்டு இவ்விடம் வந்த நாள் தொடங்கி நாளது வரையில் பாடிய பாடல்கள் பல. அவைகளை முழுவதும் எழுதி வைக்க வேண்டு மென்கிற இலக்ஷியம் எனக்கு இல்லாமையால் அப்படி அப்படி சிதறிக் கிடக்கின்றன... ஆயினும் அவைகளைச் சேர்ப்பிக்க சுமார் இரண்டு மாதம் பிடிக்கும். ஆதலால் நான் பங்குனி மாதம் அவசியம் வருகிறேன். வரும்போது கொண்டு வருகிறேன். இது உண்மை. எவ்விதமாவது 2 மாதத்திற்குள் தமது இடத்தில் இருக்கச் செய்கிறேன். குமாரசாமி பிள்ளை, சண்முகப் பிள்ளை, ரெட்டியார் இவாள் இடங்களில் தற்காலம் இருகின்ற பாடல்கள் சுமார் இருபது உட்பட்டதாகவே இருக்கும். வெளிப்பட்ட பாடல்கள் பலபல. ஆகலால் மன்னிக்கவேண்டும்

அன்புள்ள என் கண்மணிபோன்றதாம் இனி இதனடியில் எழுதுகின்ற வண்ணம் செய்ய-பிரார்த்திக்கிறேன்.

அதாவது இந்தப் பாடல்கள் பங்கியில் அனுப்பி என்னிடஞ் சேர்கின்ற பரியந்தம் நான் ஒருவேளை போசனந்தான் செய்வேன் என்று எழுதியதைப் பார்த்தபின்பு நான் சாப்பிடுகிற சாதம் உடம்பில் பொருந்தவில்லை. பட்டினி கிடந்தவனைப் போல இருக்கிறேன். ஆதலால் என்னை நிம்மதியுள்ள வனாக்க எண்ணங் கொண்டு ஒருவேளை போசனங் கொள்ளுகிற நிபந்தனை நீக்கி உடனே தபாலில் எனக்குத் தெரிவித்தால் அல்லது, நான் சலிப்பைத் தவிரேன். ஒருவேளை போசனம் உள்ளவனாகவே இருப்பேன். இது சத்தியம். என்மேல் ஆனை. தாம் மேற்குறித்த நிற்பந்த ஏற்பாட்டைத் தவிர்த்து உடனே எனக்குத் தொரியப்படுத்த வேண்டும். 2 மாதத்திற்கு பின்பு பாடல்கள் அவசியம்சேரும்.

மார்கழி 18 சிதம்பரம் இராமலிங்கம்.

இஃது சென்னபட்டணம் பெத்து நாய்க்கன்பேட்டைஏழு கிணத்துக்கு அடுத்த வீராசாமிப் பிள்ளைத் தெருவில் கலக்டர் கச்சேரி சுப்பராயப் பிள்ளைவர்கள் வீட்டிற்கு எதிர் வீட்டில் ரத்தின முதலியார்க்கு.

## திருமுகம் 11 தற்காலத்தில் சிதம்பரம் 20–3–1861

உ சிவமயம்

அன்பறி வொழுக்கத்தாற் சிறந்து நமது கண்கள் போன்று விளங்கிய சிரஞ்சிவி இரத்தின முதலியார்க்கு சிவானுக்கிரகத்தால் தீர்க்காயுளும் சகல சம்பத்தும் சிவக்கியானமும் மேன்மேல் உண்டாவனவாக இங்கு. நாயக்கரவர்களும் யானும் க்ஷேமம். அங்கு தமது சுபசரித்திரவிபவங்களை அடிக்கடி கேட்க விரும்புகின்றேன்.

தாம் மாசி மாதம் 24 வரைந்து விடுத்த கடிதம் பங்குனி மாதம் 2 ஆம் தேதி காணப்பட்டது. அக் கடிதத்திற் குறித்த வண்ணம் சிதம்பரத்தில் வசிப்பது சம்மதமானாலும் இதுவிஷயத்தில் வசிப்பது சம்மதமின்று. ஏனெனில் சிதம்பரத்தில் பச்சையப்ப முதலியார் இஸ்கூல் கிரமமல்லாததாகத் தற்காலத்தில் காணப்படுகிறது. அன்றியும் அவ்வலுவல் இராஜாங்க சம்பந்த அலுவலாக விருந்தால்

நன்றாக விருக்கும்.. அவ்வாறின்றி ஒருமையில்லாத சில இந்துக்கள் சம்பந்தமானதாக இருக்கின்றது. சிதம்பரம் தற்காலத்தில் நமது உயிர்த் துணைவராகிய நடராஜப் பெருமானைப் பற்றி நாம் போவதற்கும் இரண்டொரு தினம் இருப்பதற்கும் தக்கதே யன்றி வேறொரு வகையாலுந் தக்கதாகத்தோன்றவில்லை. ஆயின் அது கலிகால வண்ணம். ஆகலின் இதனடியில் எழுதுஞ் சிலவரிகளிற் குறித்த வண்ணத்தை முழுதும் நம்ப வேண்டும். அதாவது நான் இந்த மாசக் கடையிலாவது சித்திரை மாத முதலிடை கடையிலாவது அவ்விடம் வருவேன். வந்த பின்பு என்கருத்தை வெளிப் படுத்துகிறேன். எந்த விதத்தாலும் தாம் என் சமீபத்தி லிருக்கவேண்டு மென்றே இரவும் பகலும் எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றேன். என் பிரார்த்தனைப் பிரகாரம் இன்னுஞ் சில காலத்துள் கூட்டுவிப்பார். இதற்குச் சந்தேக மிராது. ஆதலின் அங்கு நான் வருமளவும் சகித்திருக்க வேண்டும். சிவ பஞ்சாக்கரத்தை சதா கருத்தில் வைத்துக் கொண்டே காரியங்களை நடத்த வேண்டும். எவ்வகையிலும் என் தேகம் இருந்தால் சமீபத்திலிருக்கும்படி சிவானுக் கிரகத்தால் செய்துக்கொள்ளுவேன். தாம் இது குறித்து சலனப்பட வேண்டாம். தேக முதலான கருவிகளைப் பக்குவமாகப் பாராட்டிக் கொண்டு வரவேண்டும். மேற் குறித்தபடி வருகிறேன். விண்ணப்பக் கலிவெண்பா, நெஞ்சறிவுறுத்தல் இவைகளை அங்கிருந்து இங்கு வந்திருந்து பிரயாணப்பட்டங்கு வருகின்ற பெரிய தமக்கையார் வசத்தில் சுமார் ஒரு மாதமாயிற்று, கொடுத்தனுப்பினேன். அவாள் மத்தியில் கருங்களவால் கையில் மெய்யில் உள்ளவைக ளெல்லாம் இழந்து விட்டதாகக் கேள்விப்பட்டேன். அவாள் இன்னு மத்தியில் பந்துக்களிடமாக இருக்கின்றார்கள் போலக் காணுகின்றது. ஆகலின் அவர்கள் அவ்விடம் வந்தவுடன் மேற்படி புத்தகங்களைச் சேர்ப்பிப்பதும் அல்லாததும் உடனே அவசியம் எனக்குத் தெரியப்படுத்தவேண்டும். மற்ற சங்கதிகளெல்லாம் நான் அவ்விடம் வந்த பின்பு பேசிக்கொள்ளலாம். சிரஞ்சிவி சிரஞ்சிவி.

பங்குனி 6 இங்ஙனம்

சிதம்பரம் இராமலிங்கம்

இஃது சென்னப்பட்டணம் பெத்து நாயக்கன்பேட்டை ஏழுகிணற்றுக்குக் கிழண்டை வீராசாமிப்பிள்ளை வீதியில் சுப்பராயப் பிள்ளையவர்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் ஸ்ரீ இரத்தின முதலியார் அவர்களுக்கு. ஜரூர் ஜரூர்

## திருமுகம்12

## பாலும் நீரும் போலும் பார்ப்பன சினேகம் 7–5–1861

என் மனத்தில் இடைவிடாது விளங்குகின்ற குணமணியாகிய சிரஞ்சீவி இரத்தின முதலியாருக்கு சிவானுக்கிரகத்தால் தீர்க்காயுளுஞ் சிவக்கியானமுஞ் சகல சம்பத்தும்மேன்மேல் உண்டாவதாக. தமது சுப சரித்திர விபவங்களை அடிக்கடி கேட்க விருப்ப முள்ளவனாக இருக்கின்றேன். நான் வைகாசி மாதம் 30ஆம் தேதிக்குள்ளே அவ்விடம் வருவேன். அவசியம் தியாகராஜப் பெருமானையும் உன்னையும் காண வேண்டும் என்கிற விருப்பம் விசேஷ முள்ளவனாகவிருக்கிறேன் ஆதலால் வருவது நிச்சயம் நிச்சயம். இது அன்றி பகவத் பத்தியிற் சிறந்தவராகிய வரதாசாரிய சுவாமிகள் திருவையிந்திரபுரத்துக்கு வந்ததாகக் கேள்விப்பட்டேன். அந்த சுவாமிகளைச் சென்னப் பட்டணத்தில் தாம் கண்டால் ஒன்று சொல்லவேண்டுவது. அதென்ன வெனில்

பாலும் நீரும் * போலும் பார்ப்பன சிநேகம் என்று நான் தெரிவித்தாகத் தெரிவிக்கவேண்டும். வேணும் சிரஞ்சீவி

சித்திரை 27 இங்ஙனம்

சிதம்பரம் இராமலிங்கம்

இஃது சென்னப்பட்டணம் பெத்த நாய்க்ன் பேட்டை ஏழுகிணற்றண்டை வீராசாமிப் பிள்ளை தெருவு, கலக்டர் எதிர்வீடு ஸ்ரீ முதலியார் இரத்தினமுதலியார் அவர்கட்கு

* நீயும் நானும் ஓர் பாலும் நீருமாய்
நிற்க வேண்டினேன் நீதி ஆகுமோ
சாயும் வன்பவம் தன்னை நீக்கிடும்
சாமி யேதிருத் தணிகை நாதனே. - திருஅருட்பா 138

## திருமுகம் 13 அருந்தல் பொருந்தல் அளவு 10-6-1861

உ. சிவமயம்

அன்பு,அறிவு,தயவு,சிவநேய முதலிய நற்குணங்களிற் சிறந்து என்னிரு கண்மணி போன்றென்னிதயத்திருக்கும் சிரஞ்சிவி இரத்தின முதலியாரவர்கட்கு சிவானுக்கிரகத்தால் தீர்க்காயுளும் சிவக்கியானமும் சௌக்கிய தேகமும் சகல சம்பத்து மேன்மேலுண்டாவனவாக. தமது சுப சரித்திர விபவங்களை அடிக்கடி கேட்க விரும்புகிறேன்.

தாம் வைகாசி மாதம் 19 ஆந் தேதியில் வரைந்துவிடுத்த கடிதம் ஷை மாதம் 30ஆந்தேதியில் என்னிடம்வரப்பெற்றேன். அவ்வளவு காலம் கடிதம் தாமசப் பட்டதற்குக் காரணம் கடிதம் மேல்விலாசத்தில் கூடலூர் ஜில்லா தபால் ரயிட்டர் என்று குறித்திருந்தது பற்றி. ஆகலில் இனிவரைந்தனுப்பும்போது பரங்கிப்பேட்டை தபால் ரயிட்டர் பார்வையிட்டு புவனகிரியைச் சார்ந்த கருங்குழி என்று வரையவும். அன்றி, கூடலூர் ஜில்லா தபால் ரயிட்டர் மேல் விலாசம் பார்வையிட்டு மேற்படி துக்குடியைச் சார்ந்த கருங்குழியிலிருக்கும் என்றாவது வரையவும். இவ்விருவகையுமில்லாமல் கூடலூர் ஜில்லா தபால் ரயிட்டர் மேல் விலாசம் பார்வையிட்டு புவனகிரியைச் சார்ந்த கருங்குழி என்று வரைந்தால் நாட் செல்வதுமன்றி தபால் கூலியும் இரட்டிக்கும். இது அறிக. இனி,

தாம் தம்முடைய தேகத்தை சாக்கிரதையாக உபசரித்து வரவேண்டும். சாக்கிரதை என்பது அருந்தல் பொருந்தல்களில் மிதபோசனம் மிதபோகம். மிதபோஜனமாவது-கோபம்-விராகம்- அலக்ஷியம் - முயற்சி - விரைவு இவை முதலிய ஏதுக்களால் குறைத்தல்-விருந்து சுவைவிருப்ப, முதலிய ஏதுக்களால் ஏற்றல் இல்லாமல் சமமாகப் பொசித்தலாம். மிதபோகமாவது அதிபரிச்சயம் அதிஞாபக முதலிய ஏதுக்களால் இரவு பகல் தோற்றாது பொருந்தல். விவகாரம் அலக்ஷிய முதலிய ஏதுக்களால் பொருந்தா திருத்தல். இவை இரண்டு மின்றி மாதத் திரண்டுவிசை மாதரைப்புணருவது என்றபடி பொருந்தலாம். ஆகலின் இவ்வாறு நடத்தவேண்டும்.

---

"இது கூடலூரில் தபாலில் சேர்க்கப்பெற்ற தேதி 3-9-1860

இனி மருந்து கொள்ளும்போது நெய் நல்லதாகக் கொண்டு சாப்பிடவேண்டும் பாலும் அவ்வாறே. நான் தம்முடைய தேகத்திற்கு விசேஷம் திடம் உண்டாகத்தக்க அவுஷதங் கொண்டு வருவேன். அது பரியந்தம் முன் குறித்தபடி சாக்கிரதையாக இருக்கவேண்டும். நமக்கு எவ்விதத்தாலும் சிவ பெருமான் திருவடியும் சிவபஞ்சாட்சரியும்அன்றிவேறு சகாயில்லை. ஆகலில் அவைகளை இடைவிடாது சிந்திக்க வேண்டும். நாயக்கரவர்களுடைய சம்மதமும் இது. வேணும்.சிரஞ்சிவி.

வைகாசி 30 சிதம்பரம் இராமலிங்கம்

இஃது சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன் பேட்டைஏழு கிணற்றுக்கு அடுத்த வீராசாமிப் பிள்ளைத் தெரு கலெக்டர் கச்சேரி சுப்பராயப் பிள்ளைஅவர்கள் வீட்டிற்கு எதிர்வீடு ஸ்ரீ இரத்தின முதலியார்அவர்கட்கு சரூர் சரூர் சரூர்

---

## திருமுகம் 14 சிவபஞ்சாக்ஷரத் தியானம் 5-9-1861

உ சிவமயம்

அன்பு, அறிவு, தயவு முதலிய சுபகுணங்களைப் பூண்டு எமது கருத்தினுங் கண்ணினும் உவந்து உலாவுகின்ற சி. இரத்தின முதலியார் அவர்கட்கு சிவானுக்கிரகத்தால் தீர்க்காயுளும் சிவக்கியானமும் சகல சம்பத்தும் மேன்மேல் உண்டாவதாக.

தமது சுப சரித்திரவிபவங்களை அடிக்கடி கேட்க விரும்புகின்றேன். தாம்இவ்விடம்விட்டுப் பிரயாணப் பட்டநாள் தொடங்கி நாளது வரையில்தமது சுப சரித்திர வண்ணம் இவ்வண்ண மென்று விசேஷம் தெரிந்து கொள்ளாதவனாக விருக்கிறேன். ஆதலால் அதை தெரிவிக்கவேண்டும். நான் புரட்டாசி மாதம் அவ்விடம் பிரயாணயப்பட்டு வருவதாக ஓர் காரியம் பற்றி நிச்சயித்திருந்தேன். அந்த நிச்சயத்துக்கு ஓர் தடை நேரிட்டது. என்னெனில் நான் புசித்து வருகின்ற கிரகத்தில்

யோக்கியராகவும் தலைவராாகவும் இருந்த ரெட்டியார் நாளது மாதம் உயஉ பதவி யடைந்தார். ஆதலால் உடனே வருவது ஓர் வகைநிந்தைக் கிடமாகஇருக்கின்றது. அதனால் மார்கழி மாதம் பிரயாணயப் படுவதாக எண்ணுகின்றேன். எம்பெருமான் எண்ணம் எப்படியோ தெரிந்ததில்லை. இவ்விடத்தில் மழையில்லாமல் அதிக வெப்பமாக இருக்கின்றது. அவ்விடத்திலெப்படி யிருக்கின்றதோ தெரிந்ததில்லை. தாம் சிவபஞ்சாக்ஷர தியான பரராகி சதா சந்தோஷ சகிதராக இருக்க வேண்டுவதே என்வேண்டுகோளாக விருக்கின்றது. தேக முதலிய கருவிகளைத் தக்க வண்ணம் நடத்தி வர வேண்டுகிறேன். திருவேங்கட முதலியார் முதலானவர்களுக்கும் வந்தனம் குறிப்பிக்க வேண்டும். சிரஞ்சீவி சிரஞ்சீவி. இங்கு நாயக்கரவர்கள் க்ஷேமம்.

துன்மதி வருடம் ஆவணி 22 சிதம்பரம் இராமலிங்கம்

இஃது சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை ஏழு கிணற்றுக்கு அடுத்த வீராசாமிப் பிள்ளை தெரு கலக்டர் கச்சேரி சுப்பராயப்பிள்ளை வீட்டுக்கு எதிர்வீடு ஸ்ரீ இரத்தின முதலியாரவர்களுக்கு.

## திருமுகம் 15 வரையாது வரைதல்

உ. சிவமயம்

அற்புத குணாகரமாகி யெம்முள்ளத்த மர்ந்த சிரஞ்சீவி இரத்தின முதலியார்க்கு தீர்க்காயுளும் சிவஞானமும் சகல சம்பத்துமேன் மேல் உண்டாவனவாக. அவ்விடத்திய சுபசரித்திரங்களை அடிக்கடி கேட்க விருப்பமுள்ளவனாக விருக்கிறேன். இதனடியில் வரைகின்ற சில வரிகளின் கருத்து மனத்தைச் சலிப்பிக்கு மென் றுணர்ச்சி தோற்றினும் வரையாது வரைகின்றேன்.

ஸ்ரீ நாயக்கரவர்கள் தங்கள்தாயார் பரமபத மடைந்து விட்டதாகத் தபாலில் கடிதம் வரக்கண்டு அதனிமித்தம் ஆண்டு அடைகின்றனர். முன்போல் பிரயாசம் எடுத்துக்கொண்டு இருபது ரூபாய் கடன் வாங்கத்தக்க இடத்தில் வாங்கிக் கொடுத்தால் நான் அவ்விடம் வந்தபின் அவ்விடத்தில்

